# முன்னுரை

"அந்த அம்மாவை நம்பிக் கொண்டு வந்திருக்கிறேன். அவள் என்னை ஏமாற்ற மாட்டாள். நீங்கள் நிச்சயம் எழுதத்தான் போகிறீர்கள்" என்று வெகு திடமாகக் கூறினார் தம்பி முரளி — "மங்கையர் மலர்" ஆசிரியர்.

"அந்த அம்மா" என்று அவர் காட்டியது சுவரில் சித்ர உருவில் திகழ்ந்த ஸ்ரீ காமாக்ஷி மஹா திரிபுர ஸுந்தரிதான்! நிஜமான ஒரே அம்மாவான அவளைத் தவிர எவரால் ஒருவருக்கு அத்தனை நம்பிக்கையுறுதி தர முடியும்?

பத்திரிகைகளுக்குத் தொடர் எழுதப் பல காரணங்களால் பிரியப்படாத என்னுடைய பிடிவாதத்தை அந்த வார்த்தைகள் அப்போதே பிடித்துத் தள்ளி விட்டன.

"எழுதுகிறேன்" என்று ஒப்புக் கொண்டேன்.

எதைப்பற்றி எழுதுவது என்று கொஞ்சங்கூட யோசிக்கவிடவில்லை அம்மா.

"மாதர் பத்திரிகை நடத்துகிறாய், அந்த ஸ்ரீமாதா கதையே எழுதுகிறேன். 'லலிதோபாக்யான'த்தைச் சுருக்கமாகத் தருகிறேன்" என்றேன்.

இப்படியாக நாமகரணமும் அந்தக் கணமே அதுவாகவே நடந்து விட்டது!

சுமார் முப்பதாண்டுகளுக்கு முன் என்னை வலிய ஆட்கொண்ட லலிதை, தன் சரிதையை இப்படியாகத் தானே இப்போது ஏதோ ஒரு ரூபத்தில், ஏதோ சிறிதளவுக்கு என்னால் வெளிவரச் செய்தாள்.

ஆட்கொண்டது லலிதையேதான். அவளுடைய சரிதை அல்ல. அந்தச் சரிதை என்னவென்பதுகூட அப்போது எனக்குத் தெரியாது.

நாம் பலரிடம் மிகுந்த அன்பு கொள்கிறோம். அவர்களுடைய வாழ்க்கை வரலாற்று விவரம் தெரிந்து, அதனாலா இந்த அன்பு உண்டாகிறது? அவர்களது வாழ்க்கை விவரம் எப்படியானாலும், அவர்கள் நம்மிடம் பழகும் விதத்தாலோ, அல்லது காரணம் தெரியாத ஓர் ஈர்ப்பினாலோதானே நாம் பெரும்பாலும் அன்புறவுகள் கொள்கிறோம்? அன்னையின் 'வாழ்க்கை நூல்' எனத்தக்க லலிதோபாக்யானம் அறிந்தபின் அதனால் என் அன்பு வளர்ந்ததாகச் சொல்வதற்கில்லை. இன்னும் சொல்லப் போனால், பரம தயாகரியாக, ஸர்வகாலமும் உடனிருந்து காப்பவளாக அருமை செய்த அந்த அன்பன்னையை பண்ட ஸம்ஹாரிணி என்பதாக ஓர் அஸுரனின் அழிவைச் செய்தவளாகவே பரக்க விவரிக்கும் புராணக் கதை அவளது இனிமையெழிலை ஓரளவு மறைத்ததாகவும் பட்டது. நம்மை வாழ்விக்கும் ஒரு தீஞ்சுவை ஔஷதத்தின் அந்த மதுர ருசியை நாம் அதிகம் காணாமல், நோய்க் கிருமிகளை அது எப்படி அழிக்கிறது என்பதையே வெகுவாகப் பார்ப்பதில் நிறைவு ஏற்பட முடியுமா?

இந்தப் புராணம் மட்டுமல்ல. ஸாக்ஷாத் ராமாயண, பாகவதங்களுங்கூட ராமனின் ப்ரேமையை, கண்ணனின் காதலை அறிந்தவர்களுக்கு ஓரளவு இதே போலத்தான் இருக்கும். அன்பை மட்டுமின்றி இதர பல தர்மங்களையும், சாமானிய மானுட இயல்புகளையுங்கூடப் புராண புருஷர்கள் உருவகித்து நடத்திக் காட்டியதால் அவர்களது கதைகள் இந்த எல்லாவற்றையும் விவரிக்க வேண்டியுள்ளது. வீர பராக்ரமம் காட்டி அதர்ம சக்திகளை அழிப்பது அவர்களது ஒரு முக்யச் செயலாயிருப்பதால் இந்த அம்சம் கதைகளில் நிறைய இடம் பெற வேண்டியுள்ளது. (புராண நாயக-நாயகியரின் ஸம்ஹாரப்

பணி விரிவே விளக்கப் படுவதற்குக் காரணம் நூலில் 64-ம் பக்கத்தில் காணலாம்.) இவற்றில், விந்தையாக, அன்பு அம்மாவைக் குறித்தவையான 'துர்கா ஸப்தசதீ'யிலும், 'லலிதோபாக்யான'த்திலுமோ மிகவும் பெரும் பகுதி யுத்த லீலையாக உள்ளது! "அம்மாதானே?" என்று நாம் எப்படி வேண்டு மானாலும் வாழலாமென்று இருந்துவிடாமல், அற வழி நீங்கினால் அவள் எப்படி மறம் காட்டித் தண்டிப்பாள் என்று உணர்ந்து நம்மைத் திருத்திக் கொள்ள வழியாகத்தானோ என்னவோ?

முன்பு 'துர்கா ஸப்தசதீ'யை 'நவராத்ரி நாயகி'யாகத் தரச் செய்தாள். இங்கே 'லலிதோபாக்யான'த்தை 'ஸ்ரீமாதா'வாக வரவைத்திருக்கிறாள்.

உருவமும் பெயருமற்ற மஹாசக்தி பற்பல தெய்வத் திருவுருவங்களும் திருநாமங்களும் கொண்டு, அவை ஒவ்வொன்றுக்கும் ஓர் அற்புத சரிதமும் படைத்துத் திருவிளையாடல் புரிந்திருக்கிறது. அவற்றில் இங்கு ஸ்ரீ லலிதா தேவியின் திவ்ய லீலைகளைப் பார்க்கப் புகுகிறோம். ராஜராஜேச்வரி என்றும், த்ரிபுரஸுந்தரி என்றும், காமேச்வரி - காமாக்ஷி - காமகோடி என்றும் போற்றுவது இவளைத்தான். தச மஹா வித்யைகளில் 'ஸுந்தரி' இவளே. ஸ்ரீவித்யை என்று புகழ் கொண்டது இவளது உபாஸனா மார்க்கமே. ஸ்ரீசக்ரம் எனப் புகழ் கொண்டது இவளது யந்திரமே.

'ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்' இவளைக் குறித்தது தான் என்று சொல்லத் தேவையில்லை. ஸஹஸ்ரநாமத்தின் முதல் முப்பத்து மூன்றரை ச்லோகங்களில் இவளது மஹிமை, கேசாதி பாத வர்ணனை, (லலிதோபாக்யானம் விஸ்தாரமாகக் கூறுவதன் சுருக்கமே போன்ற) சரிதை ஆகியன இயம்பப்படுகின்றன. முடிவாகவும் இந்த ஸ்ரீசக்ரராஜ நிலயத்தினளை, திரிபுரஸுந்தரியை, சிவையை, சிவமும் சக்தியும் ஒன்றாக ஐக்கியமான உருவினளைச் சொல்லி, 'லலிதாம்பிகா' என்றே பூர்த்தி செய்திருக்கிறது.

இன்று வெகுவாகப் பரவி வரும் ஸ்ரீவித்யா மந்த்ர ஜபமும், ஸ்ரீசக்ர பூஜையும் நம் லலிதைக்கு மக்கட்குலத்தின் மீதுள்ள விசேஷ ஆளுகையைக் காட்டுகிறது.

பதினைந்தெழுத்து மந்திரமான பஞ்சதசாக்ஷரீயும், பதினாறு எழுத்துக் கோவைகளாலான ஷோடசீ மந்திரமும் இவளுக்கானவையே. 'மந்த்ர ராஜம்' எனப்படும் ஷோடசியைக் கொண்டு இவளையே 'ஷோடசீ' என்பர். என்றும் பதினாறு பிராயத்தினளாகத் திகழ்வதாலும் இவள் ஷோடசி. (பன்னிரண்டு இதழ்களுக்குப் பன்னிரண்டு அத்யாயங்களாகவே முதலில் உத்தேசிக்கப்பட்ட 'ஸ்ரீமாதா', பத்திரிகாசிரியர் விருப்பப்படி நீட்டப்பட்ட போது, தானாகவே பதினாறு அத்யாயத்தில்தான் முடிந்து, தானும் ஷோடசியாகியுள்ளது! அல்லது தன்னைக் கொண்டு அவளுக்கு ஷோடச உபசாரம் புரிந்துள்ளது!) பதினைந்தாவதான பூர்ண கலைக்கும் உச்சத்தில் அதற்கும் உயிர்தருவதாயுள்ள பூர்த்தி ஸ்தானமே பூர்ணிமா சந்திரனுள் குடிகொண்ட பூர்ணியான நம் தாய் ஷோடசி.

பராசக்தியின் பல வடிவங்களில் காளையன்னை கோர பயங்கரத்தின் எல்லையாயிருப்பவள். அவள் துர்கையின் ஓர் ஆவிர்பாவம்; மது கைடபாஸுரர் நாசத்திற்குக் காரணமானவள். அவ்வாறே அன்புக்கும் அழகுக்கும் எல்லையாயிருப்பவள் நம் காவியநாயகி. லலிதா என்ற பெயரே அதை லலிதமாகச் சொல்கிறது! காளியின் ஸாக்ஷாத் குழந்தை, ஏன், காளி மயமே ஆனவர் எனக் கூடிய ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஸகல தெய்வ உருவங்களையும் நேரே அநுபவித்துக் கூறியிருப்பதில், அம்பாளின் ஒவ்வொரு ரூப பேதமுமே அஸாதாரண எழில் படைத்தது தானெனினும் அவை எதுவும் ஷோடசியுடன் ஒப்புக்கு வர முடியாது என்று பகர்ந்திருக்கிறார். காளி வழிபாட்டுக்குரிய ஒரு பலஹாரிணி பூஜா தினத்தன்று அவர் தம் தாரத்தையே தாயாக ஆராதனை செய்தபோது, அந்த சாரதாமணி தேவியில் பரதேவியின் ஷோடசீ மூர்த்தத்தையே எழுவித்தார்.

சகல தெய்வமும், சேதன அசேதனமான ஸகலமுமே ஏகப் பரம்பொருள் எனக் கண்ட ஸ்ரீ சங்கர பகவத்பாதரும் தமது ஸ்ரீமடங்களில் ஸ்ரீசக்ரரூபத்தில் திரிபுரஸுந்தரி வழிபாட்டைத்தான் அமைத்திருக்கிறார். தம் துதிகளில் முடிமணியாக லலிதைக்கான 'ஸௌந்தர்ய லஹரி'யையே அளித்திருக்கிறார்.

பொதுவாக, வடநாட்டில் அன்னையின் உக்ர ரூபங்களான காளி-துர்க்கைகளே அதிக வழிபாடு பெற, தென்னாட்டில்தான் ஸௌம்ய ரூபங்களான த்ரிபுர ஸுந்தரி-புவநேச்வரியர் விசேஷமாக ஆராதனை பெறுகின்றனர்.

எந்நாட்டவர்க்கும் இறைவி தென்னாட்டுக்குச் சிறப்பாக லலிதையானதில் தமிழ் கொண்ட பூரிப்புத்தான் 'அபிராமி அந்தாதி'. நம் தாய்மொழியில் தாய்த் தெய்வத்தைக் குறித்துள்ள துதிகளில் தலையிடம் கொண்ட அந்த அந்தாதி த்ரிபுரஸுந்தரியைப் பற்றியதே.

தமிழகத்தின் பிரஸித்தமான தேவி ஆலயங் களிலும் நாற்புறமும் கோபுரங்களோடு அவள் மூலஸ்தான மூர்த்தியாக விளங்குவது லலிதையின் வடிவேயான காமாக்ஷி குடிகொண்டுள்ள காஞ்சி காமகோட்டம்தான் என்று ஸ்ரீ காஞ்சி மஹாஸ்வாமிகள் எடுத்துக் காட்டியிருக் கிறார்கள்.

அவளைப் பற்றிய புராணம் நமக்குத் தெரியாம லிருக்கலாமா? அதிலே அவளுடைய அன்பொன்றே முக்யமான இடம் பெறாது போனாலும், அவளுடைய தொடர்புடைத்து என்பதாலேயே அக் கதை நமக்கு உயர் நலம் பயக்கத்தானே செய்யும்?

அசுரனின் அழிப்பை விவரிப்பதால் 'லலிதோ பாக்யானம்' முழுதுமே லங்கா தஹனப் படலந்தான் என்றாகாது! அதில் ஸத்து வாய்ந்த கதையம்சம் உள்ளது. நேராகவும் நுட்பமாகவும் அநேக அறங்கள் விரவி உபதேசிக்கப்படுகின்றன. குணவியல்புகளும் காட்சிகளும் இலக்கிய நயத்தோடு வர்ணிக்கப்படுகின்றன.

இவ்வுபாக்யானத்தில் ஒரு இனிப்பான சிறப்பம்சம் லலிதா பரமேச்வரியையே இது முழு முதற் தெய்வமாகக் காட்டினாலும், ஏனைய கடவுளரின் பெருமையையும் நாம் உணருமாறு விருத்தாந்தம் நெடுகிலும் சூசனை செய்துகொண்டே போவதாகும்.

'ஏனைய கடவுளர்' என்பது அம்பிகையின் பிற வடிவங்களான சியாமளை, வாராஹி, பாலை ஆகியோரோடு மட்டும் முடியவில்லை; சிவ-சக்தியர் ஒற்றுமையைக் காட்டுவதோடுங்கூட முடியவில்லை. சக்தியையும் திருமாலையுமே ரஸமாக ஸமரஸப்படுத்தி நிறையக் கூறியிருக்கிறது. கதை சொல்வதே திருமாலின் ஓர் உருவான ஹயக்ரீவ பகவான்தான். அப்புறம், "எல்லாம் கதையாயிற்று" என்கிறாற் போல், அவுணர் படையைக் கதையாக மட்டுமே அம்பாள் நீறுபடச் செய்த முக்யமான ஸம்ஹார கட்டம் வருகிறது. (இதை நம் கதையே "கதா-வீசேஷ்க்ருத தைத்ய -ஸைந்யே!" என்று விஜய லலிதையை அமரர் போற்றிய ஸ்துதியில் கூறுகிறது.) அந்த கட்டத்தில் அந்த ஸம்ஹாரப் பணியில் பெரும் பங்கினைத் திருமாலின் தசாவதாரங்களின் மூலமே தேவி நடத்திக் கொள்கிறாள். அவளுடைய பத்து விரல்கள் வழியே தசாவதாரங்கள் வருகின்றன. "கராங்குளி நகோத்பந்ந நாராயண தசாக்ருதி:" என்று ஸஹஸ்ரநாமமும், "கராங்குளி நகோதய விஷ்ணு தசாவதாரே" என்று ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் கண்டா ராக நவாவரண க்ருதியிலும் போற்றும் இந்த லீலையில் எத்தனையோ உட்பொருள்கள் தோன்றுகின்றன.*

---

* உதாரணமாக : "கால தத்வம் தோன்றிய ஆதிப் போதில் பரம்பொருளின் ஸ்ருஷ்டித் திறம் கொண்ட விரல்களின் நுனியிலிருந்து ப்ரபஞ்சங்களின் பூர்ணக் கூட்டமைப்பும் வெளிப்பட்டது. (The whole complex of the universe rumbled from His creative finger tips at the beginning of time)" என்று கார்டினல் க்ரேஷியாஸ் கூறியிருப்பதன் தொடர்ச்சியாக, அதர்மத்தை அழிக்கவும் அதே விரல்கள் ஆக்க மூர்த்தியான திருமாலையே அவதாரமாக அனுப்பி வைக்கின்றன எனத் தோன்றுகிறது.

இவ்வாறு உள்ளர்த்தம் நிரம்பிய வெளிச் செயல்கள் பல நம் உபாக்கியானத்தில் உள்ளன.

இதற்கெல்லாம் மேலாகத் தாயின் தாய்மையையும் புராணம் காட்டத்தான் செய்கிறது.

அழிப்பினிடையிலும் அவளது ஆக்க அன்பு ஆங்காங்கு தெரியாமலில்லை; நடுநடுவே வரும் ரூப-குண வர்ணனைகள், அடியார்களின் துதிகள் ஆகியன லலிதையின் லலிதத்தைத் தெளிக்கவே செய்கின்றன.

அவளுடைய கதை என்று படிக்கையில் அவளைக் குறித்த ஏதேனும் ஓர் அம்சத்தில்தான் நினைவு படரும். அது எந்த அம்சமாயினும் அவளைக் குறித்தது என்பதால் புண்யம் கூட்டுவிப்பதுதானே? அதன் பயனாக அவளது அன்பிலேயே நினைவு நிலைப்படுவதிலும் முன்னேற முடியும்.

பெரும்பாலாருக்கு தெய்வத்திடம் வெறுமே அன்பாயிருப்பது அதிக காலம் முடிவதில்லை. அப்போது வேறு வெற்றுக் காரியங்களிலோ தவறுகளிலோ மனத்தை விடாமல் தடுக்கப் புராணக் கதைகளைப் படிப்பதும் கேட்பதும் உதவுகின்றன. அவற்றில் ஆங்காங்கே ஒளிரும் அன்பு ரச்மிகள் மனத்தில் பாவன இன்பத்தை ஊட்டுகின்றன.

இவ்வளவும் கூறுவது 'ஸ்ரீமாதா' எழுதியதற்காக எனக்கே நான் ஸமாதானம் சொல்லிக் கொள்ளத்தானோ என்று நினைக்கையில் சிரிப்பு வருகிறது. ஏனெனில் இது ஏட்டில் வெளிவந்தபோது வாசகர்களைப் பொறுத்த மட்டில் அவர்கள் எந்த சமாதானமும் கோராமலே இதனை வெகுவாக வரவேற்றிருக்கிறார்கள். முன்பே சொன்னாற்போல் பன்னிரண்டு அத்யாயங்களைப் பதினாறாக விரிக்குமளவுக்கு வரவேற்றிருக்கிறார்கள். "நம் அம்மா தொடர்பான ஒன்று" என்பதிலேயே மகிழ்ந்து மனம் திறந்து படித்திருக்கிறார்கள். அவளும் அத் திறப்பின்

வழி இன்பத் திருப்தியை உட்செலுத்தியிருக்கிறாள். அவ் வின்பத்தை வாசகர் மீண்டும் பெறவே அத் தொடர் இப்போது நூலுருக் கண்டிருக்கிறது.

* * *

பதினெட்டுப் புராணங்களில் ஒன்றான 'ப்ரம்மாண்ட புராண'த்தின் முடிவுப் பகுதியே "லலிதோ பாக்யானம்". பதினெட்டுப் புராணங்களில் முடிவானதே ப்ரம்மாண்ட புராணம்தான் என்றும், அது அன்னை ராஜராஜேச்வரியின் பட்டாபிஷேகத்துடனேயே முடிவதால் அவளது பெரும் சிறப்புத் தெரிகிறதென்றும் பெரியோர் சொல்வதுண்டு.

லலிதோபாக்யான முடிவில் விவரமாக வரும் ஸ்ரீசக்ரவர்ணனையை நீக்கினால், கதைப் பகுதிமட்டும் சுமார் 1,800 ச்லோகங்கள் கொண்டது*. அதைப் பல இடங்களில் சுருக்கியும், சில இடங்களில் உட்பொருள்கள், தத்வார்த்தங்களை விளக்கியும் எழுதியிருக்கிறேன். மூலத்தில் வெளிப்பட இல்லாவிடினும் அதைப் பாராயணம் செய்கையில் என்னுள் படர்ந்த பல சிந்தனைகளையும் எழுத்தாக்கியிருக்கிறேன்.

உபாக்யானத்தில் பொருத்தமற்றவையாகத் தோன்றிய பல விஷயங்களை மாற்றியும் இருக்கிறேன். உதாரணமாக. பண்டன் தோன்றும் இடத்தில் அவனை

---

* இது தக்ஷிணத்தில் உள்ள பாடப்படி. ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா இதையே (ஸ்ரீசக்ர விவரம் உள்பட) 'ஸ்ரீ லலிதோபாக்யானம்' என்று மொழி பெயர்த்துள்ளார். விந்தையாக, இதிலே நமது தக்ஷிணத்திலுள்ள காஞ்சி காமாக்ஷியின் மஹிமை விளக்கப்படாமலிருக்க, வடக்கே உள்ள பாடப்படி மோதிலால் பனாரஸிதாஸ் பிரசுரத்தினர் வெளியிட்டுள்ள 'ப்ரம்மாண்ட புராண'ப் பதிப்பில் கச்சியன்னையின் பெருமை, குறிப்பாக தசரதர் அவளருள் பெற்றே ஸ்ரீராமனைப் பெற்ற கதை, சுமார் 250 ச்லோகங்கள் கொண்ட இரு அத்யாயங்களில் விரிகிறது.

மன்மதனைப் போன்ற அழகுருவனாக ("மூர்த்தியாநிவ மந்மத:") வர்ணித்திருக்கிறது. அவ்வாறாயின் அவனைக் கண்டவுடன் ப்ரம்மதேவன் இடியிடி என நகைத்து, கோமாளி எனப்பொருள்படும் 'பண்டன்' என்ற பெயரைச் சூட்டுவானேன்? எனவே இவ்விடத்தில் மாற்றி எழுதியிருக்கிறேன் (பக். 8-9).

* * *

மாதா என்றால் அவளைக் குழந்தையுடன்தானே காட்ட வேண்டும்? நம் ஸ்ரீமாதா ஈந்த தலைக் குழந்தை கணேசனுடன் அவளை அட்டைப்படத்தில் நமக்குக் கண்ணினிக்கக் காட்டிக் கொடுத்திருக்கிறார் மணியம் செல்வன். உள்ளே கதையில் (13-ம் அத்தியாயத்தில்) அவன் மஹாகனம் பொருந்திய மஹாகணபதி உருவில் பிறக்கும் போதிலும் இங்கு அன்னைக்கு அடங்கிய அன்பு நந்தனனாகவே தரிசனம் தருகிறான்.

அவனைப் போலவே மாதாவினால் எனக்கு உடன்பிறந்தோராகும் வாசகர்களாகிய உங்கள் யாவருக்கும் அவளது அன்பமுதை வேண்டுகிறேன்.

வாழிநின் சேவடி! போற்றிநின் பூம்பத வாரிசங்கள்!
வாழிநின் தாண்மலர்! போற்றிநின் தண்ணளி! வாழிநின் சீர்!
வாழிஎன் உள்ளத்தில் நீயுநின் ஒற்றி மகிழ்நரும்! நீ
வாழி! என் ஆருயிர் வாழ்வே! வடிவுடை மாணிக்கமே!*

**சென்னை**
**30.4.85**

**ரா. கணபதி**

---

* இராமலிங்க அடிகளின் "வடிவுடை மாணிக்க மாலை" — திருவொற்றியூர் வடிவுடையம்மன் எனும் ஸ்ரீ திரிபுரஸுந்தரி குறித்தது.

# பொருளடக்கம்

# கதை பிறந்த கதை

குறுமுனிவர் என்று அவரைச் சொல்கிறோம். ஆனால் அந்தக் குறுகிய வடிவந்தான் எப்படிப்பட்ட மஹா சக்தியை உள்ளே இறுக்கி வைத்திருக்கிறது? கடலைக் குடிக்கும் சக்தி, விந்தியத்தை அழுத்தும் சக்தி, ஸகல உயிர்க்குலத்தின் எடையையும் ஸமன் செய்து உலகைத் தடம் புரளாது நிறுத்தும் சக்தி! அறிவுச் சக்தியைச் சொல்லப்போனால், அதிலும் அவருக்கு இணை யார்? வேத ஸூக்தங்கள் கண்டவர், தெய்வத் தீந்தமிழும் தந்தவர் அவரே அன்றோ? இதற்கெல்லாம் மேலானது, மூலமானது அவரது அன்புச் சக்தி.

அன்பின் சக்தி அதிசயமானது. அந்த அதிசயத்தில் ஒரு விசித்ரம்! அன்பு என்பது எல்லையற்ற அநுதாபமாகும் போது ஒருவரைத் தன் சக்தியையெல்லாம் மறந்து காருண்ய வேதனைப்படவும் செய்துவிடுகிறது!

இப்போது இந்நிலையில்தான் இருந்தார் அகஸ்தியர். "தேவரிஷி, வேத வேதாங்கங்களில் கரை கண்டவர், சகல சித்தாந்தங்களின் ஸாரமும் அறிந்தவர், பிரம்மாநந்த ரஸத்தில் அகம் தோய்ந்தவர்" என்றெல்லாம் நம் புராணம் அவரைச் சொன்னாலும், அதே புராணம் அவரது நிகழ்கால நிலையைக் காட்டும்போது "சிந்தை நொந்திருந்தார்" என்கிறது.

ஏன்?

அன்பினால்தான், அநுதாபத்தினால்தான்!

மக்கள்குலம் போகிற போக்கைக் கண்டு கருணையில் கரைந்தார் கும்பமுனி. புலன் போகும் போக்கிலேயே சென்று பாபத்தையும் துக்கத்தையும் பெருக்கிக் கொள்ளும் மாந்தர் நிலை கண்டு மனமுருகினார் மா தவர். இதுவரை தாம் செய்திருந்ததற்கும் மேலான ஒரு தவத்தை

மேற்கொண்டார். "லோக ஹேதோ: தயார்த்ரஸ்ய" என்று புராணம் அழகுபடக் கூறுவதுபோல, தயையால் நனைந்த நெஞ்சோடு உலகுக்கு உய்வு உண்டாக வேண்டுமென்ற அருள் நோக்கம் ஈடேறவே அருந்தவம் இருக்கலானார்.

இத் தவத்தைப் புரிவதற்காகத் திருக்கச்சியம்பதியைத் தேர்ந்தெடுத்தார். கலியின் கொடுமை நீக்கும் 'கலிதோஷக்நி' யான காமாக்ஷி தேவி கோயில் கொண்ட தலமாயிற்றே அது! அதனால்! அதோடு வரதராஜனும் ஏகாம்ரநாதனும் வாழும் பதியுமல்லவா? அஞ்ஞானத்தில் ஆழ்ந்துழலும் மாந்தரை எளிதே உய்நெறி செலுத்த உபாயம் என்ன என்று காணும் அருட்தவிப்புடன் அகஸ்த்ய மாமுனிவர் காஞ்சீபுரம் அடைந்து, அங்கு குடிகொண்ட மும்மூர்த்தியரையும் பூஜித்துக் கடுந்தவம் தொடங்கினார்.

திருமாலும், அம்பாளும், சிவனாரும் ஒன்றாகும் ஏகப் பரம்பொருளைக் குறித்தே அவர் தபஸ் புரிந்திருக்க வேண்டும். எனினும் அவரது நோக்கம் உலகத்தின் நலனாக இருந்ததால் போலும், அப் பரம்பொருள் பாலிப்புக் கடவுளான திருமாலாக அவருக்கு ப்ரஸன்னமாயிற்று.

ஆயினும் நாம் பொதுவில் கருதும் திருமால் வடிவில் அல்ல.

குறுமுனிவருக்கு குரு வடிவில் வந்து உலக நலனுக் கானதை உபதேசிக்கப் பெருமான் உளம் கொண்டான்.

சிவபெருமானின் குரு வடிவம் தக்ஷிணாமூர்த்தி என்பதுபோல, ஸ்ரீமந் நாராயணனின் குரு மூர்த்தம் ஹயக்ரீவ ஸ்வரூபமாகும். "ஸாக்ஷாத் சிந்மாத்ர–விக்ரஹம்" (அப்படியே ஞானத்தால் வார்த்த வடிவம்) என்று புராணம் இக் குதிரைமுகப் பெருமானைப் பேசுகிறது.

பரிமுகன் பரிவுடன் தரிசனம் தந்தவுடன், ஆனந்த பரிதரானார் அகஸ்தியர். ஹயவதனனின் அடியிணையில் பன்முறை பணிந்தார்.

"உளம் குளிர்ந்தேன் மஹர்ஷே! உங்களுக்கு வேண்டிய வரம் என்ன?" என வினவினான் ஹயக்ரீவனாக வந்த வரதன்.

"பாழ்பட்டு நிற்கும் பாமர மக்கள் ஸம்ஸாரக் கடல் கடந்து ஸதானந்தம் பெற வழிகூறி அருளுங்கள். சாமானியரும் ஸத்கதி பெற சுலபமான உபாயம் எதுவேனும் இருந்தால் அதனை உபதேசியுங்கள்" என்று குழைந்து வேண்டினார் கும்ப ஸம்பவர்.

உலகுக்காக உருகும் அந்த உளப்பாங்கு ஹயவதனனுக்குக் களிப்பூட்டியது. சொன்னான்:

"எளிய உபாயம் இருக்கவே செய்கிறது, மஹர்ஷே! மஹாதேவனே முன்னம் எனக்கு அதை எடுத்துரைத்திருக்கிறான். அதன்பின் அவ் வுபாயத்தை என்னிடம் ப்ரம்மனும், துர்வாஸரும் கேட்டறிந்திருக்கிறார்கள். ஆயினும் தற்போது கேட்கும் தங்கள் மூலமே இந்த உய்நெறி உலகமெலாம் பரவிப் புகழ் பெறுமாறு வரம் தருகிறேன்.

"பாமரர் மட்டுமின்றிப் பாவியரும் தீயவருங்கூட எளிதில் உயர்கதி பெற வழி பராசக்தியை பக்தி புரிவது தான். சாஸ்திரம் தெரியாமல் விதி தவறிப் பூஜித்தாலும் உள்ளமுவந்து இம்மையும் மறுமையும் அருளும் அம்மை அவளே!"

இப்படிக் கூறிய பரிமுகப் பெருமான் அம்பிகையின் அநேக ஆவிர்பாவங்களில் நாம் திருமாலுடையதாகவே கருதும் மோஹினியின் கதையை முதலில் கூறினான். "அமுதத்துக்காக தேவாஸுரரிடையே பெரிய போட்டியும் சண்டையும் உண்டானபோது உலகக் காப்பாளனான திருமால் லலிதையை

ஆழ்ந்த யோகத் தியானத்தால் ஆராதித்துத் தானே அவள் மயமாகிவிட்டான். அப்போதுதான் மோஹினி உதித்தாள்" என்று இதற்கு விளக்கம் தந்தான்*.

மோஹத்துக்குக் காரணமானவளேதான் மோஹத்தை நாசம் செய்யவும் முடியும் என்று உணர்த்துவதற்காக இப்படி மோஹினியின் கதையைக் கூறிய பின்னர் மோஹ நாசினியான ஸ்ரீ லலிதாம்பிகையின் அமுத லீலா சரிதத்தை விரித்துரைத்தான்.

விதி ஏதுமறியா தூய பேரன்பில் பெறப்படும் அவளை, அவளது திவ்விய சரிதையை இதயம் திறந்து பருகுவதாலேயே அடையலாம்; அடைந்து பாப தாபங்களிலிருந்து விமோசனம் பெறலாம் என உய்வுக்கான எளிய வழியைக் காட்டினான்.

அதே போதில், விதிமுறை வழுவாத மந்திர யோகம், யந்திர பூஜை ஆகியவற்றால் தந்திர ரீதியில் அவளை எய்தவும் அந்த வரலாற்றினிடையிலேயே பரக்கப் பாதை பாவினான் பரிமுகப் பரமன்.

இங்கே நாம் லலிதையின் சரிதையை மட்டுமே அன்போடு கேட்கவிருக்கிறோம் — தந்திர சாஸ்திர நுணுக்கங்களில் பிரவேசிக்கவில்லை. வரலாற்றை பக்தியுடன் கேட்பதே வழிபாடுதான்.

ஹயக்ரீவன் அகஸ்தியருக்குக் கூறுவதாகவே புராணம் இக் கதையை விரித்தபோதிலும், நமக்கு அகஸ்தியப் பெருமான் அன்போடு இதை உரைப்பதாகவே நினைத்துக் கேட்போம். அதுதான் ஹயவதனனின் ஆணை. "தேவர் உள்பட யாவரும் உங்களது முகத் தாமரையின் மொழியாகவே

* அம்பிகையை ஆராதித்தே திருமால் மோஹினி வடிவம் பெற்றதை 'ஸௌந்தர்ய லஹரி'யில் 'ஹரிஸ்-த்வாம் ஆராத்ய' எனத் தொடங்கும் 5-வது ச்லோகம் கூறும்.

இக் கதையைப் பெற்று நிறைவு காண்பராக!" என்று அவன் கும்பமுனிவரிடம் பகர்ந்திருக்கிறான். 'அகத்தியனார் பாலூட்டி' வளர்த்த சேயே நம் தமிழ்த் தாயாதலால் தமிழ் தந்த அத் திருவாய் வழியாகவே இவ்வமிழ்து வடிவதாக பாவித்துக் கேட்போமாக!

அன்புரஸத்தின் முறுகிய மூர்த்தியாக, ஸஹஸ்ர நாமத்தின் முதற்பெயரே 'ஸ்ரீமாதா' எனக்கொண்ட சீரார் அன்னை, அவளுடைய கதை கேட்கக் குழுமியுள்ள குழந்தையர் நம்மையெல்லாம் அக் கதை உருவிலேயே வந்து அணைத்துக் காப்பாளாக!

# 1

கதையின் நாயகி காமாக்ஷி.

கதை பிறப்பதோ காமன் வெந்து நீறான சாம்பலில்!

ஆசை எரிந்த பின்பே ஆரா அன்பு உதிக்கும் என்பது அர்த்தம்.

ஆசையை வைராக்கியசாலியர்கூட இயல்பாக அழிய விடாமல், பலாத்காரமாக அழிக்கப் பார்த்தால் அதுவே சினமாக உருவெடுக்கும் என்று காட்டுவதற்காகக் காம தஹனத்துக்கும் காமாக்ஷி உத்பவத்துக்கும் இடையே ஓர் அஸுரன் பிறப்பதை முதலில் பார்ப்போம். அமுதம் உதிக்குமுன் ஆலஹாலம் தோன்றியாக வேண்டுமே!

மலர்க் கணை வீசிய மதனனை நெற்றிக் கண் வீச்சால் எரித்த பின் சாந்தி பூத்து அமர்ந்திருந்தான், மஹாதேவன்.

அவனது பூதப்படைகளின் தலைவர்களில் ஒருவனான சித்ரஸேனன் — 'சித்ரகர்மா' என்றும் இவனைச் சொல்வதுண்டு — என்ற கணேச்வரன், சற்றுமுன் வரையில் அழகுப் பெட்டகமாயிருந்து இப்போது பஸ்மமாகிவிட்ட சாம்பல் குவியலை ஒரு புருஷ வடிவமாக அமைத்தான். பின்னர் பரமேச்வரனை நோக்கி விண்ணப்பித்தான்:

"பிரபோ! உன் சோதனை புரியவில்லை. தேவர்களுக்கு ஆட்சியதிகாரத்தால் செருக்கும் தருக்கும் உண்டாகும்போது தண்டித்துத் திருத்தவே நீ செய்யும் சோதனைகளில் ஒன்றாகத்தான் இதுவும் இருக்க வேண்டும்.

உக்ர தவம் புரிந்த தாரகாஸுரனுக்குப் பிரஸன்னமாகி ஒப்பற்ற வலிமை தந்தாய். உன்னை நிகர்த்த ஒருவனாலன்றி வேறெவராலும் தனக்கு மரணம் ஸம்பவிக்கக் கூடாது என்று அவன் வரம் கோர, 'ஆஹா, அப்படியே!' என்று அருளினாய். உனக்கு நிகர் நீ ஒருவனேதான். வரமருளிய நீயே வதம் செய்யலாகாது என்பதால் அவன் உடனே நிர்பயமாக தேவர்களைத் தாக்கி எல்லையில்லாத் துயர் தரலானான்.

"உன்னிலிருந்தே உதிக்கும் ஒருவன்தான் உனக்கு ஸமமான சக்தி பெற்றவனாகத் தாரகனை ஒடுக்க முடியுமெனத் தேவர்கள் தெளிந்தனர். ஆனால் நீயோ அன்னை தாக்ஷாயணி தக்ஷனின் யக்ஞத்தில் தன் இன்னுயிரைத் தியாகம் செய்த நாளாகத் துறவியரசனாய், தக்ஷிணா மூர்த்தமாய், ஸதியான சக்தியின்றித் தனியே யோகத்திருக்கிறாய். தபஸ்வியான உன்னை எப்படித் தந்தையாக்கி உனக்கிணையான புத்திரனைப் பிறப்பிக்கச் செய்வதென அமரர்கள் குழம்பிக் கொண்டிருந்தனர். அப்போது தாக்ஷாயணியாயிருந்த பராசக்தியானவள் ஹிமவான் மகளாகப் பார்வதி என அவதரித்தாள். உன்னையே நாதனாகக் கைப்பிடிப்பதென்ற ஆராப் பிரேமையுடன் அவள் இத் தவச்சாலைக்கு வந்து உனக்குப் பணி புரியலானாள். தங்களுக்கு நல்ல காலம் பிறக்கப் போகிறது என்று தேவர்கள் புதுத் தெம்பு பெற்றனர். பார்வதியிடம் உனக்குக் காதல் அரும்பினால், அது தங்களுக்குத் தேவைப்படும் சிவகுமாரனாகக் கனியும் என்று ஆவலுடன் எண்ணினர். அவளிடம் உனக்குப் பிரேமை பிறக்கச் செய்யவே காமனை இங்கு அனுப்பிவைத்தனர்.

"ஆனால் நடந்திருப்பதென்ன? தேவ காரியத்துக்காக வந்த மாரனை நீறுபடச் செய்துவிட்டாய். அதனையடுத்து, தபஸ்வியான உன் உள்ளத்தை உருக்கித் தன் பால் திருப்பத் தானும் கடுந்தவம் புரிவதொன்றே உபாயமெனக்

கருதி மலைமகள் இங்கிருந்து அகன்று சென்று தானும் ஏகாந்த யோகத்தில் அமர்ந்து விட்டாள்.

"ஐயனே! தேவர் துயரும் அன்னையின் தாபமும் எப்போது தீர்க்கப் போகிறாய்? அதெல்லாம் சற்றுத் தாமதித்தாலும், பிறர் காரியமாகவே வந்து உயிரிழந்த மன்மதனையேனும் இப்போதே உயிர்ப்பித்து அருள்வாய். நெற்றியின் நெருப்புக் கண்ணால் நீ பொசுக்கிய மன்மதச் சாம்பலை இதோ ஓர் உருவமாகப் பிசைந்து போட்டிருக்கிறேன். இதை, எரித்துப் பொசுக்கும் அக்னி மயமான நெற்றி நேத்ரத்தாலன்றி, உயிரளிக்கும் சந்திர-சூரிய மயமான உன் மற்ற இரு கண்களால் குளிர நோக்கி ஜீவகலை ஊட்டுவாய்."

நல்லெண்ணத்தின் மீதுதான் கணேச்வரன் இப்படிப் பிரார்த்தித்துக் கொண்டான். ஆயினும் நலமே உருவான சிவபெருமானுக்கு இவன் சொல்லித்தானா தெரிய வேண்டும்? இடைக்காலத்தில் தேவர்கள் இறுமாப்புப் பிடித்தலைந்ததற்குப் பிரதியாக இன்னமும் சில காலம் அவர்கள் அஸுரரிடம் அவதியுற வேண்டு மென்பதே பெருமானின் சித்தமாயிருந்தது. தேவ காரியத்துக்காகவே தியாகியாக மன்மதன் வந்து பாணம் தொடுத்ததாகச் சித்ரஸேனன் கூறியபோதிலும், உண்மை யில் அவன் 'தன்னால் முடியாததில்லை' என்ற அஹம் பாவத்துடனேயே வந்ததும் ஐயனுக்குத் தெரியும். எனவே அவனுக்கு இப்போதே புனர்ஜீவன் தர அவன் உளம் கொளவில்லை.

சித்ரஸேனன் விரும்பியதற்கு மாறாக விசித்ரமாக ஒன்று செய்தான் சிவபெருமான். அவன் வேண்டினாற் போலவே சாம்பற் பதுமை மீது கண் பாலித்தான். அதன் விளைவாகப் பதுமை உயிர் பெறவும் செய்தது. ஆயினும் உயிர் பெற்றெழுந்த உருவம் ஒளி நிறைந்திருந்ததெனினும் ஜகன்மோஹனமான காமவேளின் சுந்தர வடிவமாயின்றி குரூப, குரூரமான ஒரு கோமாளி வடிவாயிருந்தது.

அரக்கரினத்தைச் சேர்ந்த ஒரு விதூஷகன் என்று சொல்லும் படியான ரூபம்!

அதைப் பார்த்தும் பிரம்மனுக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. படைப்புக் கடவுளான அவனுக்கு வேலையின்றி அவனது தந்தையும் காப்புக் கடவுளுமான திருமால் நேரே தனது மனத்தினின்றே மதனவேளைப் படைத்திருந்தான். அது போன்ற ஒரு மனோஹர ரூபத்தைத் தன் ஸ்ருஷ்டியாற்றலால் படைக்க முடியவில்லையே என்று குறைபட்டுக் கொண்டிருந்தவன் அயன். எனவே, இப்போது மதனனின் சாம்பலிலிருந்து அழிப்புக் கடவுள் படைத்த விசித்ர ரூபத்தைப் பார்த்தும், அயனுக்குத் தன்னால் இத்தனை விகார வடிவமுந்தான் ஸ்ருஷ்டிக்க முடியாது என்று தோன்றவே, "பண்ட பண்ட"* என்று சொல்லிப் பெரிதாக நகைத்தான்.

பண்டன் என்றால் கோமாளி. அதுவே சாம்பலில் எழுந்த அஸுரனின் பெயராயிற்று. சிவபெருமான் படைக்க, சதுர்முகன் நாமகரணம் செய்த அஸுரன்!

காமமானது குரோதமாகத் திரிவதே மதனன் பண்டனானதன் உட்பொருளெனில், குரோதம் என்பது உண்மையில் ஒரு ஜீவனை பரிகாசத்துக்குரிய வேடிக்கைப் பண்டமே ஆக்குகிறது என்று காட்டத்தான் அவன் விதூஷகன் போலே இருந்தது. அவன் ஒளிமயமாகத் தெரிந்ததும் கோபக்கனல் கொழுந்து விட்டதால்தான். கனல் ஜ்வலித்தாலும், அது பற்றியுள்ள ஆச்ரயத்தைக் கரிக்கட்டை ஆக்குவதுதானே? உள்ளூரக் கோபக்கனல் ஜீவனைக் கரிக்கட்டை ஆக்குவதுதான்!

உள்ளேயும் பொன்னாக்கும் இன்னொரு கனல் உண்டு. கருணை என்னும் அதுவே அருணையாக ஜ்வலித்துக் கொண்டு லலிதையாய் அவதரிக்கப் போகிறது! இவன் கோமாளியாய் வந்தானெனில் அவளோ கோமள

* Bhanda

ஸ்ரீகுமாரியாக வரப்போகிறாள்! அதனால்தான் லலிதை என்றே தளுக்கும் தளிர்ப்பும் கொண்ட திருநாமம் பெறப் போகிறாள்!

சித்ரஸேனன் பூதப் படைத் தலைவனாதலால், அவனுக்குப் பண்டனின் ரூபம் அப்படியொன்றும் விகாரமாகத் தெரியவில்லை. தனது பிரார்த்தனையால் தன்னுடைய பிரபுவின் வீக்ஷணத்தில் பிறந்தவன் என்பதால், பண்டனிடம் சித்ரஸேனனுக்கு ஒரு பாசப் பிணைப்பே ஏற்பட்டிருந்தது. அவனை இறுகத் தழுவிக் கொண்டான்.

"நீயும் ஒரு கணேச்வரனாவதற்கு வழி சொல்லித் தருகிறேன். ஸ்ரீருத்ர மஹாமந்திரத் துதியை உனக்குக் கற்பிக்கிறேன். கற்றுக்கொண்டு அதை ஜபித்து வா. ஐயன் ப்ரீதியுற்று உனக்கும் பூதப் படைத்தலைமை தருவான்" என்று கூறி, பண்டாஸுரனுக்கு வேதத்திலேயே இடம் கொண்ட சதருத்ரீயத்தைச் சித்ரஸேனன் போதித்தான்.

அசுர ஜன்மாவுக்கோ பிறக்கும்போதே பேராசை. பூதர் தலைவனாயினும் பரமேச்வரனுக்கு அடிமையாகத் தானே இருக்க வேண்டும்? அப்படிப்பட்ட கணேச்வரப் பதவி அவனுக்குப் போதவில்லை. தனக்கு மேல் ஈசன் என்று எவருமின்றித் தேவரையும் வென்று பேரதிகாரம் பெறவே பண்டன் விரும்பினான். இவ்வாறு வரம் பெறுவதற்காகவே ஸ்ரீருத்ரத்தைக் கற்றுக் கொண்டு இடையறாமல் ஜபித்தான்.

ஒருமைப்பட்ட மனத்துடன் ருத்ர ஜபம் செய்த பண்டனிடம் ஈசன் மகிழ்ந்து வரம் வழங்க முன் வந்தான்.

கோமாளி போலிருந்த அஸுரன் வெகு புத்தி சாலித்தனமாக வரம் கேட்டான். "என்னை எதிர்க்கும் சத்ருவின் சக்தியில் பாதி என்னிடம் வந்து சேர வேண்டும்!" என்று கோரினான்.

வரம் வழங்குவதற்கு முன்வந்து விட்டுப் பிறகு பின்வாங்குவதற்கில்லையாதலால், ஈசன் பண்டன் வேண்டியவாறே அருளிவிட்டான். ஆயினும் பண்டனுக்கும் மேல் புத்திசாலித்தனம் செய்து அவனை முறியடிப்பதற்கான உபாயம் காண ஐயனால் ஆகாதா என்ன?

*

காமத்தின் மறு வடிவமே குரோதம் என்பதை உயிருதாரணத்தால் நிரூபிப்பவனாகச் சீற்றமூர்த்தியாகப் புறப்பட்டான் பண்டன்.

அசுரர்களில் ஏராளமானவர் தங்களுக்கு ஈசனின் 'கொடை'யாகக் கிடைத்த மஹாபலிஷ்டனிடம் வந்து சேர்ந்து அவனுக்குப் பணியாளாயினர்.

புதிய அஸுரன் பூண்ட உக்ர கோலத்தில் பழைய அஸுரன் தாரகனுமே சற்று வாலைச் சுருட்டிக் கொண்டு, பின்னணியில் அடங்கிக்கொண்டான்!

தாரகனுக்கு ஆசானான சுக்ராசாரியார் இவனுக்கும் குரு ஸ்தானம் வகிக்க வந்தார்.

தைத்யர்களின் சிற்பவிற்பன்னனான மயன் ஓடோடி வந்து பண்டனுக்கென ஓர் அரிய நகரத்தை நிர்மாணித்துக் கொடுத்தான். அதற்குத் தன்னுடைய ரத்த வெறியைக் காட்டுமுகமாக 'சோணிதபுரம்' எனவும், பாழ்பண்ணும் தன் லக்ஷ்யத்தைக் குறிப்பிடுவதாக 'சூன்யக நகரம்' என்றும் பண்டன் பெயர்களிட்டான்.

அம் மாநகரில் அஸுர மஹாராஜனாக அவனுக்கு சுக்ரர் பட்டாபிஷேகம் செய்தார். ஆதியில் ஹிரண்யனுக்குப் பிரம்ம தேவன் அளித்திருந்த அதே கிரீடம் இன்று சுக்ரரால் பண்டனுக்குச் சூட்டப்பட்டது.

பெருமையோடு பண்டாஸுரன் தன் புஜங்களைத் தட்டிக் கொள்ள, இரு தோள்களிலிருந்தும் இரு மாவீரர்

உதித்துக் குதித்தனர். பண்டனுக்குத் தம்பியராகக் கருதப்பட்ட இவ் விருவரில் வலது தோளிலிருந்து தோன்றியவன் விசுக்ரன் — அதாவது சுக்ரரையும் விஞ்சிய போர்க்கலைச் சாதுர்யமுள்ளவன். இடத் தோளில் தோன்றியவன் விஷங்கன் — ஸங்கமாக இன்றித் தனியனாகச் சென்றே சேனைகளை வெல்ல வல்லவன்.

அசுர மந்திரிகளும், படைத் தலைவர்களும் பண்ட மகாராஜாவின் தர்பாருக்கு மேலும் அழகு (கோரம்!) ஊட்டினர்.

ஸம்மோஹினி, குமுதினி, சித்ராங்கி, ஸுந்தரி என்ற நான்கு மங்கையரை மணந்து அவர்களிடம் சூராதி சூரர்களான முப்பது புதல்வர்களையும் பெற்றான் பண்டன்.

தன் பவிஷு அனைத்துக்கும் வித்து ஸ்ரீருத்ரந்தான் என்பதைப் பண்டன் மறக்கவில்லை. எனவே, அது தக்கி நின்று தழைத்தோங்குவதற்காகத் தன் நாடெங்கும் வேதத் துதிகளும் வேள்விகளும் நீங்காது நிலவச் செய்தான். 'சைத்தான் சாத்திர மேற்கோள் காட்டுவது போல' என்று மேநாட்டார் வசனம் சொல்வார்கள். இங்கு சோணித புரத்திலோ மெய்யாலுமே அஸுரர்கள் அமர்க்களமாக வேத அத்யயனம் செய்து கொண்டு பெருவாழ்வு வாழ்ந்து வந்தார்கள்!

இவர்கள் உயர உயர, அமரர்கள் தாழ்ந்து தாழ்ந்து, ஈன நிலைக்கு இறங்கிக் கொண்டிருந்தார்கள்.

தவறுகள் செய்தாலும் தேவர்தாமே உலகை வாழ்விக்கும் நல்ல சக்திகள்? தவமே செய்தாலும் தைத்யர்கள் தீய சக்திகளே அல்லவா? தீய சக்திகளே தூய வேதத்தின் துணை கொண்டு ஆதிக்கம் பெற்றுள்ள மாயம் எப்படி நீங்கும்?

நீங்கும்! — மாயாவியான திருமால் அதற்கு வழி காண்பான். அதை நாமும் காண்போம் இனி.

# 2

மற்ற அரக்கர்களுக்கு மாறாக ஓர் ஏமாற்று வழியைப் பின்பற்றினான் பண்டாஸுரன். பொதுவாக அவ்வினத்தார் வேத வேள்விகளை அழிப்பார்கள். மறை மந்திரத்தோடு யாகத்தில் அளிக்கப்படும் அவியே தேவருக்கு ஊட்டமும் உவகையும் அளிப்பதாதலால்தான் அவுணர்கள் அதை அழிப்பது வழக்கம். பண்டனோ தானும் வேள்விகள் செய்தான். தன் அவுணப் பிரஜை களையும் இவ்வாறே வைதிக அநுஷ்டானங்களைச் செய்ய வைத்தான். ஏன்? மந்திரத் துதியும் அவியும் பெறும் தேவர்கள் இவ்வாறு மறை ஓதுவோருக்கும், ஆஹுதி செலுத்துவோருக்கும், அவர்கள் வேண்டும் வரங்களைக் கொடுக்கக் கடமைப்பட்டுள்ளனர். இதைக் கொண்டுதான் பண்டன் யுக்தி செய்தான். வேத அத்யயன, யக்ஞாதி களைச் செய்து, இவன் தேவருக்கு எவ்வளவு ஊட்ட மளித்தானோ, அதைவிட வெகு அதிகமாக அவர்களிட மிருந்து திவ்ய சக்திகளைத் தான் பிரதியாகப் பெற்றுக் கொண்டு ஊட்டமடைந்தான். ஏனெனில் ஆராதித்த வருக்கு இஷ்ட பலனைத் தராமல் மறுப்பதற்குத் தேவரால் முடியாது. எனவே, பண்டனுக்கு வரம் தந்து, அதனால் தங்களைத் தாங்களே சபித்துக் கொண்டவர்களாக அவர்கள் ஆனார்கள்! நாளுக்கு நாள் நலிவுற்றார்கள்! அவனது மேலாதிக்கத்தை ஒப்புக் கொள்ளும் தாழ்நிலைக்கு வந்து விட்டார்கள்.

இச் சமயத்தில்தான் பண்டனின் தந்திரத்துக்கு எதிர்த் தந்திரம் செய்ய மாயன் மாலவன் திருவுள்ளம் கொண்டான்.

அம்பிகைதான் இறுதியாக, உறுதியாகப் பண்டனை அடக்கி அழிக்க வேண்டியவளென்பதை நாரணன் அறிவான். எனினும் அதற்குக் காலம் வரும்வரை 'இடைக்கால நிவாரண'மாக அமரர்கள் சற்று அஸுரக் கொடுங்கோன்மையிலிருந்து ஆச்வாஸம் பெறட்டும் என்று தயை சுரந்து ஒரு தாற்காலிக ஏற்பாடு செய்தான்.

மாயா மோஹினி ஒருத்தியை சிருஷ்டித்தான். அவளிடம், "உனக்கு எவ்வுயிரையும் மயக்கக்கூடிய ஆற்றல் தந்தேன். நீ விரைவே தைத்ய நாயகனான பண்டனிடம் சென்று அவனுக்கு மோஹமூட்டு. சிற்றின்பத்திலேயே அவன் ஆழுமாறு செய்!" என்றான்.

ஜகன்மோஹனனைப் பணிந்தெழுந்து அவன் பணித்தவாறு செய்யப் புறப்பட்டாள் மாயை. அவளுக்குப் பரிவாரமாக ஒரு மோஹினியர் கூட்டத்தையே படைத்து உடன் அனுப்பினான் திருமால். பண்டனது மந்திரிகள், பிரதானிகள் ஆகியோரை வசியம் செய்யவே இந்தப் பரிவாரம்.

எதிராளியாக எவர் போருக்கு வந்தாலும், அவரது பலத்தில் பாதி பண்டனைச் சென்றடைந்துவிடுமல்லவா? இந்தப் பாதி பலத்தோடு அவனுக்கே இயல்பாயுள்ள அஸுர பலமும் சேருமாதலால், அவனிடம் யுத்தம் செய்யச் செல்லும் எவராயினும் அவனைவிடப் பலம் குறைந்தவராகத்தானே ஆக வேண்டும்? எனவே, அவனிடம் தோற்க வேண்டியதாகத்தானே ஆகும்? அதனால்தான் போர் முனையில் அவனைத் தாக்காமல் மலரணையிலேயே அவனைத் தாழ்த்துவதற்காக இப்படி மாய உத்தியைப் பெருமான் கையாண்டான்! வேதத்தைக் கொண்டே வஞ்சனையாகத் தேவர்களுடைய சக்தியைக் கிரஹித்து, அதனால் அவர்களுக்கே குழிபறித்த பண்டனை வஞ்சனையாலன்றி முறியடிக்க முடியாதென்பதால், திருமால் இப்படிச் செய்ய வேண்டியதாயிற்று. உயிர்களைப் பரிந்து

புரந்தருளும் அருள் நெஞ்சகம் கொண்ட அவனுக்கே அதன் அங்கமாக வஞ்சகம் செய்யவும் முழு உரிமை உண்டு.

மானஸஸரஸில் பண்டனும் அவனது முக்கிய மான பரிவாரத்தினரும் தங்களது மனைவியருடன் நீர் விளையாட்டில் களித்திருந்த சமயம். ஏரிக் கரையிலிருந்த சம்பகத் தோட்டத்தை மோஹினிப் பட்டாளம் சென்றடைந்தது.

அங்கிருந்து அவர்கள் வீணை இசைத்துப் பாடியது சம்பக மலரை விட மணத்துக்கொண்டு, அதன் தேனை விட இனித்துக்கொண்டு, காற்றிலே மிதந்து சென்றது. ஜலக்ரீடை செய்து கொண்டிருந்த அவுணர்களின் காதிலே பாய்ந்து கருத்திலே பதிந்தது.

மயக்குச் சக்தி வேலை தொடங்கிவிட்டது.

இசை வந்த வழியே இழுக்கப்பட்ட பண்டன் மான்விழியாள் மாயையிடம் வந்து நின்றான். மாலவன் படைத்த அந்த ஸர்வாங்க ஸௌந்தரியிடம், மண்ணில் நின்ற மின்னல் கொடியாளிடம் மால் கொண்டான்.

அவ்வாறே அவனுடைய மந்திரி பிரதானியரும் மாயையோடு வந்த அப்ஸர கணங்களிடம் மையல் கொண்டனர்.

உலகையெல்லாம் தன் காலடியில் பணிய வைத்த பண்டனையும் காம மயக்கானது மாயையின் காலில் பணிய வைத்தது! தன்னை ஏற்குமாறு அவளிடம் மன்றாடினான். அவனை வசியம் செய்யவே அவள் வந்தவளாயினும் முதலில் சற்று மறுத்தால்தான் தனக்கு அது கௌரவம் சம்பாதித்துத்தரும், அவனுடைய தாகத்தை யும் தீவிரமாக்கும் என்பதால் பராமுகமாயிருப்பது போல் காட்டினாள். இறுதியில் அவனுக்கு இணங்கினாள்.

அழகியருக்கு அவுணர்கள் அடிமையாயினர்.

அவ்வளவுதான், அவர்களுடைய அத்யயனம், யக்ஞ அநுஷ்டானம் யாவும் நின்று போயின. 'ஆயிரம் அச்வமேதம் இந்த இன்பத்துக்கு ஈடாகுமோ?' என்று சொல்லிக் கொண்டு, மோஹினி கணத்தோடு விஷய ஸுகத்தில் அஸுரர்கள் ஸதா காலமும் திளைக்கலாயினர். முன்பு வேதியர்களை வெகுவாக மதித்து யாகாதிகள் பண்ணுவித்துக் கொண்டவர்கள் இப்போது அவர்களை எள்ளி நகையாடலாயினர். மொத்தத்தில், காமத்தினால் மாயாமயமான படுகுழியில் விழுந்தார்கள் என்று புராணம் கூறும்.

மன்மதன் தகனமானவுடன் காம உணர்வே பிரபஞ்சத்தில் நசித்து விட்டதாகவும், 'இப்படி ஆனதால் இனி லோக நாடகமே நடக்காமற் போய்விடுமே! இறந்தவர்கள் தமது கர்ம மிகுதியை அநுபவிப்பதற்காக மீண்டும் பிறக்க முடியாமற் போய்விடுமே' என்று தேவர்கள் பரமேச்வரனிடம் எடுத்துக்காட்டி முறையிட்டு அவனுக்குப் புத்துயிர் பெற்றுத் தந்ததாகவும் ஏனைய புராணங்களில் கூறியிருக்கிறது. ஆனால் பிரம்மாண்ட புராணத்தில் இடம் பெறும் நமது லலிதோபாக்யானத்திலோ மதனன் பஸ்மமான பின்னும் காமம் என்பது அஸுர இனத்திடை நீடித்ததாகவே காண்கிறது. பண்டன் நாலு ஸ்திரீகளை மணந்து முப்பது புத்திரர்களுக்குத் தந்தையானதாக முன்பு கண்டோமல்லவா?

நமது புராணத்தின் கருத்தே தத்வரீதியில் வலுவுள்ளதாகத் தெரிகிறது. காமனும், மற்றும் இந்திரன், அக்னி, வருணன், வாயு முதலிய தேவர்களும், ஏன், ப்ரம்ம-விஷ்ணு-ருத்ரருமே பராசக்தி தனது ஸங்கல்பப்படி நடத்தும் பிரபஞ்ச நாடகத்தில் அப் பராசக்தியினால் நியமிக்கப் பட்ட அதிகாரிகளாக, அல்லது பராசக்தியின் கருவி மட்டுமேயாக ஒவ்வொரு விதமான சக்தியை வெளியிட்டு, ஒவ்வொரு விதமான தொழில் புரிபவர்கள் தான். ஆகையால் இவர்களில் ஒருவருக்கு அழிவு ஏற்பட்டு

விட்டதால் பராசக்தி புனையச் சங்கற்பித்த பிரபஞ்ச நாடகத்துக்கு ஊறு ஏற்பட்டுவிட முடியாது. தவறு செய்யும் ஒரு மாநில அமைச்சரவையை ராஷ்டிரபதி நீக்கிவிட்டுத் தாமே நேராக அதன் ஆட்சிப் பொறுப்பை ஏற்பது போலப் பிழை செய்த அதிகார புருஷனைப் பராசக்தி நீக்கிவிட்டுத் தானே அவன் தொழிலைப் புரிவாளென்று நம் புராணம் உள்ளுறையாகத் தெளிவாக்குகிறது.

ஆயினும் பிரபஞ்ச நாடகத்துக்கு இன்றியமையாத ஒரு உணர்ச்சியை உண்டாக்கும் அவளுடைய அதிகாரியான காமனை ஓர் அஸுரனைப் போலக் கருதிப் பரமேச்வரன் எரித்தது பராசக்திக்கு உவப்பாக இருக்கவில்லை. அவளது அதிகாரி தபஸ்வி ஒருவனிடம் காமத்தைத் தூண்ட முயன்றது தவறே என்றாலுங்கூட, அவளிடந்தான் ஸாக்ஷாத் அந்த பரமேச்வரத் தபஸ்வியுங் கூட புகார் செய்ய வேண்டுமேயன்றித் தானாக நேரடி நடவடிக்கை எடுப்பது பிரபஞ்சத்தின் அரசாட்சி முறைக்கு முரணானது தானே? அது தண்டனைக்கு உரியதே அல்லவா?

உணர்ச்சியெல்லாம் செத்து ஞான உணர்வொன்றே உருவாக இருந்த பைராகி சிவனை எப்படித் தண்டிப்பது? எந்த தண்டனையும் அந்த ஞான வைராக்ய நிதியைத் தொடாதே! அதனால் அம்பாள் ஒன்று செய்தாள். சாக்த சாஸ்திரங்களின்படி, அந்த ஞானத்திலிருந்துதானே உலக மாயையும் வந்தது? எனவே அவன் பெற வேண்டிய தண்டனையை உலகுக்குத் தந்தாள். உலகைத் தாக்கவிருந்த காலகூடத்தை ஒரு ஸந்தர்ப்பத்தில் அவன் உட்கொண்டு காத்ததற்கு எதிர் வெட்டாக இப்போது அவள் அவனுக்கான தண்டனையை அஸுரர் தவிர ஏனைய உலக உயிரினங்களுக்கெல்லாம் கொடுத்துவிட்டாள். அதாவது ஜீவ லோகத்தில் காமம் என்பதே இல்லாமல் செய்துவிட்டாள்.

இது நல்லதுதானே என்று தோன்றலாம். ஆனால், காமம் செத்தபின் எல்லா விஷயங்களிலும் விரக்தியும் ஞானமும் பிறந்தால்தானே நல்லது? இப்போது அம்பிகை அவ்விதம் ஆக்கவில்லை. உயிர்க்குலத்துக்குக் காமம் போயிற்றே தவிரப் பூர்ணமான விரக்தி, ஞானாதிகள் உண்டாகிவிடவில்லை. கோபம், லோபம் முதலிய இழி குணங்கள் மக்களை விட்டுப் போகவில்லை. காமம் (அதாவது பாலுணர்ச்சி) மட்டுமே போகும்படி செய்தாள். இதனால் என்னவாயிற்றென்றால், இன விருத்தி என்பது தடைப்பட்டுப் போனதில், ஜீவர்களின் வாழ்விலிருந்து அதன் பரம மதுர அம்சமான மக்களைப் பேணல், தாய்மை உணர்ச்சி ஆகியன பறிக்கப்பட்டன. உயிர்க் குல வாழ்வு வளமிழந்தது.

அது மட்டுமல்ல. மரித்த ஜீவர்கள் புண்ய-பாபங்களின் விசேஷ பலனை ஸ்வர்க-நரகங்களில் அநுபவித்தபின் எஞ்சிய பலனை மண்ணுலகிலேயே பிறந்துதானே தீர்த்துக் கொள்ள வேண்டும்? மண்ணுலகில் புதுப் பிறப்பு ஏற்பட முடியாதவாறுதான் காமமே அகற்றப் பட்டு விட்டதே! இந்நிலையில், ஸ்வர்க-நரகவாஸம் முடித்தவர்கள் கர்ம சேஷத்தை அநுபவிக்க புவிக்கு வர முடியாமல் திரிசங்கு போன்ற இரண்டுங் கெட்ட நிலையில் திண்டாட வேண்டியதாயிற்று.

உயிர்க் குலத்தை இப்படியெல்லாம் தாயே உபத்திரவிக்க முடியுமா? அம்பாள் மனம் திரவமாக உருகத் தான் செய்தது. துக்க பாரத்தைத் தானே தாங்குவதென முடிவு செய்தாள்.

உலகெங்கணும் காமம் அழிந்தாலும், பார்வதி உருவிலுள்ள தன்னிடம் மட்டும் பரமசிவனைக் குறித்து ஆசையெல்லாம் திரண்டு வரும்படி செய்துகொண்டாள். விரஹதாபத்தில் வெந்து உலைந்து குலைந்து சிவனுக்காகக் கோரத் தவத்தில் இறங்கினாள்.

இப்படியாகப் பதிக்கான தண்டனையைப் பாருக்கு ஆக்கி, பின்னர் பரிதவிக்கும் பாரிடம் பரிதாபம் கொண்டு, பார்வதி ரூபத்திலிருந்த தனக்கே தண்டனை தந்து கொண்டாள்!

காமத்தைக் குறித்த இன்னோர் உண்மையையும் இங்கு நம்முடைய புராணம் உணர்த்துகிறது.

காமத்திலேயே ஜீவ தர்மத்தோடு இசைந்ததென்றும், இசையாததென்றும் இரு பிரிவுகளை நம்முடைய சாஸ்திரங்கள் பகுத்துக் காட்டுகின்றன. கீதையிலும் கண்ணன், "நான் நீரில் சுவை; சந்திர ஸூரியரில் ஒளி; வேதங்களில் ஓம்காரம்" என்றெல்லாம் சொல்லிக் கொண்டே போகும்போது, "நான் ஜீவர்களில் தர்மம் தவறாக காமமாக இருக்கிறேன்" என்கிறான். ஒழுங்கு படுத்தப்பெற்ற மண வாழ்வினை நடத்தி மக்கட்பேறு பெறுவது சாஸ்திரோக்தமான தார்மிகக் காமமாகும். இது தொடர்பாக நமது கதையில் ஒரு நுட்பமான எழிலைக் காண்கிறோம். பண்டன் முதலானவர்கள் தம் பத்தினியருடன் ஜலக்ரீடை செய்து களிக்கத்தான் செய்கின்றனர். ஆயினும் மஹாவிஷ்ணு அந்தப் பத்தினியரையே கருவியாக்கி அஸுரர்களை மாயாமயப் படுகுழியில் தள்ளுவதற்கு எண்ணவில்லை. இதற்கெனத் தேவ கணிகையரை ஸ்ருஷ்டித்து அனுப்புகிறான். ஏன்? அஸுர ஸ்திரீகளாயினும் இவர்கள் தர்ம பத்தினிகளாக இருப்பவர்கள். அதாவது, கணவன்மாரோடு இன்ப விளையாட்டுக்களில் ஈடுபடுபவர்களாயினும், அவர்களது தர்மானுஷ்டானங்களுக்கும், கடமைக்கும், தொழிலுக்கும் குந்தகம் விளைவிக்குமளவுக்கு இன்ப நுகர்ச்சியை ஸதாகால ஈடுபாடாக இவர்கள் ஆக்கிவிட மாட்டார்கள். அந்த மங்கை நல்லாரின் இப் பண்பை, மாண்பைக் குலைக்க மாமாயனும் மனம் கொள்ளவில்லை. 'இல்லறம்' என்றே சொல்லப்படும் தார்மிக அமைப்பை அதர்மமாகச் சிதைத்துக் காட்ட அவன் விரும்பவில்லை. எனவேதான்

தர்ம விரோதமான காமத்தை உண்டாக்கி வளர்ப்பதற்காகப் புதிதாக மோஹினிப்படை படைத்தனுப்புகிறான்.

இச் சமயம் நாரத பகவான் இந்திர ஸபைக்கு எழுந்தருளினார். கர்மக் கட்டி பழுத்துவிட்ட சமயத்தில் அதைக் கீறிவிடும் மருத்துவராகத் தருணமறிந்து வந்து ஒரு திருப்பத்தை உண்டாக்குபவர் அவர். 'கலகம்' என்று உலகத்தார் தவறாகச் சொல்லும் அவரது காரியம் மட்டும் நடக்காவிடில், பழுத்த பின்னும் புதுக் கர்மத்தின் கட்டைப் போட்டுப் பழைய கர்மக் கட்டியை அமுக்கப் பார்த்து அதைப் புரையோட விடும் பேரபாயம்தான் நிகழும்!

இதை நன்கறிந்து திரிலோக ஸஞ்சாரியை உளமார வரவேற்று உபசரித்தான் உம்பர் கோமான். அக்னியென ஜ்வலிக்கும் அந்தப் பிரம்மசரிய பாவனத்தை வணங்கிக் கை குவித்து, "ஸர்வ தர்மமும் அறிந்த பகவன்! எப்போதும் சஞ்சாரம் செய்து கொண்டேயிருக்கும் தாங்கள் இதனிடையில் எங்கேனும் ஓர் இடத்துக்கு விஜயம் செய்கிறீர்களெனில் அங்கிருப்பவர்களைத் தன்யராக்க விரும்புகிறீர்களென்றே அர்த்தம். இங்கே தாங்கள் எழுந்தருளியிருப்பதால் எங்கள் எதிர்காலம் சோபையுறப் போகிறதென்று தெம்பு பெற்றோம். தங்களது வசன அம்ருதத்தைப் பருக ஆவலாயிருக்கிறேன். அதன் மூலம் தாங்கள் எங்களை இழிநிலையிலிருந்து உய்விக்க அருளும் உபாயத்தை அறிய ஆர்வமாயிருக்கிறேன்" என்றான்.

நாரதர் மறுமொழி பகர்ந்தார். "வாஸவா! பண்டன் தற்போது விஷ்ணுமாயையில் வசியமாகிக் கிடந்தாலும் எப்போது வேண்டுமாயினும் அதனின்று விடுபடக்கூடும். அதன்பின் அவனது எதிர்ப்பு முன்னிலும் கொடுமையானதாகும். எனவே இப்போதே நீ அவனை முறியடிப்பதற்கான வழி காண வேண்டும் - இதைக் கூறி உன்னை விரைவுபடுத்தவே வந்தேன்.

"உய்வுக்கு ஒரே வழிதான் உண்டு. பராசக்தியை ஆராதித்து, அவளது துணையைப் பெறுவதொன்றுதான் அது. வேறு எவ்விதத்திலும், கல்பகோடிக் காலம் தவமிருந்து அரிய சக்திகள் பெற்றாலும்கூட, அவ்வரிய சக்திகளிலும் பாதியைத் தனக்கென உறிஞ்சிக் கொண்டு விடக்கூடிய பண்டனை வெல்ல இயலாது. அவன் மாயையின் வசியத்திலிருந்து விழிப்புப் பெறுவதற்குள் அம்பிகையை அடைக்கலம் கொள்வாய். அண்டியவரை ஒரே தூக்காகத் தூக்கி உயர்நலம் அருள்பவள் அன்னை பகவதியே."

நாரதர் இப்படி உசுப்பியதற்குக் காரணம் இருந்தது. பண்டன் துராசாரத்தால் ஆதிக்கம் குன்றி வருவதை அவனுக்கு எடுத்துக் காட்டியும், இடித்துக் காட்டியும் அவனை விழிப்புறுத்துவதற்கு அஸுர குருவான சுக்ரர் நினைத்துவிட்ட சமயம் அது. அதற்கு முன்தான் திரிகால ஞானியான நாரதர் அமரர்களை அம்பிகையிடம் ஆற்றுப்படுத்த ஓடோடி வந்துவிட்டார்.

அவரது அறிவுரை கொண்ட தேவர் கோமானான சக்ரன்* உடனே தனது அமரர் கணத்தோடு இமயத் தடத்துக்குச் சென்றான். கங்கை பாய்ந்து, எக்காலமும் இயற்கையின் தளிர்ப்பைச் சிலிர்க்க விட்டிருந்த ரமணீயமான, சாந்தி மயமான சூழலில் அனைவரும் அன்னையைக் குறித்துத் தவமிருக்கலாயினர். அவர்களது அரும் தவத்தால் அவ்விடம் பிற்காலத்தில் ஸர்வ ஸித்திகளையும் நல்க வல்லதாயிற்று; இந்திரப்ரஸ்தம் என்றே பெயரும் பெற்றது. (பாண்டவர் தலைநகரமும் தற்போதைய தில்லியுமான மஹாபாரத இந்திரப்ரஸ்தம் இதுவல்ல. யமுனைக் கரையில் பாரத இந்திரப்ரஸ்தம் எழுவதற்கு யுகங்கள் முந்தியே கங்காதீரத்தில் இமயத்தில் உருவான தவ பூமிதான் நமது இந்திரப்ரஸ்தம்.)

* Sakran. (Chakran அல்ல)

# 3

அமரர்கள் இமயத்தில் அம்பிகைக்காக அருந்தவ மியற்றிக் கொண்டிருக்கும் இப்போது நாம் ஓர் அடிப் படைக் கேள்விக்கு விடை தேடுவோம்.

எதிராளி எவராயினும் அவருடைய சக்தியில் பாதி பண்டனைச் சென்றடைந்துவிடும். இவ்வாறு அவன் சாதுர்யமாக வரம் வேண்டிப் பெற்றிருந்தான் எனக் கண்டோம். நாரதரோ அம்பிகையின் துணை பெற்றால் அவனை வென்றுவிட முடியுமென்கிறார். இங்கேதான் கேள்வி எழும்புகிறது. அன்னையின் அருளால் அமரர்கள் அதிக பலம் பெற்றால் இந்த பலத்தில் பாதியும் பண்டனைச் சேர்ந்ததாகத்தானே ஆகும்? அதன் பின் அவனை எப்படி வெல்ல இயலும்?

உண்மை. அன்னையின் அருளால் அமரர்கள் அதிக பலம் பெற்றால் இப்படித்தானாகும். ஆனால் அந்த அன்னையே ஸாக்ஷாத்தாக அமரர்களின் பொருட்டு அஸுரனோடு போரிட வந்தால்?

ஏன், பண்டனின் வர பலத்தால் அப்போது அவளுடைய சக்தியிலும் பாதி அவனுடையதாக வேண்டியதுதான் என்று தோன்றுகிறதா?

இதுதான் நடவாத காரியம், முடியாத காரியம்.

ஏனெனில் அவள் யார்? அவளே சக்தி. அவளைத் தவிர மும்மூர்த்தியர் உள்பட ஏனைய எவர் பெற்றுள்ள சக்தியும் அவள் அவர்களுக்கு அளித்ததே. அவளது மஹா சக்தியின் சிறு அம்சங்களே அவர்களது சக்திகள். இவற்றில்

பாதியைப் பண்டன் தன்னுள் வாங்கிக் கொள்ள முடியலாம். ஆனால் அவளோ பூர்ண மஹா சக்தி. பிரிக்கவும் பிளக்கவும் முடியாத அகண்ட, அபின்ன சக்தி. இதிலே பாதி என்று ஒன்று பகுக்கப்படவே இடமில்லை. அனந்தத்தை, ஆகாசத்தைப் பாதியாக்குவதென்பது சாத்தியமா? அப்படித்தான் இதுவும். சக்தியேயான அவளது சக்தியைப் பாதி படுத்தவும் முடியாது. அப்படியே, பாதி படுத்தினாலுங்கூட அந்தப் பேராற்றல் பெருக்கைப் பண்டனாயினும் வேறெந்த மஹா அஸுரனாயினும் அவனால் வாங்கித் தாங்கிக் கொள்ளவும் முடியாது. இதனால்தான் நாரத மாமுனி பராசக்தி ஒருத்தியே தேவருக்குக் கதி என்று குறிப்பிட்டுக் கூறியது.

இதிலிருந்து அம்பிகை அமரர்களுக்கு அருட் துணையும் அருட் பலமும் தருவது மட்டுமின்றித் தானே அவர்கள் சார்பில் அமர் புரிய வரப்போகிறாளென்று ஆகிவிட்டதல்லவா?

தேவராஜனான சக்ரன் ஹிமோத்கிரியில் தேவியைக் குறித்துத் தவம் தொடங்கி நெடுங்காலமாகி விட்டது. அங்கே சோணிதபுரத்திலோ காமமோஹிதனாகக் கட்டுண்டு கிடந்த பண்டனிடம் அஸுரகுரு சுக்ரர் சென்று புத்தி புகட்டிவிட்டார். விஷ்ணுமாயைக்கு அவன் வசப் பட்டு விட்டதையும், விச்வவியாபகமாகத் தன் ஆட்சியை நிலைநாட்டிக் கொள்ளும் லட்சியத்தை அதனால் மறந்து விட்டதையும் அழுத்தமாக எடுத்துக் காட்டி அறிவுறுத்தி விட்டார்.

பண்டன் குறிப்பாகக் குரோதத்துக்கே உருவக மானதால், உடனே போர் வெறியில் உசுப்பப்பட்டுப் பெண் மயக்கினின்று விடுபட்டான்.

அசுரர்களின் சங்கற்ப பலம் அதிசயமானது. இதற்குப் புராணங்கள் காட்டும் அநேகச் சான்றுகளில் இதுவும் ஒன்று. ஆன்மிய லக்ஷ்யங்களுக்காக உத்தம ஸாதகர்

களுங்கூடக் கைவிட முடியாமல் சிரமப்படும் பெண் மயக்கி லிருந்து ஆஸுர லக்ஷ்யத்துக்காகப் பண்டன் கணத்தே விடுபட்டு விடுகிறான்!

நம்முடைய ஸ்ரீமாதாவின் ஆவிர்பாவத்துக்கான காலம் வந்துவிட்டதென்று திருமால் தனது இடைக்கால மாய நாடகத்துக்குத் திரை விழச் செய்தானென்றும் சொல்லலாம்.

பண்டன் மீண்டும் போருக்குப் புறப்பட ஆயத்தமாகி விட்டானென்று இந்திரனுக்குத் தெரிந்தது. 'நடுவிலே ஓய்ந்திருந்துவிட்டு இப்போது மீண்டும் கிளர்ந் தெழுந்திருப்பதால் முன்னிலும் பயங்கரமாகத் தாக்குவான் என்பது நிச்சயம். தேவியோ இன்னும் பிரஸன்னமாகாமல் சோதிக்கிறாள். இப்போது செய்யக்கூடியதென்ன?' என்று இந்திரன் யோசித்தான். யோசித்து, முடிவாகச் செய்த தீர்மானத்தை மற்ற தேவர்களுக்குக் கூறினான்.

"பண்டன் படையெடுத்து வரப் போகிறான். அவனுக்கு முகம் கொடுக்க நம்மால் இயலாது. அம்பிகை தான் நமக்கு ஒரே கதி என்பதை மறக்க வேண்டாம். அவள் நம் தவத்துக்கு இறங்கி நம்மிடம் வராவிடில் என்ன? நாம் அவளிடம் போய்ச் சேருவோம். அதாவது, 'மஹா யாகம்' என்னும் முறைப்படி அக்னி குண்டம் அமைப்போம். அதில் நம் அங்கங்களை அறுத்துப் போட்டு ஆஹுதி செலுத்துவோம். இதிலே அம்பிகை ப்ரீதியுற்றால் நமக்குத் தேவ ராஜ்யாதிகாரத்தை நிச்சயமாக உறுதிப்படுத்திக் கொடுத்துவிடுவாள். அல்லது நாம் ஏதோ ஊனிலே சில பகுதிகளை அர்ப்பிப்பதால் மட்டும் அவள் ப்ரீதியுறாவிடில், முடிவாக நம் சரீரத்தையே அக்னி குண்டத்தில் இட்டுவிடுவோம்; அதாவது நம் ஆவியையே அவளுக்கு அவியாக்கி அவளைச் சென்றடைந்து விடுவோம். அப்போது அவள் நம் உயிரை அவளுக்குள் கரைத்துக் கொண்டு, தேவ ராஜ்யத்துக்கும் மேம்பட்ட

ஆத்ம ஸாம்ராஜ்யத்தை அருளி விடுவாள். ஆக, இரண்டிலொரு ராஜ்யத்தைப் பெறுவதற்காக மஹாயாகம் தொடங்குவோம்" என்றான்.

பண்டனிடம் தோற்பதன்றி வேறு வழியில்லாத நிலையில் இவ்வாறு தங்களை அம்பிகைக்குப் பலி தருவதொன்றே அறிவுடைமையென்று அத்தனை அமரர்களும் ஏற்றனர்.

மஹாயாகம் தொடங்கப்பட்டது.

ஓங்கி ஒளிரும் வேள்வித் தீயில் தேவர்கள் தங்களது ஒளிமயமான அவயவங்களைச் சற்றும் தயங்காது செகுத்துச் செகுத்து மந்திரபூர்வமாக அர்ப்பித்தனர்.

அவர்களது பக்தி, சிரத்தை, லக்ஷ்ய ஈடுபாடு ஆகியவற்றின் முழுச் சிறப்பையும் உலகுக்கு வெளிப் படுத்துவதற்காக அம்பிகை சோதனையை மேலும் சற்று நீடித்தாள்.

வெட்டக் கூடிய அங்கங்களையெல்லாம் "ஸ்வாஹா" செய்தாயிற்று. அப்புறம் அமரர்கள் எஞ்சிய தங்களது சரீரங்களோடு தாங்களே வேள்விக் குண்டத்தில் புகுந்து விட்டனர்.

அவ்வளவில்,

ஆஹா! உதித்தே விட்டாள் ஸ்ரீமாதா சிருடன்!

முதலில் யாகாக்னியினின்று அவ்வக்னியை விடப் பேரொளி கூடிய ஓர் இணையற்ற ஜோதி எழும்பியது. அதிசய ஜோதி!

கோடி ஸூரியனாகப் பிரகாசித்த போதிலும், சற்றும் கொளுத்தாமல், கோடி சந்திரனாகத் தண்மை நல்கிய ஜோதி! சந்திரனிலிருந்து அமுதம் பெருகுமெனில், இந்த ஜோதியிலிருந்தோ, அனைவர்க்கும் அன்னையான ஸ்ரீமாதாவின் அன்பமுதம் அதனினும் இனித்ததாகப்

பெருகியது. அதிலே அமரர்களின் கரிந்த மேனிகள் புத்துயிரும் புத்தெழிலும் புதுத் தெம்பும் பெற்று எழும்பின. இவர்களது தவத்தை அவள் அங்கீகரித்ததில், அறுத்துப் பொசுக்கிய அங்கங்கள் செழித்து மீண்டும் வளர்ந்தன.

இப்படி அமரர்கள் புத்துருவம் பெறும்போதே அந்தச் செக்கர் பெருஞ்சோதியும் திவ்ய மாதாவாகத் திருவுருவம் பெற்றது.

திருவாழி ஒன்றினுள் திகழ்ந்தாள் திருவுருக் கொண்ட திரிபுரஸுந்தரி.

ஸ்ரீசக்ரம் என்பதுதான் அந்தத் திரு ஆழி. அடுக்கடுக்காய், ஒன்றினுள் ஒன்றாய், ஒன்பது வரிசையாய் அமைந்த அதுதான் அன்னைக்கும், அவளது உறைவிடத் துக்கும், ஸகல பரிவாரங்களுக்கும், பிரபஞ்சம் முழுதற்குமே ஒருங்கே உருவமாக அமைந்த ஸ்ரீயந்த்ரமாக உபாஸிக்கப் படும் சக்கிரம்.

தோன்றும்போதே தன்னோடு இணை பிரியாத தான ஸ்ரீசக்ரத்துடன் தோன்றினாள்.

தேவியின் ரூப ஸௌந்தர்ய ஸ்ரீயை எப்படி வர்ணித்து முடியும்? மூவுலகிலும் அதற்கிணையான அழகு இல்லாததால்தான் அதை 'த்ரிபுரஸுந்தரி' என்பது. ஸ்தூலம்-ஸூக்ஷ்மம்- காரணம் என்ற மூன்று புரங்களுக்கும் உள் இலங்கும் அழகாம் ஆத்மாவே அதுவாதலாலும் த்ரிபுரஸுந்தரி.

செந்தீயிடையிருந்து உற்பவித்து, அதனினும் காந்தி வாய்ந்த செவ்வுதயக் கதிரவனின் வண்ணத்தில் அவள் தோற்றமளித்த போதிலும் இந்தச் சிவப்பு கண்ணை உறுத்த வில்லை. கண்ணுக்கு மட்டுமின்றிக் கருத்துக்கும் மென்மையின் மதுரத்தையே ஊட்டியது. பூர்ண சக்தியின் ஆவிர்பாவமாயினும் தனது ஆற்றலால் அதிசயிக்கவும் அச்சுறுத்தவும் செய்யாமல், அவகதி உற்ற அமரரை ஆற்றித்

தேற்றும் அருமை அன்னையாகத் தன்னைக் காட்டிக் கொள்ளவந்த கருணாமூர்த்தமே அது. அதனால் இதைவிட இனிமையும், குளுமையும், வளமையும், மென்மையும் வாய்ந்ததாக எதுவுமே இருக்க முடியாது என்னும்படிப் பரம லலிதமாக உருக்கொண்டாள். 'லலிதா' என்றே விசேஷ நாமமும் கொண்டாள்.

குழந்தைகளைக் கொஞ்சிச் சீராட்டுவதற்கு 'லாலனம்' என்று பெயர். அவ்வாறு அன்று அமரரையும், அன்றிலிருந்து அடியார் அனைவரையுமே தனது உருவப் பாங்கினாலேயே அருமைக்கிட்டுச் செல்லம் கொடுக்கும் தாய்தான் லலிதை. அழகுச் சாரத்தின் எல்லை ('ஸௌந்தர்ய ஸார ஸீமா'), ஆனந்தச் சாற்றின் ஆழ்கடல் ('ஆனந்த ரஸ ஸாகரா') என்றெல்லாம் புராணம் வர்ணிக்கும் அவளை ஆதி சங்கரரும் 'ஸௌந்தர்ய லஹரி' யெனும் அழகு வெள்ளமாகவே துதித்திருக்கிறார்.

உதயத்திற்கு முந்தைய அருணகால வானம் போன்ற மேனி வண்ணம் கொண்டதால் 'அருணா' எனப் பெயர் பெற்றவள் இக் கருணாகரி. மாதுளம்பூப் போன்ற செந்நிற வஸ்திரம் பூண்டு திகழ்கிறாள். இப்படி ஒரே சிவப்பு மயம். ஏனெனில் சிவப்புத்தான் அன்பின் நிறம்; ஆற்றலின் நிறமும்.

யாவும் அடங்கிய சிவ வெண்மையிலிருந்து உலக நாடகமாகிற வர்ண பேதங்களை உண்டுபண்ணும் infra-red என்பார் நம் காஞ்சி முனிவர்!

கேசாதி பாதம் திவ்யாபரணங்களோடு ஒளிரும் அன்னை, தன் அங்க ஸம்பந்தத்தால் அந்த ஆபரணங் களுக்கு அழகூட்டுகிறாளேயன்றி, தான் அவற்றால் அழகு பெறவில்லை. "அணியும் அணிக்கு அழகே!" என்பாரே அபிராமி பட்டரும்!

தீர்க்கமான அவளது திருநயனங்களில் கிருபை அலையடித்து மோதுகிறது.

பார்க்கப் பார்க்கத் தண்மதியமென நெஞ்சுக்கு மிருது மதுர இன்பமூட்டும் வடிவம்.

ஜகத்துக்கெல்லாம் உயிர் சக்தி தரும் பராசக்தி, பிரம்ம விஷ்ணு ருத்ரர்களுக்கும் மூலமான மஹாசக்தி அன்பில் நெருங்கத் தக்க அழகுத் தாயாய் வந்திருக்கிறாள்.

முரண்பாடுகளாகத் தோன்றுபவையும் இடறாமல் ஒன்று சேரும் அற்புத ஸங்கமம் நமது லலிதா மஹா த்ரிபுரஸுந்தரி. அதனால், செல்லம் கொடுக்கும் தாயாயிருக்கும்போதே, நம்மைத் தவற்றிலே செல்லாமல் கண்டிக்கும், தண்டிக்கும் மஹாராணியாகவும் தன்னைக் காட்டிக் கொள்கிறாள். ஸஹஸ்ர நாமத்தில் முதல் நாமம் 'ஸ்ரீமாதா' எனில் அடுத்ததே அவளது பேரரச ஆணையைக் குறிக்கும் 'ஸ்ரீ மஹாராஜ்ஞி' என்ற நாமமாகும்.

நான்கு கரங்களுடன் தோன்றிய அவள் அக் கரங்களில் தாங்கியுள்ள ஆயுதங்களால் நம்மை இவ்வாறு அரசியாக அடக்கிச் செந்நெறிப் படுத்துவதையே காட்டுகிறாள். ஒரு கையிலுள்ள பாசம் கொண்டு நம்மைத் தன்னிடம் கட்டுண்டு கிடக்கச் செய்கிறாள். அவளுக்கு நம்மிடமுள்ள பாசத்தாலே, நாம் இதர பாசங்களில் இடர்ப் படாமல் அவளிடமே கட்டுப்பட்டுக் கிடக்கச் செய்கிறாள். இன்னொரு கையிலுள்ள அங்குசம் அவள் நமது கோப குணத்திடம் கோபம் கொண்டு அதைக் குத்தி நம்முடைய மமதை மதத்தை அடக்குவதற்காகக் கைக் கொண்டதே யாகும். முன்னிரு கரங்களில் அவள் தாங்கும் ஆயுதங்கள் கரும்பு வில்லும் மலரம்புமாகும். முரண்கள் ஒன்று சேர்கின்றன! இரும்பு வில்லுக்குப் பதில் இனிப்பு மயமான கரும்பு வில்! நம் மனத்தை வசியப்படுத்தி அடக்கி அழிக்கும் அவளது அருள் மனத்துக்கே இந்த தநுசு அடையாளம். குத்தும் அம்புகளுக்குப் பதிலாகவோ பரம மென்மையான புஷ்ப பாணங்கள்! நம்முடைய ஐந்து புலன்களை அடக்கித் தெய்வ ரஸத்தில் தோய்க்கவே ஐந்து மலர்களை அம்பாகக் கொண்டிருக்கிறாள். காமன் எந்த

வில்லையும் அம்புகளையும் கொண்டு மக்களை சிருங்காரத்தில் ஆழ்த்துகிறானோ அதே கரும்பையும் மலர்களையும் கொண்டு ஞானத்தில் ஆழ்த்துபவள் இவள்.

பெரிய முரண்பாடு பாருங்கள்! ஞான மாதாவான இவளுமே சிருங்கார ரஸம் ஒன்று சேர்ந்த தேக்கமாகவும் — "ச்ருங்கார ஏக ரஸாலயா"வாகவும் — இருக்கிறாளாம்!

அது ஏனென்று பார்க்கலாம்.

# 4

காம தஹனத்தில் நம் கதை தொடங்கிற்று. பொல்லாத காமம் ஒழிந்தாலன்றி ஞானமில்லை, ஆன்மாவுக்கு உய்வில்லை என்பது யாவரும் அறிந்ததே. ஜீவனுக்கு மாபாவம் விளைக்கும் மஹா சத்துரு காமமும் குரோதமுமே என்று கீதாசாரியனும் கூறுகிறான். இவ் விரண்டில் குரோதத்துக்கு உருவகமான பண்டனை அழிக்கவே லலிதை உத்பவித்திருப்பதைக் கண்டோம். ஆனால் இவளே காமன் விஷயமாக என்ன செய்யப் போகிறாளென்று கதை முடிவில் பார்க்கும்போது ஓர் ஆச்சரியமான முரண்பாட்டைக் காண்போம். ஈசன் பொசுக்கிய மதனனை இவள் மறுபடி அதிசய வளமையுடன் புனர்ஜன்மம் கொள்ள வைப்பதைக் காண்போம்! அந்த முடிவுக்கு ஒரு தொடக்கமாகத்தான் இப்போது இவளது உத்பவ வர்ணனையிலேயே இவளைப் புராணம் "ச்ருங்கார ஏக ரஸாலயா" — 'சிருங்கார ரஸம் அப்படியே ஒன்று கூடிய தேக்கம்' என்று கூறுகிறது. மேலே புராணத்தைத் தொடரும்போது இவள் காமேச்வரி என்றே சிறப்பிக்கப்படுவதைப் பார்ப்போம். அது மட்டுமில்லை,

காமநாசனனான ஈசனையும் இவள் காமேச்வரனாக்குவ தாகப் பார்ப்போம். மந்திர-தந்திர சாஸ்திரங்களிலும் தாம்பத்திய பரிபாஷையிலேயே காமகலா என்ற இவளது வழிபாடான ஸ்ரீ வித்யா உபாஸனை விவரிக்கப்படும்.

மோக்ஷ தாயகியான ஞானமாதா இவ்வாறு ச்ருங்காரத்துடனே சிறப்பாக ஒன்றுபடுத்தப் பெறுவது எப்படி?

இதில்தான் சாக்த நெறியின் ஸாரமே இருப்பதால் இவ்விஷயத்தை ஓரளவேனும் தெரிந்து கொண்டாலன்றி இச் சரிதை நிறைவு பெற்றதாகாது.

உலக வாழ்வு ஜீவனுக்குப் பலவிதமான உலைப்புக் களை உண்டாக்கி, அவன் பரமாத்மாவுடன் ஒன்றுபட முடியாமல் தடுக்கிறது என்பதால் உலகை மாயை என அப்படியே ஒதுக்கித் தள்ள வேண்டுமென்பது அத்வைத வேதாந்த நெறி. ஆயின் இவ்வுலகில் எத்தனை அருமையான அன்புகளும், அழகுகளும், அதிசய இசைவுகளும், அற்புத ஆற்றல்களும், அரிய ஒழுங்குகளும் உள்ளன? இவற்றை மாயக் கற்பனை என ஏன் ஒதுக்க வேண்டும் என்று சாக்தம் எண்ணுகிறது. இவற்றுக்கெல்லாம் ஆதாரமான ஒரு மஹாசக்தியுடன் கூடியே மெய்ப்பொருள் தனது ஆனந்த லீலையாக லோக நாடகத்தை நடத்துகிறது என்று இந்த நெறி இயம்புகிறது. மாயையாக அன்றி, லீலையாகவே உலகைப் பார்க்கவேண்டுமென்கிறது. மாயை என்னும் போது வெறும் பொய்க் கற்பிதமாக உலகம் ஒதுக்கப் படுகிறது. லீலை எனும்போது? இப்போதும் இதுவே இறுதி ஸத்தியமாக எண்ணப்படவில்லை. லீலை என்றால் விளையாட்டு. "விளையாட்டுக்குச் சொல்வது" என்றால் அதுவே உண்மை அல்ல என்றுதானே பொருள்? ஆயினும் விளையாட்டு என்பது முழுப் பொய்யும் அல்ல. அதில் களிப்புக்கான வித்து இருக்கிறது; அதை ஆடிப் பார்ப்பதற் கென ஒழுங்குச் சட்டங்கள் உள்ளன; 'விளையாட்டு

விளையாச்சு' என்பது போல இதுவே முழு உ
கொண்டு சேர்க்கவும் இடமிருக்கிறது.

இவ்வாறான லீலானந்தத்துக்காகப் பரமாத்மா அன்புக் கடலாக, ஆற்றல் ஊற்றாக, அறிவு மயமாக, அழகுக் களமாக, ஒழுங்குக் களஞ்சியமாக உள்ள ஒரு மஹா சக்தியுடன் கூடுவதையே சாக்தமானது சிவ-சக்தியரின் சிருங்கார தாம்பத்தியம் என்கிறது; சாந்தப் பாழான பரசிவத்துக்கு லோக நாடகம் புனைவதில் ஏற்படும் ஆசையையே அதனுடைய காமம் என்கிறது. சாந்தமான ஒரு பாழுக்கு இப்படிப்பட்ட சக்திகரமான காமம் உண்டாக வேண்டுமெனில் இதைத் தூண்டுவிப்பதும் அந்த மஹாசக்தியாகத்தானே இருக்க வேண்டும்? இதனால்தான் அவளை 'ச்ருங்கார ஏக ரஸாலயா' என்றும், 'காமேச்வரி' என்றும் சொல்லி, அவள் காமாரியையே காமேச்வரனாக்கி விடுகிறாள் என்கிறது!

பரப்பிரம்மமாகிய பரமசிவனிடம் உலகக் குழந்தை பிறக்க வேண்டுமானால் அப்போது அவனுக்குக் காமமும் காமினியும் இருக்கத்தானேவேண்டும்?

படைப்பு என்பது மாயப் பொய் என்காமல், படைப்பு பராசக்தியின் லீலை என்னும்போது அவள் அப் படைப்பை ஈன்றெடுப்பதற்கு ஒரு பதியுடன் சேரத்தானே வேண்டும்?

இனி ஜீவர்கள் சங்கதியைப் பார்ப்போம். இவர்கள் உலகை அன்புக்கும், அழகுக்கும், அறிவுக்கும், ஒழுங்கிசைவுக்கும் உறைவிடமாகப் பார்த்து, இது பராசக்தி லீலையெனக் கொண்டு ஏற்று ரஸித்து வாழ வேண்டும்; இதனைக் கோபத்தோடு ஒதுக்க வேண்டாமென்பதற் காகவே, கோப வடிவான பண்டனை அம்பிகை வதைத்தது. தங்களது வாழ்வையே தங்களதாக இன்றி அவள் விளையாட்டாக நுகரும் இந்த லீலா ரஸிப்பிலே முன்னேற

முன்னேற உலக வாழ்வில் உலைப்பைத் தருவதான காமம், க்ரோதம் முதலானவை தாமாகவே சிறுகச் சிறுக இற்றுவிழும். பரிணாம ரீதியில் இப்படிப் படிப்படியாய் முன்னேறினால் இறுதியில் அந்தப் பராசக்தி பரசிவத்தில் ஒருமித்துவிடுகிற ஸ்தானத்தில் ஜீவனும் அவ்வாறே அத்வைதமாக ஒன்றி விடுவான்.

இங்கேதான் சாக்தம் வைஷ்ணவத்தினின்று மாறுபடுவது. வைஷ்ணவமும் மாயைக் கொள்கையை ஏற்காமல் லீலையை மதிப்பதுதான். ஆனால் அதில் இறுதியிலும் ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஐக்கிய முறுவதில்லை; என்றும் பிரிந்திருந்து லீலானந்த, பிரேமானந்தங்களில் திளைத்திருப்பதே அதன் முக்தி. சாக்தமோ சக்தி விளையாடல்களுக்கெல்லாம் ஆதாரமான சாந்தத்தில் அதுவே தானாக ஜீவாத்மா அடங்கும் அத்வைத முக்தியைக் காட்டுகிறது. த்வைத லீலையை அது பார்த்து ரஸிப்பதெல்லாமுங்கூட அத்வைத அடிப்படையை மறவாமல், அதில் ஊன்றி நின்றவாறுதான்.

உலக வாழ்வு கிரமமான ஒழுங்கு விதிகளுடன் வாழ வேண்டிய விளையாட்டு என்னும்போது ஜீவர்கள் தமது முன்வினைகளை விட்ட இடத்திலிருந்து தொடங்கிக் கொஞ்சம் கொஞ்சமாகக் கழித்துக் கொண்டு பரமாத்ம ஸ்தானத்தை நோக்கி முன்னேற வேண்டுமென்றாகிறது. இதிலே பூவின் கசப்பு பிஞ்சின் துவர்ப்பாகி, பிஞ்சின் துவர்ப்பு காயின் புளிப்பாகி, காயின் புளிப்பு இறுதிநிலை யான கனியின் மதுரமாக வேண்டும். காம-க்ரோதங்களில் அடிபட்டு ஈட்டிய முன்வினையை முற்றிலும் தீர்த்துக் கொண்டு, அடிபட முடியாத நிலையை அடைவதற்கு முன், அதற்குப் படி வரிசையாகவே பூவிலிருந்து பழமாகும் இந்தக் கிரமத்தில் நெடுந்தூரம் காம-க்ரோதங்களும் உடன் வந்தேயாக வேண்டியிருக்கும். காம-க்ரோதம் என்று இரண்டாகச் சொன்னாலும், க்ரோதம் என்பதும் ஈடேறாத காமத்தின் விளைவே ஆதலால் காமம் ஒன்றைக் குறிப்

பிட்டாலே போதும். 'அது இருக்கவும் வேண்டும், ஆனால் நம்மை ஒரேயடியாகத் தன்னில் இழுத்துக் கொள்ளாமல், சிறிது சிறிதாகப் பழவினையை அறுக்கவே பயனாக வேண்டும்' என்னும் நிலையில் ஜீவனானவன் காமத்தை அளவறிந்து கைக்கொண்டு, அது அந்த அளவை மீறாமல் தடுத்துக் காத்துத் தரப் பராசக்தியைப் புகல் கொள்ள வேண்டும். இங்குதான் அவள் காமனை அடக்கியாளும் — அழித்தே விடாமல் அடக்கி மட்டுமே ஆளும் — காமேச்வரியாகிறாள். நம் மன ஓட்டப்படி காமத்தையும் க்ரோதத்தையும் கட்டுக்கரையின்றி விட்டுவிடாமல் அவள் கைக்குட்பட்ட சக்திகளாக இவற்றைக் கொள்ள வேண்டு மென்றே அவள் ஆசை வடிவான பாசத்தையும் கோப வடிவான அங்குசத்தையும் கைகளில் கொண்டிருக்கிறாள் என்று சொல்வதும் உண்டு. ஆயினும் இறுதி நிலையில் காமமும் க்ரோதமும் அழிந்துபட்டே ஆக வேண்டுமென்று உணர்த்தத்தான் பரசிவன் காமனை எரித்தான்; ஸ்ரீமாதா க்ரோதனான பண்டனை வதைக்கப் போகிறாள்.

நல்லது தீயது இரண்டும் கலந்த உலக லீலையில் ஈடுபாடுற்றும் அதிலுள்ள நல்லதை மட்டுமே எடுத்துக் கொள்வதோ, இதற்கும் ஒரு படி மேலே போய்த் தீயதிலும் கூடப் பராசக்தியின் விளையாட்டின்பை அநுபவிப்பதோ பக்குவமும், விவேகமும், அவளது அருட்துணை வேண்டி ஸதாவும் கிடக்கின்ற எளிமைப் பணிவும் பெற்ற அபூர்வப் பிறவிகளுக்கே சாத்தியம். அப்படியில்லாத ஜீவர்கள் சாக்தத்தை மேற்கொண்டதால்தான் பல விரஸ, விகாரங் களுக்கு இடமேற்பட்டு விட்டது. இதைக் கருத்தில் கொண்டே அத்வைத ஆசார்யர்கள் உலகை மாயை என்று ஒரேயடியாக ஒதுக்கிப் பரமாத்ம த்ருஷ்டியை மட்டுமே பயிலச் சொல்லியிருக்கக்கூடும். அவர் கூறிய முடிவாகிய அந்தப் பரமாத்ம-ஜீவாத்மாக்களின் அத்வைதமான ஐக்கியத்துக்குப் பிறகு அதை அடைந்த பிரம்மஞானியும் உலகைப் பராசக்தியின் லீலானந்த நிலைக்களனாகத்தான் பார்த்திருக்கிறான். இது அவரே தமது மடங்களில்

விசேஷமாக ஸ்ரீசக்ர பூஜையை விதித்திருப்பதிலிருந்தும், அவற்றிலொன்றின் பீடசக்தியாக ஸ்ரீ லலிதையேயான காமகோடி காமாக்ஷியைக் கொண்டிருப்பதிலிருந்தும் தெரிகிறது. காமேச்வரியே இங்கு காமம் முடியும் கோடியான அத்வைத ஆனந்தமாகிறாள்! தர்ம-அர்த்த-காம-மோக்ஷம் எனும் நான்கில் காமத்தின் கோடியில் வரும் மோக்ஷமாகிறாள்!

அந்த பரம ஸத்தியமான முடிவு ஸ்தானத்தில் அவளும் அவனுமே பேதமற்று ஒன்றாகி விடுவதால் அவள் 'ச்ருங்கார ஏக ரஸாலயா'வாக இருக்க மாட்டாள்; 'சித் ஏக ரஸ ரூபிணி' என்று ஸஹஸ்ர நாமம் சொல்வதற்கேற்ப, தன்னில் தானாம் தனியொன்றின் ஆற்றலும் அறிவும் உணர்வும் ஒன்றுபட்ட உயிர்ப்பான 'சித்' என்ற ஒன்றின் கொழுஞ்சாறே அங்கு எஞ்சி நிற்கும்.

"உலகம் மாயை அல்ல, லீலையே" என்பது அந் நிலையில் மேலும் விளக்கமுற்று "உலகம் மாய லீலையே" என்றாகும்! அதாவது ஒரே பரம்பொருள்தான் பலவாகத் தோன்றும் மாய வேஷத்தைப் போட்டுக் கொண்டு லீலானந்தத்தில் திளைக்கிறது என்று ஆகும். அதாவது இது ரஸிப்புக்குகந்த மாயை!

இந்த தத்வ நுட்பங்களை இங்கே கொண்டு வருவதற்குக் காரணம் என்னவெனில், லலிதா தேவியின் ஆவிர்பாவ கட்டத்தில் தேவர்கள் தமது தேகங்களைப் பலியிட்டுக் கொண்ட அக்னி குண்டத்தில் அவள் உதித்ததாக மட்டுமே கூறியிருந்தாலும், பின்னால் ஸ்ரீசக்ரச் சுற்றுகளை விரிவாக வர்ணித்து முடிக்கும் இடத்தில் அவள் "சித்-அக்னியிலிருந்து உண்டானவள்" (ப்ராதுர் பூதா சிதக்னித:) என்று கூறியிருக்கிறது. ஸஹஸ்ர நாமத்திலோ ஆரம்பப் பெயர்களில் ஒன்றே "சித் அக்னி குண்ட ஸம்பூதா" என்று தெளிவாக அமைந்திருக்கிறது. இதிலிருந்து தேவர்கள் தமது தேக உறுப்புக்களை ஒவ்வொன்றாக அறுத்து ஆஹுதி செய்துவிட்டு முடிவில் தாங்களே வேள்வித் தீயில்

புகுந்தார்கள் என்பதற்கு உட்பொருள் கிடைக்கிறது. அதாவது, அவர்கள் தங்களது சரீர உணர்வு, ஆற்றல், அறிவு, உயிர் யாவற்றையும் அறவே அம்பிகைக்கென அர்ப்பணித்து விட்டுத் தனி ஜீவபாவம் என்பது இன்றித் தாங்களே ஏகப் பேருணர்வும், ஆற்றலும், அறிவுமான பேருயிராம் சித்தில் ஒன்றுபட்டிருக்க முயன்றதையே ஸ்வய பலி என்று கூறியிருப்பதாக ஏற்படுகிறது.

"அம்பிகை தேவ ராஜ்யமோ, ஆத்ம ஸாம்ராஜ்யமோ எதுவோ ஒன்று அளிக்கட்டும்" என்று இந்திரன் சொன்னான் அல்லவா? சித்தில் ஐக்கியமுறுவது தான் ஆத்ம ஸாம்ராஜ்யம்.

ஆனால் அந்த லீலா விநோதக்காரி இன்னும் இவர்களை வைத்துக்கொண்டு நிறைய விளையாட்டுப் பார்க்க விரும்பி விட்டாள். அதனால் அவர்கள் பேருயிரில் கரைந்து விடாதபடித் தனி உயிர்களை அவர்களுக்கு மீண்டும் கொடுத்தாள். அவர்களது பேருணர்வைக் கலைத்து சரீர உணர்வைத் தந்தாள். இதைத்தான் அவர்கள் எரிந்த தங்களது தேகங்களை மீண்டும் அவளருளால் பெற்றனர் என்பதாகக் கண்டோம்.

தனிச் .சித்தத்தின் அஹங்காரத்தால் தருக்குற்றுக் கனன்ற தக்ஷனின் யஜ்ஞத்தில் அக்னி குண்டத்தில் தன்னை அழித்துக் கொண்டவள், குளிரன்புடன் தனக்காகத் தவமிருந்த பனிமலையனுக்குப் பார்வதியாகப் பிறந்த பொருத்தத்துடன் மேலும் பொருத்தமாக, தனிச் சித்தங்களையெல்லாம் ஒரே சித்தில் பலி தந்த தேவரின் யஜ்ஞ குண்டத்திலும் இன்னோர் உருக்கொண்டு உத்பவித்தாள்.

சித்-ஜோதியே லலிதையாய் அவதரித்து விட்டது.

புத்துடல் பெற்ற தேவர்கள் தங்கள் எதிரே திகழ்ந்த ரக்ஷகியான தேவியின் திவ்ய கடாக்ஷாம்ருதத் திவலைகளில்

நணைந்தனர் அதில் அவர்களது உடல் வஜ்ரமென உறுதி பெற்றது. உள்ளமோ மெழுகெனக் குழைந்தது.

'அனைத்தும் அருளும் அன்பு நிலையம் இவள்' என்று பார்த்த மாத்திரத்திலேயே கண்டு கொண்டு அவளை அகம் குவிந்து துதிக்கலாயினர்.

இத் துதி 'லலிதா ஸ்தவராஜம்' என்று வழங்குகிறது. லலிதை குறித்த தோத்திரங்களுக்கு அரசாகத் திகழ்வது என்று பொருள்.

ஜய தேவி ஜகன்மாத:!
ஜய தேவி பராத்பரே!
ஜய கல்யாணநிலயே!
ஜய காமகலாத்மிகே!

என்ற எளிய, இனிய, புனிதச் சொற்களுடன் தொடங்கும் இத் துதி முப்பது சுலோகங்களில் அன்னையின் அளப்பரும் வைபவங்களை இசைக்கிறது. விச்வாகாரமாக அவளே உருவெடுத்து நிற்பதைச் சொல்லும்போது, "உலகைச் செய்வதென்பது உன் விளையாட்டின் பொருட்டாகும். இதிலே சித் ஸ்வரூபனான சிவனையே உனக்கு ஸகாவாகக் கொள்கிறாய். ஆஹாரமாக ஆரா ஆனந்தத்தை உண்கிறாய். உறைவிடமாக நன்மக்களின் இதயத்தைக் கொள்கிறாய்" என்கிறது.

நமோ நமஸ்தே ஜகதேகமாத்ரே!
நமோ நமஸ்தே ஜகதேகபித்ரே!
நமோ நமஸ்தே (அ)கில தந்த்ரரூபே!
நமோ நமஸ்தே (அ)கில யஜ்ஞரூபே!

என்பதாக அந்த ஜகன்மாதாவையே ஜகத் பிதாவாகவும் உணர்ந்து, ஆகம தந்திரங்கள் அனைத்துக்கும் வடிவான அவளையே எல்லா வைதிக வேள்விகளுக்கும் உருவாகப் போற்றிய விண்ணவர்கள் மீண்டும் மீண்டும் வணங்கி

*யெழுந்தார்கள். முடிவாக ப்ரஸன்ன உள்ளத்தோடு வரப்ரஸாதம் வழங்குமாறு அவளை வேண்டினார்கள்.*

ப்ரஸீத விச்வேச்வரி விச்வ-வந்திதே!
ப்ரஸீத வித்யேச்வரி வேதரூபிணி!
ப்ரஸீத மாயாமயி மந்த்ரவிக்ரஹே!
ப்ரஸீத ஸர்வேச்வரி ஸர்வரூபிணி!

*தேவி திருவுளம் குளிர்ந்தாள். அடி பணிந்த அமரர்கோன் மீது அருட்கண் பாலித்தாள். "கேள் வரத்தை!" என்றாள்.*

*பரம மங்கள ஸ்வரூபமாய் நின்ற அவளை, "கல்யாணி!" என்றழைத்த சக்ரன், "நீ வரம் கொடுக்க ஆனந்தமாய் மனம் கொண்டுவிட்டாய். நாங்களோ அஸுரேந்திரனால் பீடிக்கப்பட்டும் தேகத்தில் எப்படியோ உயிரைத் தரித்துக் கொண்டு உன்னை சரணாகதி அடைந்திருக்கிறோம்!" என்றான்.*

*அசுரப் பீடிப்புத் தாளாமல் அக்னியிலிட்ட அவர்களது தேகங்களை உயிர்ப்பித்தவள் அவள்தானே? இப்போது ஸந்தோஷமாக வரம் தர வந்து விட்டாள். இதை அவளுக்கு எடுத்துக் காட்டுவதற்கு அதிகமாக வரம் என்று ஒன்று ஏன் கேட்க வேண்டும்?*

*உயிர்க்குல முழுதற்கும் வரதையான லலிதை அவன் வாய்விட்டுக் கேளாத வரத்தைத் தான் வழங்குவதாக வாய்விட்டே மலர்ந்தாள். "பண்டனை நானே விரைவில் வெல்வேன். உனக்கு முவ்வுலகையும் அளிப்பேன்!" என்றாள்.*

*பூர்ண அபின்ன சக்தியான அவளொருத்திதான் பண்டனை எதிர்த்து வெல்ல முடியுமாதலால்தான், தானே நேரடியாக அவனுடன் போரிட்டு வெல்வதாக ஐயத்துக்கிடமறக் கூறிவிட்டாள்.*

தேவர்கள் விரும்பியது அதுதானே? பயம் தொலைந்து ஆனந்த பரவசமானார்கள்.

5

**தா**யிடமிருந்து குழந்தைகள் உண்டாகும். இங்கோ குழந்தைகளுக்காகத் தாய் உண்டாகியிருக்கிறாள்! தேவக் குழந்தையரைப் பண்டனிடமிருந்து காத்து அவர்களுக்குரிய ஆதிபத்தியத்தை மீளவும் பெற்றுத் தரவே "ஆதியாய் அநாதியாய் அகண்ட அறிவாய்" என்று பாரதி பராவிய பரப்ரம்ம சைதன்யமாம் பராசக்தி ஸ்ரீமாதாவான சீரெழில் லலிதையாக உதித்திருக்கிறாள். 'தேவ கார்ய ஸமுத்யதா' — தேவர்களுக்கானதைச் செய்யவே உற்ப வித்தவள் — என்று ஸஹஸ்ரநாமத்தில் பெயரிடப்படுபவள், அவர்கள் வேண்டிய வரத்தை வாயார நல்கியவுடன் அவர்களுடைய மகிழ்ச்சியும் பக்தி நெகிழ்ச்சியும் பெருகின.

அந்த வரதாயகியையே தங்களது அதிநாயகியாகக் கொண்டனர்.

அஸுர பண்டனை வதைக்க அவள் முற்பட வேண்டுமாயின், அவளை ஸுரர்கள் தங்கள் மீது ஆதிபத்யம் கொண்ட நாயகியான ராணியாக ஏற்றுக் கொள்ளவேண்டும். அதையே அமரர் செய்தனர்.

நாயகி எனில் அவளுக்கெனத் தலைநகர் இருக்க வேண்டும்; அவளுக்கு ஒரு நாயகனும் இருக்க வேண்டும். (இலக்கிய ரீதியில் பார்த்தாலுங்கூடக் கதாநாயகி இருந்தால் கதாநாயகன் இருந்தாக வேண்டாமோ?)

இந்திராதி தேவர் மட்டுமல்ல. அவர்கள் விரும்பிய பண்டவதத்தை (அவனுடைய ஸாமர்த்தியமான வரம்

காரணமாக)ச் செய்ய முடியாத பிரம்ம விஷ்ணுக்களுங்கூட இப்போது அவளது தலைமையை ஏற்க வந்து விட்டனர். அபிராமி அந்தாதியின் அழகு வாக்குப்படி "விண்ணவர் யாவரும் வந்திறைஞ்சிப் பேணுதற்கெண்ணிய எம் பெருமாட்டி"! அவளுக்கு வாஸ ஸ்தானம் அமைக்கும் பணியைத் தேவ தச்சனான விச்வகர்மாவுக்குப் பிரம்மா அளித்தார்.

மனோசக்தி கொண்டே மாளிகையும் சூளிகையும் நிர்மாணிப்பதற்குத் திறம் பெற்ற விச்வகர்மா உடனே அம்பிகைக்கென ஓர் அற்புதமான ராஜதானியையும், அதிலே ஆரெழில் கொஞ்சும் ஒரு ராஜக்ருஹத்தையும், அதில் ஆற்றல் பீடமானதொரு ராஜ ஸிம்ஹாஸனத்தையும் படைத்து விட்டான்.

ஆனால் ராஜன் எங்கே? ராணிதானே இருக்கிறாள்?

இந்த நிலை கண்டு பிரம்மா சிந்தித்தார். 'பத்தினியில்லாத ஆடவன், பதியில்லாத பெண்மணி ஆகிய இருவருமே ஆட்சியதிகாரம் பெற அருகர் அல்லரென்பது வேத மரபு.

(தேவ தேவியானாலுங்கூட வேத மரபைப் பற்றியே ஒழுக வேண்டும் என்று இதிலிருந்து ஏற்படுகிற தல்லவா? பரம்பொருளே தான் வகுத்த சட்டத்துக்கு அடங்கிக் காட்டும் அறநெறி, அடக்கப் பண்பு! இன்னோர் உயர் கருத்தும் இதில் தெரிகிறது. யஜமானன் என்ற கணவன், யஜ்ஞபத்னி என்ற மனைவி ஆகிய இருவரும் இருந்தாலே தேவப்ரீதியான வேள்வி புரியலாம் என்பது வேதச் சட்டம். மக்களின் ப்ரீதிக்கான அரசாட்சியும் இவ்வாறே ஸதி-பதியாயுள்ளவர்தாம் செய்ய வேண்டு மென்பதால், இதையும் புனித வேள்வியாகவே மதித்ததாகத் தெரிகிறது. மங்களமான நல்வழியில் செல்லும் தம்பதியர் தாம் அரசு கட்டில் ஏற உரிமை பெற்றவர்.)

'ச்ருங்கார ஸௌந்தர்யமே உருக்கொண்டாற் போன்ற இந்த உத்தமோத்தமிக்குத் தகுந்த நாயகன் யார்? வேறு யாராயிருக்க முடியும்? மங்களம் யாவும் கொழிக்கும் இவளை ஸுமங்கலி என்ற ஸ்தானத்தில் கௌரவிக்கக் கூடியவன் சிவன் ஒருவன்தான். 'சிவம்' என்றாலே 'மங்களம்' என்று பொருளாயிற்றே! ஆனால் துரதிருஷ்ட வசமாக அந்த சிவனோ யாக குண்டத்தில் ஸதி தாக்ஷாயணி பிராணத் தியாகம் செய்த நாள் தொட்டு வைராக்கிய யோகியாகிவிட்டான்! இப்போது அவன் அமங்கள மயான வாசியாக, சடை முடியும் சாம்பற் பூச்சும், முண்ட மாலையும், கபாலக் கரமும் கொண்டவனாக அல்லவா ஆகி மோனத் தவமிருக்கிறான்? அந்த ஸதியே பார்வதியாய் வந்து பணிவிடை செய்தும் அவளைப் பாராது, பார்வையினாலேயே காமனை எரித்து விட்டல்லவோ உட்கார்ந்திருக்கிறான்? அவனை எப்படி இவளுக்கு நாயகனாக்குவது?' — என்றிப்படிச் சதுர்முகன் யோசித்தான்.

ஒன்றேயான பரம்பொருள் இரண்டு போல சிவமும் சக்தியுமாகி, பின்னர் ஆதி தம்பதியர் தமக்குள் ஆடிக் கொள்ளும் சேர்க்கை-பிரிவு விளையாடல்களை யாரே அறிய முடியும்? சதுர்முகனே அறிய முடியாத இந்தப் புதிரை நாமும் புரிந்து கொள்ள முடியாதுதான்! யோகி தக்ஷிணாமூர்த்தி அங்கே இமாசலத்தில் தாபத் தபஸ் புரியும் பார்வதியிடம் பரிவு காட்டாத மர்மம் நமக்கு எப்படிப் புரியும்? அதே போதில் அதே சக்தி இங்கே நமது கதாநாயகி லலிதையாகவும் இன்னோர் உருவில் தோன்றி, இவளுக் கேற்ற பதி அவனே என நான்முகன் நிச்சயித்தவுடன் நம்முடைய கதையை மேலே நடத்திக் கொடுப்பதற்காக அச் சிவபெருமான் பரம கருணை கொண்டதன் ரஹஸ்யமும் நமக்குப் புரியாதுதான்!

ஆகக்கூடி, நடந்தது என்னவெனில்: மமதை மிக்க தக்ஷன் செய்த யக்ஞத்தில் உயிர்த் தியாகம் செய்த சக்தியே,

மமகாரம் அடியோடு அழித்து வானவர் தமது உயிரைத் தியாகம் செய்த யக்ஞ குண்டத்திலிருந்து திரிபுரையாகத் தோன்றியிருக்கும்போது, திரிபுராந்தகன் அவளது கரம் பிடிக்க வந்தேவிட்டான்!

ஆம், அவளுக்காக நிர்மாணிக்கப்பட்ட ராஜ ஸதஸுக்கு எழுந்தருளி விட்டான்!

அமங்களக் 'கோலம் விட்டு' அதிமங்களனாக வந்தான் ஆதிசிவன்.

ஹிமாசலத்தில் தக்ஷிணாமூர்த்தியாகி துறவிக் கோலத்தில் சாந்தனாய் இருக்கும்போதே இங்கே இன்னொரு ரூபத்தில் கல்யாண மாப்பிள்ளையாய் கோலாஹலத்தோடு வந்தான்.

மதனாந்தகன் கோடி மதன லாவண்யனாக வந்த தாகப் புராணம் சொல்கிறது! திகம்பரன் திவ்ய வஸ்திர தரனாக வந்தானாம்! மேனியிலே சாம்பலுக்குப் பதில் களப சாந்தம். முண்டமாலையினிடத்தில் மலராரங்கள் மணக்கின்றன. இப்போது இவன் சடை முடியனல்ல. கிரீட பூஷணனாக்கும்! பாம்புகளுக்குப் பதில் நவரத்னத் தினாலான குண்டல கேயூராதிகள்.

அசல் ஜானுவாஸ மாப்பிள்ளையாக வந்த ஜகன் மோஹனனை பிரம்மன் அப்படியே கட்டித் தழுவிக் கொண்டான்.

காமாரியான அவனுக்குக் காமேச்வரனென்று நாமகரணமும் செய்தான். காமேச்வரியை மணக்க வேண்டியவனுக்கு வேறென்ன பெயரிடுவது?

பார்வதியாக அவதரித்த பராசக்தி அடங்கிப் பணி புரிந்ததால் அந்த அடக்க எழிலை மேலும் சோதித்துத் துலக்கவே அவளை அலக்ஷ்யம் செய்த பரமேச்வரன், சிருங்கார மதர்ப்பாக அவளே செழித்து அதிகாரத்துடன் நமது கதாநாயகியாய் வந்தபோது தானுமே சிருங்கார

4

நாயகனானான். பார்வதி போல இவள் அவனிடம் பிரேமித்துத் தவிக்கவில்லை, தவமிருக்கவில்லை. இவளுக்கு ஸ்வய ஆசை, அபிலாஷை எதுவுமில்லை. தேவ காரியத்துக்காகவே வந்தாள். சக்தி கொந்தளிக்க வந்தாள். சிவம் தன்னால் அச் சக்தியிடம் இழுபட்டது!

ஸ்படிகமாகிய சிவம் லலிதையின் 'அருணவொளியில் காமேச்வரனாகச் சிவந்தது. ஆம், அவளைப் போலவே நிறம் கொண்டு, அவளது ஆயுதங்களான தநுர்-பாண, பாச, அங்குசங்களையே சிவன் இப்போது தரித்திருக்கிறான். அவளோ இவனைப் போலத் தானும் நெற்றியில் மூன்றாம் கண் படைத்த த்ரிலோசனியாகவும், மகுடத்தில் பிறை மதியம் சூடிய சந்திரசேகரியாகவும் ஆகியிருக்கிறாள்.

முப்புரங்களாகிய ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களிலுள்ள 'நான்' என்னும் தடிப்பை எரித்த த்ரிபுராந்தகன் இதே முப்புரங்களின் உள்ளும் மூல தெய்விக ரஸத்தை உணரச் செய்யும் த்ரிபுரஸுந்தரியோடு இணை சேர்வதன் எழிலே இதுவெல்லாம்!

காமாந்தகனே லோக லீலைக்காகவும், ஜீவர்கள் படிப்படியாகப் பரிணாம பக்குவத்தில் உய்வு பெறவேண்டி அவர்களுக்கு இல்லற உதாரணம் படைப்பதற்காகவும் காமேச்வரியுடன் காமேச்வரனாகப் பிணைய வந்ததன் விநோதமே ஈதெல்லாம்!

காமேச்வரனும் காமேச்வரியும் ஒருவரையொருவர் கண்ட மாத்திரத்தில் .... சொல்லவும் வேண்டுமா? பிரேமாவேசம் கொண்டனர்.

ஆயினும் தன்னை இவள் இப்படி இழுப்பதா என்று மாப்பிள்ளை பிகுவுடன் ஐயன் மனத்தை அடக்கிக் கொண்டான். அவளோ இன்னமும் ஒரு படி தீவிரமாகவே தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். தன்னுடைய பார்வதி ரூபத்தை அலக்ஷ்யப் படுத்துபவனைச் சற்றுப் பழி

வாங்கிப் பார்ப்போமே என்று எண்ணினாள் போலிருக்கிறது!

இதுவொன்றும் தெரியாத பிரம்மா, சக்தி எப்படியும் சிவத்தைக் கூடத்தான் செய்யும் என்று மட்டும் தெரிந்து கொண்டிருந்தார். மஹாமாதாவுக்கு — கன்னிகையாக உள்ள இப்போதே மஹாமாதாவாகவும் இருக்கும் அவளுக்கு — தாம் இதை நேராகச் சொல்வது அநுசிதம் என்பதால் சுற்றி வளைத்து அவளிடம் விண்ணப்பித்துக் கொண்டார்.

"தேவ கந்தர்வர்களும் அப்ஸர கணங்களும் ரிஷிகளோடு இங்கு கூடியிருக்கிறோம். எதற்காக? இதோ இந்த சிம்மாஸனத்தில் நீ உன் பதியுடன் வீற்றிருந்து எங்களுக்கு ராஜ்யபாரம் வகிப்பதைக் கண்குளிரக் காணத் தான் குழுமியிருக்கிறோம். நீ பதியை வரித்து இல்லறம் ஏற்பது உலகுக்கெல்லாம் நல்லுதாரணம் படைக்கும். லோக ஸம்ரக்ஷணத்துக்காக நீ இவ்வருள் புரிய வேண்டும். உன்னால் வரிக்கப்படும் மஹா பாக்யம் பெற்றி புமான் எவனோ அவனைக் கரம் பிடித்து அரசு கட்டில் ஏறி மஹாராஜ்ஞி (மஹாராணி) ஆவாய். உனக்கு பட்டாபிஷேகம் செய்யவே காத்துக் கொண்டிருக்கும் தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் இஷ்டபூர்த்தியை அநுக்ரஹிப்பாய்!"

இப்படிக் கூறிய பிரம்மாவையும், உடனிருந்த விஷ்ணுவையும் மற்ற எல்லா தேவர்களையும் ஒரு சேரப் பார்த்த தேவி மந்தஹாஸம் புரிந்தாள். "தேவர்காள்! நான் எவருடைய ஏவலுக்கும் கட்டுப்படாத ஸ்வதந்திரை. என் விருப்பப்படி ஸ்வயேச்சையாக நடப்பவள். இதற்கேற்ற குணப்பாங்கு உள்ளவனே எனக்குப் பிரியனான பதியாக முடியும்!" என்றாள்.

பராசக்தியை அவள் இஷ்டப்படியே லீலை புரிய பூர்ண சுதந்திரத்துடன் மனமொப்ப விடக் கூடியவன்

பரப்பிரம்ம வடிவனான பரசிவன் ஒருவன்தான். வேறு எவராயினும் அவளது மகத்தான லீலா சக்தியில் தாங்கள் எப்படி பாதிக்கப்படுவோமோ என்று சற்று அஞ்சவே செய்வர். எவ்வித பாதிப்புக்கும் ஆளாக முடியாத ஆத்மாவுக்கு மிகவும் நெருக்கமான மூர்த்தம் சிவன்தான். மனம் கடந்த ஆத்மனான அவன் அவளில் கரைந்தும் கரையாமல் நின்று மஹாமனமான அவள் புனையும் லீலையில் தானும் ஈடுபட்டாற்போல் நடிப்பான். ஆயின் உண்மையிலோ அவனும் சுதந்திரனாகவே வெட்ட வெளிபோல எதிலும் பட்டுக் கொள்ளாமல் அகண்டமா யிருப்பவன். அதாவது அவளைப் போலவே ஸ்வதந்திரன்; அவளுடைய ஸ்வதந்திரத்திலும் குறுக்கிடாதவன்.

அவனைக் குறிப்பிடாமலே பிரம்மன் பேசினா னெனில், அதற்கு அம்பாளும் நயமாக இப்படிப் பதில் சொல்லி விட்டாள்.

மேலே? காமேச்வரன் தன்னை அவளுக்கு வரனாக விண்ணப்பித்துக் கொண்டு மணமாலைக்குக் கழுத்தை நீட்டுவானா? மாட்டான். தன்னை மணக்கலா மென அவளுக்கு யோசனை சொல்வதுங்கூட அவளுடைய ஸ்வதந்திரத்தில், ஸ்வயேச்சையில் குறுக்கிடுவதுதானே? எனவே இவளேதான் அவனை வரிக்க வேண்டும்.

இதையும் உடைத்துச் சொல்லாமல் வெகு நயமாய் அவளிடம் நான்முகன் விண்ணப்பித்துக் கொண்டான். "அம்மா, நீ யார்? என்றும் மாறாத 'ஸத்'தை ப்ரம்மம் என்றும், மாறுதல் மயமான உலகை நடத்தும் 'சித்' விலாஸத்தை ப்ரகிருதி என்றும் சொல்கிறார்களெனினும், இந்த இரண்டுங்கூட இணை பிரியாது ஒருமித்த ஏகம்தான். அந்த ஏகமான ப்ரம்மமும் ப்ரகிருதியும் நீயேதான். (சிவம், சக்தி என்ற பெயர்களைச் சொல்லாமல் அதே தத்வங்களை ப்ரம்மம், ப்ரகிருதி என்று கூறியதில்தான் ப்ரம்மாவின் உரை நயம் இருக்கிறது. லீலைக்காக இப்போது பிரிந்தது போல ஈருருவங்களிலுள்ள இவை ஒன்று சேருவதுதான் தேவர்

விரும்பிய திருக்கல்யாணம்!) அப்படிப்பட்ட நீ உன் இச்சைப்படி தான் மணாளனை வரிக்க வேண்டும். இவ்வாறு ஸ்வயேச்சைத் தேர்வு செய்து கொள்வதையும் உன் போன்றோர் விஷயத்தில் 'காந்தர்வ விவாஹம்' என்பதாக சாஸ்திரம் அனுமதித்திருக்கிறது. தந்தையால் அல்லது அந்த ஸ்தானத்தில் உள்ள ஒரு பெரியவரால் 'பித்ரு தத்தை'யாகக் கன்யாதானம் செய்வதற்கில்லாத ஒரு பெண் காந்தர்வ மணம் புரிந்து கொள்ளலாமென்பது சாஸ்திரம். உனக்குத் தந்தையில்லை; உன்னை விடப் பெரியவரும் இல்லை. எனவே லோகானுக்ரஹத்துக்காக நீயே காந்தர்வ விதிப்படி பர்த்தாவைத் தேர்வு செய்து கொள்ள வேணும்."

பிரம்மா ஸாமர்த்தியமாக சமாளித்து விட்டார். இப்போது தேவி மஹாதேவன் கழுத்தில் மாலையிட்டுவிட வேண்டியதுதானே?

ஆனால் அவள் அப்படிச் செய்ய மாட்டாள். அங்கே ஹிமாலயத்தில் பார்வதியை அலக்ஷ்யப்படுத்து பவன்,-இன்னோர் உருவில் இந்த ஸபைக்கு வந்த போதிலும் பட்டுக்கொள்ளாமலே நிற்கிறான். அப்படியிருக்க அவள், ஸ்வதந்திரமானவள் என்று தன்னைச் சாற்றிக் கொண்டவள், தன்னைக் குறைத்துக்கொண்டு அவனை நாடிப்போய் மாலை சூட்டுவாளா?

ஒரு யுக்தி செய்தாள். "நான் புஷ்ப ஹாரத்தைச் சுழற்றி வீசுவேன், அது எவன் கழுத்தில் விழுமோ அவனே என் பர்த்தா!" என்றாள்.

இவளது இச்சா சக்தியால்தான் சகல பிரபஞ்சங்களும் சுழல்வது. தற்செயலாய் நடப்பதென நாம் நினைப்பதெல்லாமுங்கூட அவள் செயல்தான். எனவே அந்தப் பூமாலை இவள் இச்சையை மீறித் 'தற்செயலாக' எவர் கழுத்திலாவது விழ முடியுமா என்ன? சிவனைத் தவிர அனைவருமே, அனைத்துமே அவளது குழந்தைகளாக

இருப்பதால் அவனைத் தவிர வேறு எவரை அந்த அலங்கல் அலங்கரிக்க முடியும்?

ஹாரத்தை வானத்தே வீசினாள் தேவி.

அது ஒளி வீசிக்கொண்டு கீழ் நோக்கி வந்து நேராகக் காமேச்வரனின் காலகண்டத்தைச் சூழ்ந்து அழகு செய்தது. மங்கை நல்லாளின் மணமாலை கங்கை கொண்டானை எழில் செய்தது.

# 6

**ல**லிதையின் மலர்க்கரம் வீசிய மலர் மாலை மஹாதேவன் கண்டத்தே விழ, விண்ணிலிருந்து மலர் மழையும் சொரிந்தது. சுபம் எதற்குமே தேவர் புஷ்ப விருஷ்டி பொழிவதுண்டெனினும், இப்போது அவர்களது துயர் தீர்க்கவே அன்னை மணமகளான போது, இந்திரன் மேகங்களை விசேஷமாகத் தூண்டி மலரை மலையளவுக்கு மழையாகவே பொழிவித்துத் தீர்த்தான்.

அவள் பரம ஸ்வதந்திரையான பரதேவதை என்ற ரீதிக்கிணங்க காந்தர்வ மணம் செய்து கொண்டு விட்டாள். ஆனால் அவள் உயிர்க் குலத்துக்கெல்லாம் வழி காட்டி என்ற ரீதியில் சாஸ்திர முறையையும் வைதிக நெறியையும் நடத்திக் காட்ட வேண்டியவளுமாயிற்றே! அதனால் சதுர்முகன் சிவ-சக்தியரின் சாஸ்திரோக்தமான விவாஹத் துக்கு உடனே ஏற்பாடு செய்தான். ஏனெனில் அந்தப் பொழுதே லோக மங்களம் விளைக்கும் சுப முஹூர்த்த மாக இருந்துவிட்டது.

அகிலாண்ட ஜனனியான அவளுக்குத் தந்தை ஸ்தானம் வகித்துக் கன்யாதானம் செய்யக் கூடியவராக

எவரையும் பிரம்மனால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. அவளாக இஷ்டப்பட்டு தக்ஷன், ஹிமவான் போன்றோருக்கு மகளாக ஆவிர்பவிப்பது வேறு விஷயம்.

தந்தைக்குப் பதில் தமையன் பொறுப்பேற்கலாமன்றோ?

பிரம்மன் திருமாலை நோக்கினான். "இந்த மஹாதேவி உன் வடிவினளே அல்லவா? நீங்களிருவரும் உடன் பிறப்புக்களாயிற்றே! காமேச்வரனுக்கு இக் கல்யாணியைக் கன்யாதானம் செய்து திருக்கல்யாணம் நடத்தித் தரும் தகுதி அண்ணனான உனக்கே உண்டு, வா!" என்றான்.

உலகொழிந்த பரம சாந்த நிலையைப் பரசிவம் என்றும், அதுவே உலக மாயையை இயற்றி ஆள்கையில் புருஷவடிவாயின் விஷ்ணு என்றும், பெண் வடிவாயின் அம்பாள் என்றும் அநுபூதிமான்கள் கண்டிருக்கிறார்கள். இப் புருஷ வடிவு, பெண் வடிவு ஆகிய ஒவ்வொன்றுக்கும் உள்ள தனி எழில் காரணமாக இரு வடிவையும் பக்தியோடு ஏற்றுக் கொண்டு இரண்டையும் லோக நாடக மஹாசக்தியாகக் கருதி வழிபடுகையில் விஷ்ணுவும் அம்பாளும் தமையனும் தங்கையும் ஆகின்றனர். அம்பிகை விஷ்ணுவோடு ஸர்வஸமமாக உள்ள நிலையில் அவளை அபிராமிபட்டர், "தரங்கக் கடலுள் வெங்கட்பணியணை மேல் துயில் கூரும் விழுப்பொருளே!" என விளிக்கிறார். ஸோதர பாவத்தில் அநுபவிக்கும்போது, "மூவா முகுந்தற் கிளையவளே!" என்றும் "செங்கண்மால் திருத்தங்கைச்சியே!" என்றும் தித்திக்க அழைக்கிறார்.

மனத்தை அன்பில் ஒன்றுபடுத்தி தியானித்து, தியானித்துப் பரமானந்தம் காண வேண்டிய காட்சி: கல்யாணஸுந்தர பரமேச்வரனுக்கு ஸர்வ மங்கள மங்களையான லலிதா திரிபுரஸுந்தரியை அமுதத்தோடு பிறந்த மஹாலக்ஷ்மி ஸமேதனான ஆராவமுதன்

வாஸுதேவன் அருமறை வழிப்படி தாரை வார்த்துக் கொடுத்துத் தாரமாக்குகிறான்!

மஹாவிஷ்ணுவே பரமேசனை மாப்பிள்ளை யாக்கி, "மஹாவிஷ்ணு ஸ்வரூபிணே" என்று பூஜிக்கிறான்!

நம் மன எழுச்சி பெறவும், அவ்வெழுச்சி சொல்லாய் உருகி வெளிப்படவும் மீண்டும் அபிராமி பட்டரைத்தான் துணை கொள்ள வேண்டியதாகிறது!

வவ்விய பாகத்(து) இறைவரும் நீயு(ம்) மகிழ்ந்திருக்கும்
செவ்வியும் *உங்கள் திருமணக்கோலமும்* சிந்தையுள்ளே
அவ்வியம் தீர்த்தென்னை ஆண்டபொற் பாதமும் ஆகி வந்து
வெவ்விய காலன் என் மேல்வரும் போது வெளிநிற்கவே!

ஆம்! அந்தகன் நம்மை அணுகும் அந்த அந்திம வேளையிலே நமது ஆவி பரமபதத்திலே மலராக மணக்க இந்தத் திருமணத் தியானத்திலும் சிறந்ததாக என்ன உண்டு? சக்தி சிவத்தைக் கூடியதைச் சிந்தித்தால் ஜீவாத்மாவும் பரமாத்மாவோடு பிரிவுறாமல் கூடிவிடும்.

திருமணம் முடிந்தவுடன் 'ஆசீர்வாதம்' என்ற பெயரில் மணமக்களுக்குப் பரிசுகள் ஓதப்படுவது வழக்க மல்லவா? இங்கோ ஜகத்தின் ஜனக-ஜனனியருக்கு 'நமஸ்கார'மாக அமரர்கள் அரிய காணிக்கைகளைச் செலுத்தி அக மகிழ்ந்தனர்.

நூதன தம்பதியர் கரம் கொண்ட ஐந்து மலரம்பு களாக நாராயணனின் ஆரா அன்பே மலர்ந்தது. அவர்களது கரும்பு வில்லாக இறுகி இனித்தது சதுர்முகனின் மதுர நேசம். அவர்கள் தாங்கும் பாச அங்குசங்களாக வருணனின் பாசாயுதமும், விச்வகர்மனின் அங்குசமும் சிறப்புச் செய்தன. அக்னி அவர்களுக்குக் கிரீடம் அளித்தான். ஸூர்ய சந்திரர்கள் குண்டலங்கள் ஈந்தனர். ("தாடங்க யுகளீ பூத தபனோடுப மண்டலா" எனும் லலிதா ஸஹஸ்ர நாமப் பெயரின்படி கதிரவனும்

மதியமுமேதான் அம்பாளின் இரு தாடங்கங்கள்.) ரத்னாகரம் எனப்படும் கடலின் அதிதேவதை நவரத்ன ஆபரணங்களை அளித்தான். இந்திரன் என்றும் குறையாத மது பாத்திரத்தை ஈந்தான். பிரேமானந்த ரஸமே அந்த மது! குபேரன் சிந்தாமணிகளாலான ஹாரம் அளித்தான்.

இத் தம்பதியர் ராஜனும் ராணியுமாகத் திகழ வேண்டியவர்களாயிற்றே! 'ராஜன்' என்று மரியாதைக்குச் சொன்னாலும், ஆட்சியதிகாரம் முற்றிலும் பெற்றவள் ராணியான அவள்தான். ஆம், காஞ்சி முனிவர் நகைச் சுவையுடன் கூறுவது போல, அம்பிகை லலிதையாயுள்ள கோலத்தில் எலிஸபெத் ராணி போல; ஈசன் ஃபிலிப் கோமகன் போலத்தான்!

அதெப்படியாயினும் அவள் பதியில்லாத கன்னி யாக அரசு கட்டில் ஏற முடியாதென்ற சாஸ்திர விதியைக் காட்டித்தான் விதாதா அவளை விவாஹத்துக்கு இணங்கச் செய்திருந்தான்.

அரச இலச்சினைகளில் முக்யமானது வெண் கொற்றக்குடை. இந்தக் குடையைப் புது மணத் தம்பதியர்க்கு 'ஓதி' வைத்தது திருமால்தான். சக்கரக் கையனான அவனே திரிலோகச் சக்ரவர்த்தி. ஸ்ரீசக்ர நாயகியான அவனது தங்கையே முவ்வுலகச் சக்ரவர்த்தினி.

'சத்ர-சாமர' என்ற முறைமைப்படி குடைக்கு அடுத்த ராஜரீகச் சின்னமான இரு சாமரங்களை கங்கையும் யமுனையும் அளித்தனர். அலை அலை வீசுவதே சாமரம் இரட்டுவது போன்றதுதானே?

வஸுக்கள் எண்மர், ருத்ரர் பதினொருவர், ஆதித்யர் பன்னிருவர், இரட்டையரான அச்விநி தேவர்கள், அஷ்டதிக்பாலகர், தேவர்களில் பல பிரிவினரான மருத்துக்கள், ஸாத்யர்கள், கந்தர்வர்கள் ஆகியோரும், மஹாதேவனின் பிரமத (பூத) கணநாதரும் தத்தம் ஆயுதங்களை சிவ-சக்தி தம்பதியருக்கு தத்தம் செய்தனர்.

பண்டனால் செயலிழந்து நிற்கும் இவர்களுக்காகப் போராடப் போவது அம்பிகைதானே?

மற்றும் முப்படைகளுக்கு அடையாளமாக ரத-கஜ-துரகங்களையும் அவர்கள் நமது திவ்விய வதூவரர்களுக்கு அர்ப்பணித்தனர்.

இவற்றினும் முக்கியமான காலாட்படை வீரர் களை மட்டும் அவளேதான் ஸ்ருஷ்டித்துக் கொள்ளப் போகிறாள். தாங்கள் அடியோடு கையாலாகாமல் கையறு நிலையில் அவள் காலில் விழுந்து கிடக்க வேண்டியவர் களேயன்றி, அவளது கருவியாகக்கூடப் போரிடத் தகுதியற்றவர்கள் என்ற எளிமை நிலையில் அப்போது அமரர்கள் இருந்தனர். அவர்களது அந்த சரணாகத அழகை மெச்சி ஏற்குமுகமாகவே அம்பிகை பிற்பாடு பண்டனுடன் யுத்தத்துக்குப் புறப்படுகையில் அவர்களைத் துணை கொள்ளாமல் தானே, தன்னிலிருந்தே சக்தி சேனையைத் தோற்றுவித்துக்கொண்டாள்.

மணமக்கள் ஊர்வலம் வரவேண்டாமா? தற்காலத்தில் ஸாரட்டு போய் கார் வந்திருக்கிறதெனில், அந்த ஆதி காலத்திலேயே பிரம்மா நமது மணமக்களை ஹெலிகாப்டரில் பவனி கொள்ளச் செய்துவிட்டான்! குஸுமாகரம் என்ற விமானத்தைப் படைத்து அந்த விண்ணூர்தியில் சிவனையும் சிவையையும் எழுந்தருளச் செய்தான். 'குஸுமாகரம்' என்றால் மலர்மயமானது என்று பொருள். 'புஷ்பக விமானம்' என்பதன் பொருளும் அதுதான்.

கண் இனிக்க, நாசி மணக்க, வாடா மலர்களாலேயே உருவாகியிருந்தது அவ்வூர்தி. அதன் பரிமளம் சற்றுப் பட்டாலே போதும், மனக் கலக்கம், நோய், பசி யாவும் பறந்துவிடும். விமானமாயினும் விண்ணில் போலவே மண்ணிலும் அது செல்லும். அதில் வீற்றிருப் போர் விருப்பப்படியெல்லாம் தானாகவே செல்லும்.

இப்படிப்பட்ட திவ்ய விமானத்தில் காமேச்வர-காமேச் வரியர் இருக்கை கொண்டு அடியார்கள் உள்ளம் உவகிக்க உலா வந்தனர்.

ராஜோபசாரம் நடந்தது. சத்ர-சாமரங்களென்ன? கொடி தாங்குவோரும் தடி தாங்குவோரும் என்ன? வீணா, வேணு, மிருதங்காதிகள் இசைப்போரென்ன? இப்படி அமரர் கணம் சூழ, அப்ஸர கணம் ஆட, அம்மை-அப்பர் களின் அற்புத பவனி நடந்தது.

உப்பரிகைகளிலிருந்து தேவமாதர் பொரியும், மங்கலாக்ஷதையும் தூவினர். ஸுமங்கலியர் வாயில் தோறும் எழுந்தருளும் திவ்ய தம்பதிக்குத் தீப ஆரத்தி காட்டித் தொழுதனர்.

இப்படி வீதி வீதியாக உலா முடித்து லலிதா-காமேச்வரர்கள் அரண்மனை திரும்பி ஸபாப் பிரவேசம் செய்த கோலாஹலத்தை எழுதி முடியாது. பரம ரிஷிகளின் பவித்திர பத்தினியர் பழுத்த ஸுமங்கலிகளாக ஒன்று கூடி அவர்களை கந்த, புஷ்ப, அக்ஷதை மரியாதை யுடன் ஸபை முகப்பில் வரவேற்றனா.

சிகர கட்டமாக சிம்மாசனம் ஏறினர் அம்மாவும் பெம்மானும்!

அப் பெரும் ஸபையில் ஒருவர் விடாமல் அனைவர் மீதும் அம்பிகையின் அருள் பார்வை இன்னல் தீர்க்கும் இனிய மின்னலாய்த் தீண்டிக் கொண்டே ஓடிற்று. கயல் விழிகளின் அக் கருணை நோக்கு பட்ட மாத்திரத்தி லேயே அவர்கள் யாவரும் ஸர்வாபீஷ்டங்களும் ஈடேறி விட்ட நிறைவைப் பெற்றுப் பூரித்தனர்.

"கடாக்ஷ லேசத்தாலேயே அனைவரின் காமனை களையும் பூர்த்தி செய்யும் தாயே! உனக்குக் காமாக்ஷி என்று நாமகரணம் செய்து நாக் குளிருகிறேன்!" என்று நான்முகன் நமஸ்கரித்தான்.

அரியாஸனத்தில் அரனார் பக்கலில் அமர்ந்து ஸிம்ஹாஸனேச்வரியாக, ராஜராஜேச்வரியாக அமரர்களை ஆண்டருளத் தொடங்கினாள் அன்னை லலிதை.

அவளுக்காக நிர்மாணமாகியிருந்த புது நகரத்திலேயே தேவர்களும், ரிஷிகளும் குடியேறிவிட்டனர். அன்னையின் அன்பாட்சியில் நிம்மதியாக, நிச்சிந்தையாக அவர்கள் வாழலாயினர். அவர்களில் ஒவ்வொருவரும், "என்னிடமே தேவிக்கு அதிக வாத்ஸல்யம்" என்று பெருமிதப்படும்படியாக அந்தத் தாய் அருமைக் கிட்டாளாம்!

இனிமையிலும் இனிமையான நிலவரம்.

ஆனால் இப்படியே போனால் அவர்களது கர்மத்தின் கதி என்னாவது? பண்டன் நெருங்கவும் நினைக்க முடியாததொரு ராஜதானியில் அம்பிகை இப்படியே அமரரோடும் அரும் தவசியரோடும் அமைதியாக வாழ்ந்து கொண்டிருந்துவிட்டால் அவ்வசுரனின் அழிவு எப்படி ஏற்படும்? அன்னையின் யுத்த பராக்ரமம் எப்படி வெளியாகி அக்ரமத்தை அழித்துக் காட்ட முடியும்? எல்லாவற்றுக்கும் மேலாக, 'லலிதோபாக்யானம்' என்பதாக இன்றைக்கும், என்றைக்கும் அடியார்கள் படித்தும், கேட்டும், பாராயணம் செய்தும் ஆனந்தமுறும் லீலா சரிதம் எப்படி உருவாகும்?

இதையெல்லாம் எண்ணி, நாரத மஹரிஷி லலிதாம்பிகையின் ஸந்நிதிக்கு வந்து தமது விண்ணப்பத்தை வெளியிட்டார். "அம்மா! மறைந்து நிற்கும் அருப மஹாசக்தியான நீ ரூபம் கொள்வது தீயோரை ஸம்ஹரிக்கவும், நல்லோரை இன்புறுத்தி உயர்த்தவுமே அல்லவா? தீய பண்டன் பரிபூர்ண சக்தியான உன்னையன்றி வேறெவராலும் வெல்வதற்கு இயலாதவனாகச் செம்மாந்து வாழ்ந்து வருகிறான். மூவுலகையும் சேர்ந்தோருள் இங்கே உன்னருகே வந்து குடி புக முடியாத

யாவரும் அவனால் பீடிக்கப்பட்டுத் தவிக்கின்றனர். அது மாத்திரமின்றி உன் ஸ்ருஷ்டிக் கிரமத்தில் பலவிதமான தேவருலகங்கள், ரிஷி மண்டலங்கள் யாவும் ஒவ்வோர் ஒழுங்கின் மீது நிர்மாணிக்கப்பட்டிருப்பதை அடியேன் உனக்கு நினைவுறுத்தலாமா? அந்த உலகங்களின் பிரஜைகள் தங்கள் வினைப்பயனை அநுபவிக்க ஏற்பட்ட அவ்விடங்களை விட்டு வந்து, வினையே தீண்டாத இந்த உன் ராஜதானியிலேயே வாஸம் செய்வதால் கர்ம நீதியும் பாதிக்கப்படுகிறது!"

இப்படியாக, 'கலகம்' என்று உலகோர் தவறாகச் சொல்லும் கருணைப் பணியை, தருமப் பணியை நாரதர் புரிந்து அன்னையின் அவதாரப் பணியைத் தொடங்கி வைத்தார்.

அவர் சொன்னதன் நியாயத்தை தேவி உளம் கொண்டாள். 'புண்ய அபுண்ய பல ப்ரதா', 'கர்ம பல ப்ரதா' என்றெல்லாம் 'ஸஹஸ்ரநாமத்'திலும் 'த்ரிசதி'யிலும் பெயர் கொண்டவள் அவள். எனவே தேவர் கர்மத்தை ஒரே யடியாக இப்போதே தீர்த்து விடக் கூடாதென்றும், பண்டனின் துஷ்கர்மத்துக்கான பலனை அவனுக்கும் தர வேண்டுமென்றும் திருவுளம் கொண்டாள்.

தேவர், ரிஷிகள் ஆகியோர் மனம் நோகாத வண்ணம் அவர்களுக்கெல்லாம் வெகுமதிகள் தந்து, விடை கொடுத்து அனுப்பி வைத்தாள்.

'ஸ்ரீ லலிதாதேவி அக்னி குண்டத்திலிருந்து ஆவிர்பவித்தது, பரமேசனைக் காமேசனாக்கிக் கடிமணம் புரிந்து கொண்டது, பட்டாபிஷேகம் செய்து கொண்டு சிம்மாசனம் ஏறியது ஆகிய இச்சரிதைகளை அதிகாலையில் எழுந்து சிரத்தையுடன் மனத்தில் கொள்பவர்கள் இம்மை மறுமை நலம் ஸகலமும் பெறுவர்' என்று இச்சரிதையை அகஸ்தியருக்குக் கூறும் ஹயக்ரீவப் பெருமான் சாற்றுகிறான். சூரியோதயம், நண்பகல், அஸ்தமனம் ஆகிய

மூன்று பொழுதுகளிலும், அரியணையில் வீற்றிருக்கும் அரசிக் கோலத்திலே அன்னையைத் தியானம் செய்து அவளது மந்திரத்தை ஜபிப்பவர் ஆறு மாதத்துக்குள் மகத்தான லக்ஷ்மியைப் பெறுவர் என்று தீர்மானமாகக் காலக்கெடுவே வைக்கிறான். ஆத்மானந்தம்தான் அந்த மஹத்தான லக்ஷ்மி என்று சொல்லவும் வேண்டுமா?

## 7

தேவ-ரிஷிகளுக்கு அம்பிகை விடை கொடுத்து அனுப்பியதாகச் சொன்னோம். எங்கே அனுப்பினாள்? தேவர்களைத் தேவ லோகத்துக்கும் ரிஷிகளை வனங் களுக்கும் குகைகளுக்குமா? தேவ லோகத்தில்தான் தேவர்கள் புக முடியாதபடி பண்டன் ஆக்கிரமிப்புச் செய்திருக்கிறானே! ரிஷிகள் நிச்சிந்தையாக தியானமும் தவமும் புரிய முடியாதபடி அடர்ந்த வனங்களிலும், இருண்ட குகைகளிலுங்கூட அல்லவா அஸுரரின் ஆக்ரஹம் ஏற்பட்டிருந்தது? நிம்மதியின்றி, நிலையின்றித் திரிபுவனங்களிலும் அவர்கள் திரியும்படித்தான் திரிபுரை அவர்களை விட்டு விட்டாள். ஆம், இன்னும் சிறிது காலம் அவர்கள் அப்படித் திரிவதே தேவர் தருக்குற்றுச் செய்த முன் வினையைக் கழித்துக் கொள்ள உதவும். ஸகல உயிரினங்களின் பாபங்களையும் ஏற்றுக் கழுவாய் செய்யும் ரிஷிகள் மேலும் சில காலம் துயருறுவதே லோகத்தின் தோஷம் நீங்கத் துணை செய்யும்.

அவளை அறவே நீங்க அவர்களுக்கு எப்படி மனம் வரும்? தங்களின் ஓவ்வோர் அம்சத்தை அவளது ஸந்நிதியில் வைத்துவிட்டே அமரரும் முனிவரும் விடை கொண்டனர்.

அவுணரிடம் சிக்காமலிருக்க அவர்கள் அலைந்து, திரிந்து, தவித்துத் தடுமாறலாயினர்.

**சி**ல காலம் சென்றபின் உரிய காலம் வந்து விட்டதென அம்பாள் உளம் கொண்டாள்.

இனி கருணை அஸ்திரத்தைப் பலமாகவே பிரயோகித்துக் கர்மாவை அழிக்க வேண்டியதுதான் என்று தீர்மானித்தாள்.

எதற்காக அவள் அவதரித்தாளோ அந்த பண்டாஸுர வதத்தைச் செய்வதற்காகப் புறப்பட்டாள்.

லலிதை என்றே பெயர் கொண்ட அதிகோமள மெல்லியலாள் வீறு கொண்ட வீராங்கனையாகப் போர்க் கோலம் பூண்டாள்.

பண்டன் தன் தோள்களைத் தட்டி விசுக்ரன், விஷங்கன் என்ற இரு தம்பிமாரைப் படைத்துக் கொண்டானென முன்பே கண்டோமல்லவா? அவர்களோடு தூமினி என்ற புகைமகளையும் தனக்குத் தங்கையாகப் படைத்துக் கொண்டு அவள் பெற்ற பிள்ளைகளைத் தானே போர்க்கலையில் பயிற்றுவித்தான். தனக்கென்றே பண்டன் நான்கு மனைவிமாரிடம் முப்பது ஆண் மக்களைப் பெற்றுக் கொண்டதும் நினைவிருக்கலாம்.

இதேபோல் அம்பாளும் இப்போது தனக்கு உதவியாளர்களைப் படைத்துக் கொண்டாள். 'எவரிடமும் உள்ள எந்த சக்தியும் அவள் போட்ட பிச்சைதான். அப்படியிருக்க அந்த மஹாசக்திக்கு உதவியாளர் எதற்கு?' என்று தோன்றலாம். ஆனால் லீலா நாடகம் ருசிப்பதற்கு இதெல்லாம் அங்கம். திருமால், சிவபெருமான் முதலிய எந்த தெய்வத்தை முழுமுதற் கடவுளாகப் போற்றும் புராணமாயினும் சரி, அது அந்த முழு முதற் கடவுள் இவ்வாறு பரிவாரங்களின் துணை கொண்டே தீயசக்திகளைப் பரிபவமுறச் செய்ததாகத்தான் கூறும். தலைவன்

எப்படி நடக்க வேண்டும், அத் தலைமையை ஏற்ற தாஸர்கள் எவ்விதம் ஒழுக வேண்டும் என்பதற்கு லக்ஷ்ய நிலையை உலகுக்குக் காட்டவே இந்த நாடக அங்கம்.

நம் தொடரில் இந்த அத்தியாயம் மிகவும் பாக்கியம் செய்தது. பிற்காலத்தில், காஞ்சிபுரத்திலே காமாக்ஷியாகக் குடிகொண்ட ராஜராஜேச்வரியான ஸ்ரீமாதாவின் உதவியாளர்களை அறிமுகம் செய்யுமுகமாக ஆலவாயின் அமுதாகிய அங்கயற்கண்ணி, ஆனைக்காவின் ஆருயிரான அகிலாண்டேச்வரி ஆகிய இரு மாதாக்களின் ஆதி ரூபத்தையும் தரிசிப்பிக்கும் பாக்கியம் இவ்வத்யாயத் துக்குக் கிட்டுகிறது.

இவ்விரு தாயருக்கும் முன்னதாக ஒரு குழந்தையைச் சொல்ல வேண்டும்.

ஆம், அம்பாள் படைத்துக் கொண்ட பணியாளரில் அதிமுக்கியமானது பாலா என்ற குழந்தைதான். த்ரிபுர ஸுந்தரியான ஸ்ரீ லலிதாம்பிகையின் மகளாக இவள் பேசப்படுவாள். ஆயினும் அன்னையுடனேயே ஒருமைப் படுத்தி 'பாலா த்ரிபுரஸுந்தரி' என்றே அவளைச் சொல்வார்கள். லலிதா மஹா திரிபுரசுந்தரியைச் சக்ரவர்த்தினி எனில் பாலா திரிபுரஸுந்தரியைப் பட்டத்து இளவரசி என்று கூற வேண்டும் — அப்படித்தான் அவளை நம் புராணம் 'பர்த்ருதாரிகா' என்று குறிப்பிடுகிறது. லலிதை தோன்றும்போதே பதினாறு பிராய நங்கை நல்லாளாகத் தோன்றி அதன் பின் மூவாதிருந்த ச்ருங்கார நாயகி எனில், பாலையோ தோன்றும்போதே ஒன்பது வயதுச் சிறுமியாகத் தோன்றி, இரு பொருளிலும் என்றும் 'நவ'மாக நல்லருள் புரியும் பிரம்மசர்ய ரூபிணி. சிறுமி என்பதாலேயே பாலா எனப் பெயர். ஆனால் ஆற்றலிலோ அன்னைக்குச் சளைத்தவளல்ல. அன்னையின் மந்திரம் ஸ்ரீவித்யா என்று பிரஸித்தி பெற்றதல்லவா? மகளுடைய மந்திரமும் 'ஸ்ரீவித்யா பாலா' என்றே தலைமேற் கொண்டு போற்றப் படுகிறது.

லலிதை போலவே பாலையும் செக்கச் சிவந்தவள். தனது ஒளிக் கதிர்களால் திக்குகளையெல்லாம் சிவப்பில் நிரப்புபவள் என்று இவளைக் குறித்த த்யான ச்லோகம் கூறும். ஆயினும் அன்னை காமனுக்குரிய கரும்பு வில்லையும் புஷ்ப பாணங்களையும் கைக் கொண்டிருக்க, மகளோ ஞானமூர்த்தியாக ஜப மாலையும் புத்தகமும் கரங்களில் தரித்து விளங்குகிறாள்; 'வித்யா' என்றவுடனேயே பொதுவில் நினைக்கப்படும் ஸரஸ்வதியை ஞாபகமூட்டுகிறாள். மற்ற இரு கரங்களில் அன்னை பாச-அங்குசங்களைக் கொண்டு கட்டிப்போட்டு அடக்கும் அதிகாரத்தைக் காட்ட, மகள் பாலையோ அபயமும் வரமும் சாதித்து அன்பு நெஞ்சைக் காட்டுகிறாள்.

விசித்திரம் என்ன சொல்ல? சிருங்கார மூர்த்திக்கா ஞான ரூபிணி பிறக்கிறாள்? அதிகார மூர்த்திக்கா அன்புருவள் மகளாகிறாள்?

விசித்திரமல்ல, ச்ருங்கார மூர்த்தியாகத் தோன்றினால்தான் உலகம் அவளிடம் திரும்பும். இப்படி வேஷம் போட்டு உலகைத் தன்னிடம் திருப்பிக் கொண்டபின் அவளே மெல்ல மெல்லப் பக்குவம் செய்து அதற்கு ஞானத்தைப் பிறப்பிப்பாள். ஞானபாலை அவளிடம் பிறப்பதன் மர்மம் இதுதான். ச்ருங்கார தேவதையாய் உள்ளபோது லோக வாழ்வில் அதியாக ஓடிவிடாமல் நெறிமுறைகளைக் காப்பதற்காகக் கட்டிப்போட்டு அடக்கி அதிகாரத்தைக் காட்ட வேண்டியிருக்கிறது. இதிலே பக்குவம் பெற்று ஞான வழிக்குத் தயாராகி விட்டவர்களிடமோ அபயமும் வரமும் பாலித்து அன்பு செய்தாலே போதுமானதாகிறது — ஸம்ஸார பீதியை நீக்கும் அபயம்; தன்னையே அடியாருக்குத் தந்து தானாக அவர்களை ஆக்கிக்கொள்ளும் வரம்.

விந்தையாக, லலிதோபாக்யானத்தில் பாலை ஆவிர்பவித்தது பற்றி இந்தக் கட்டத்தில் ஏதும் கூறப்படவில்லை. இதர பரிவாரங்களின் உற்பவம் மட்டுமே கூறப்

படுகிறது. பிற்பாடு யுத்தத்தில் பண்டனின் புத்திரர்கள் படையெடுத்து வரும் கட்டத்தில்தான் திடுமென பாலாவைப் பற்றிய பிரஸ்தாவம் வருகிறது. அப்போதும் அவள் எப்படித் தோன்றினாள் என்பது பற்றி எதுவுமே சொல்லப்படவில்லை. "பண்ட புத்ரரின் வீர கர்ஜனை கேட்டு பாலா குதூஹலம் அடைந்தாள்" என்று முதல் முறையாக அவள் பெயரைச் சொல்லி, அவளை "லலிதா தேவியின் குமாரி; அன்னையின் பக்கலிலேயே உறைபவள்; சக்தி கணம் யாவற்றாலும் பூஜிக்கப்படும் பராக்ரமசாலினி; லலிதைக்கு ஈடானவள்; லலிதைக்கு வெளியே சஞ்சரிக்கும் மூச்சுப் போன்றவள் (அத்தனை அருமை!); முக் கண்ணியான அன்னையின் நான்காவது கண்ணானவள் (ஆம், கண்மணிதான்!)" என்று மட்டுமே அறிமுகம் நடக்கிறது.

காமேச்வரியின் குமாரி என்ற போதிலும் காமேச்வரனிடம் அன்னை அவளை ஈன்றதாக எங்குமே குறிப்பில்லை. ஏனைய பரிவாரமனைத்தையும் அன்னை, அப்பனின் சேர்க்கையின்றித் தானொருத்தியே படைத்து விட்டதைப் போலவே பாலையையும் தோற்றுவித்திருக்கக் கூடுமென்று எண்ணும்படி உள்ளது.

ஸ்ரீராமனுக்குக் கோதண்டம் போல் ஸ்ரீ ராஜ ராஜேச்வரிக்கு முக்கியமானது கரும்பு வில். அந்த வில்லி லிருந்து 'மந்த்ரிணி' என்ற தனது அமைச்சியைப் படைத்துக் கொண்டாள் அரசி. மதுரக் கரும்பிலிருந்து தோன்றிய மந்திரிணியே பிற்காலத்தில் மதுராபுரி மஹா நாயகியான மீனாம்பிகையாய் அவதரித்தாளென்பார்கள். இடையே மாதங்கி என்ற திருநாமத்தில் மதங்க முனிவருக்கு மகவாய் வந்திருக்கிறாள். தச மஹா வித்யைகள் என்று சிறப்பிக்கப் படும் பத்துப் பெரும் சக்திகளில் மாதங்கி ஒருத்தி. அமைச்சி என்றதால் இவள் ராணிக்குக் குறைந்தவளென எண்ணிவிட லாகாதென்றே, இவளுக்கு ராஜ மாதங்கி என்றும் ராஜ சியாமளா என்றும் திருநாமங்கள் கூறப்படுகின்றன. பச்சைப் பசேலென்று சியாம வர்ணம் வீசுவதால்

ச்யாமளா. மரகத மீனாக்ஷி என்றே சொல்கிறோமல்லவா? லலிதையின் செஞ்ஜ்ஜோதியே இங்கே குளிர்ச்சியாக, வளமையின் வளர்ச்சியாகப் பச்சைக் காந்தி வீசுகிறது. லலிதையின் ச்ருங்காரம், பாலையின் ஞானம் இரண்டும் கலந்து உருவானவளிவள். இவள்தான் ஸங்கீத தேவதை. இவளைக் குறித்து எழுந்ததே பிரக்யாதி பெற்ற 'ச்யாமளா தண்டகம்'. அது கூறுவது போல மாணிக்க வீணை தரித்து நிற்கிறாள். இசை வடிவான கிளியையும் கரத்தே தாங்குகிறாள். இசையால் ஜீவனைச் சிற்றின்ப சிருங்காரத்திலும் ஆழ்த்தலாம், பேரின்பப் பெருஞானத்திலும் உயர்த்தலாமல்லவா?

அரசியான லலிதைக்கும் இவளுக்கும் ஏற்றத் தாழ்வே இல்லை என்பதால்தான் 'ச்யாமளா தண்டகம்' இரண்டாம் ச்லோகத்தில் இவளைக் கரும்பு வில் முதலான நான்கு ஆயுதங்கள் கொண்ட சந்திரசேகரியான லலிதையாகவே வர்ணித்திருக்கிறது.

லலிதைக்கு உரிய ராஜ முத்ரையான மோதிரத்தை அவளையன்றிப் பெற்ற ஒரே ஒருத்தி மந்திரிணிதான் என நம் உபாக்யானம் கூறுகிறது. இதனால் 'முத்ரேச்வரி' என்றும் இவளுக்கு ஒரு பெயர் ஏற்பட்டிருக்கிறது. உபாஸனையில் கரத்தால் பிடிக்கும் முத்ரைகளுக்குத் தலைவியானதாலும் இவள் முத்ரேச்வரி ஆகிறாள். இவளிடம் ஆட்சிப் பொறுப்பையே மஹாத்ரிபுரஸுந்தரி விடுவதுண்டு என்பதை "மந்த்ரிணீ ந்யஸ்த ராஜ்யதூ:" என்று ஸஹஸ்ரநாமத்தில வரும் பெயர் நவில்கிறது.

காமேச்வரியான அந்த ராணிக்கு உரிய ஸ்ரீசக்ரம் போல மந்த்ரிணிக்கு உரிய சக்ரத்தில் (யந்திரத்தில்)தான் மூன்றாவது வரிசையில் காமராஜன், மகரத்வஜன் முதலான எல்லா மன்மதர்களும் இடம் கொள்கிறார்களென்பதும் இவ்விருவரின் ஒற்றுமையைக் காட்டுவதாகும். காமேச்வரி போலவே திருமாலால் சிவனாருக்குக் கன்யாதானம் செய்விக்கப் பெற்ற பெருமையும் மீனாம்பிகைக்கு இருக்கிறது!

நிறத்தால் பசுமையையும், இசையால் இனிமையை யும் பரப்பும் மந்திரிணி அன்பால் அனைவரையும் வசமாக்கிக் கொள்பவள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? நாமும் இவ்வாறே மூவுலகையும் அன்பால் வெல்லுவதற்கு வழியாக இவளது பதினாறு நாமங்களை செப்பினாலே போதும் என்கிறது புராணம். நவிலும்போதே நாவினிக்கும் நாமங்கள்: ஸங்கீத யோகினி, ச்யாமா, ச்யாமளா, மந்த்ர (அல்லது மந்த்ரி) நாயிகா, மந்த்ரிணி, ஸசிவேசானி ('ஸசிவ' என்றாலும் அமைச்சர் என்றே பொருள்), பிரதானேசி, சுகப்ரியா (கிளியைக் கொஞ்சுபவள்), வீணாவதி, வைணிகி (இதற்கும் வீணாகானம் செய்பவளென்றே பொருள்), முத்ரிணி, ப்ரியகப்ரியா ('ப்ரியகம்' என்னும் கடம்ப விருக்ஷத்தில் பிரியமுள்ளவள். மீனாக்ஷியைக் கதம்பவனவாஸினி என்கிறோமல்லவா?), நீபப்ரியா (நீபம் என்றாலும் கடம்பம்தான்), கதம்பேசி, கதம்பவனவாஸினி, ஸதாமதா (எப்போதும் அன்பே மத நீராகப் பெருக ஆனந்த மதுவைப் பருகிக் கொண்டிருப்பதால் "ஸதாமதா").

ஆஹா! லலிதோபாக்கியானம்தான் தினுசு தினுசாக எத்தனை தேவி ரூபங்களை நமக்கு தரிசனம் செய்து வைக்கிறது! ஸௌந்தர்ய மயமான த்ரிபுரஸுந்தரி, பாவன பரிசுத்தையாக ஓர் பாலை, மாதுர்ய மநோஹரமாக மந்த்ரிணி! இனி உக்ர வீரமான தண்டநாதா!

அரசி லலிதைக்கு இளவரசி பாலை, அமைச்சர் மந்திரிணியெனில் சேநாபதிதான் தண்டநாதை அல்லது தண்டினி எனப்படும் வாராஹி.

காமேச்வரியின் மலரம்புகளிலிருந்தே இந்த உக்ர வீர்யை பிறந்தாளென்று காண்கிறோம். சேராததை யெல்லாம் சேர்த்துக் காட்டும் பராசக்தியின் சதுரத்துக்குச் சான்று!

இதுகாறும் பார்த்த திருவுருவங்களுக்கெல்லாம் வித்யாசமாக தண்டநாதை வராஹ முகம் கொண்டு விளங்குகிறாள். எதிரிகளின் உயிரைத் தோண்டி அகழ்ந்

தெடுப்பவள் என்று அர்த்தம். ஜீவனின் உட்பகைகளையும் தான்! திருக்கரங்களிலே கலப்பையும் உலக்கையும்! எதிரியை ஒரே இழுப்பாய் இழுத்து மண் சேர அமுத்தவே கலப்பை; அவர்களைப் பிளந்து தள்ள உலக்கை. பக்தர் விஷயத்தில் இவ்வாயுதங்களே அன்பைப் பரிமாறும் அமுதக் கரண்டிகளாகின்றன — ஜீவ மனத்தை நன்கு உழுது பண்படுத்தக் கலப்பை; பண்பட்ட ஜீவனிடம் விளையும் இயக்கங்களிலும் இருக்கக்கூடிய முன்வினை உமியை நீக்க உலக்கை.

தானைத்தலைவியான இவளுக்கும் அரசி லலிதை யோடு ஈடாக நிற்கும் பெருமை உண்டு என்பது அவளது சிம்மவாஹனத்தையே இவளும் ஊர்தியாகக் கொள்வதி லிருந்து தெரியும். மஹிஷ வாகனம், மான் வாகனம் முதலியனவும் கொண்டு மஹிமை காட்டுபவள்.

ஜம்புகேச்வரத்தில் அப்புலிங்கனை மணக்க இவள் அவதாரம் செய்கையில் ஸர்வலோக ராணி எனப்பொருள் பட 'அகிலாண்டேச்வரி' என்றே பெயர் பெற்றிருக்கிறாள்! இதை ஆக்ஷேபித்து 'அப்பீல்' செய்ய இடமே வைக்காமல் சங்கர பகவத்பாதரும் இந்த அகிலாண்டேச்வரிக்கு வாராஹி யந்திரமின்றி ஸ்ரீசக்ர உருவாகவே அமைந்த தாடங்கங்களை அணிவித்திருக்கிறார்! வராஹமுகமோ, கலப்பை உலக்கைகளோ இன்றிக் கருணாமூர்த்தமாய் அவளும் ஆனைக்காவிலிருந்து கொண்டு ஸர்வ லோகத்துக்கும் அருட் காப்பளித்து வருகிறாள்.

தண்டநாதை போருக்குப் புறப்பட்டபோது, தேவர்களே அவளது உத்தண்டகோலம் கண்டு பயந்தோடி, தொலைவிலிருந்தே அவளது பன்னிரண்டு நாமங்களைக் கூறிப் பணிந்தனர் என்று ஹயக்ரீவர் கூறி, நாமும் அறிய அந்த நாமங்களைக் கூறுகிறார்: பஞ்சமி, தண்டநாதா, ஸங்கேதா, ஸமயேச்வரி, ஸமய ஸங்கேதா, வாராஹி, போத்ரிணி (இதற்கும் வராஹமுகி என்றே பொருள்), சிவா, வார்த்தாலி, மஹாஸேனா, ஆக்ஞா சக்ரேச்வரி, அரிக்னி (சத்ருக்களை வெல்பவள்).

லலிதாதேவி பாசத்தை ஒரு சொடுக்குச் சொடுக்க மிடுக்காய் அதிலிருந்து ஆவிர்பவித்தாள் அச்வாரூடை. புரவியில் ஆரோஹணித்த இவளே ஸ்ரீமாதாவுடைய குதிரைப் படைக்குத் தலைவி.

அங்குசத்தை அம்பிகை ஓர் உதறு உதற அதிலிருந்து உதித்தாள் யானைப் படைத் தலைவியான ஸம்பத்கரி.

கயிற்றால் கடிவாளமிட்டு ஓட்டப்படும் குதிரைக்குப் பாசத்துடனும், அங்குசத்தால் அடக்கப்படும் யானைக்கு அம்பாளின் அங்குசாயுதத்துடனும் தொடர்பு உண்டுதானே?

இதன் பின் எண்ணிறந்த ஸேனாவீரர்களையும் தேவி தோற்றுவித்தாள். வீரர்கள் அல்ல, வீராங்கனைகள்! பெண் போலீஸை இப்போது சொல்கிறோம். அன்றே அம்பிகை முற்றும் பெண் மயமான படையாகப் படைத்து விட்டாள்! 'சக்தி ஸேனை' என்றே அதற்குப் பெயர்.

## 8

பெண் குலத்தை நம் முந்தையர் தாழ்வுபடுத்தினர் என்ற கூற்றுக்கு முற்றிலும் மாறாகப் பெண் தெய்வமான பிராட்டியையே முழுமுதற் கடவுளாகக் காட்டும் நமது புராணம் அவள் அஸுர வதம் செய்ததும் பெண் படை கொண்டேதான் என்று காட்டுகிறது. போளியின் இனிப்பு கூடுவதற்கு அதன் மேல்மாவில் லேசாக உப்புத் தூவிக் கொள்ள வேண்டும் என்பதுபோல் இச் சக்தி ஸேனையின் பெருமைக்கு ருசி கூட்டவே ஏதோ துளி ஆண் தெய்வங்களுக்கும் யுத்தத்தில் பங்கு தந்திருக்கிறாள்! ஒரு சில பைரவர்களையும், மந்த்ரிணிக்கு உரிய கீதி சக்ரத்தின் சுற்றுக்களில் ஆறாவதிலும், தண்டினிக்கு உரிய கிரி சக்ர

பரிவாரங்களுக்கு மத்தியிலும்தான் ஆடவர்களான வீரரைப் பார்க்கிறோம். ஆற்றலைக் குறிப்பதான 'சக்தி' என்ற பதமே பெண் தெய்வத்தின் பெயராயிருக்க, பெண் குலத்தைப் பலவீனராகவே நமது ஆன்றோர் கருதினரென்பது எப்படிப் பொருந்தும்?

முன்னரே சொன்னோம், போரில் அவளுக்குக் கருவியாகச் சமர் புரியக்கூடத் தமக்குத் தகுதியில்லையென அமரர் எளிமையுடன் கருதியதை. சிவபெருமான் ஏனைய தேவர்களைத் தேர்த் தட்டு, தேரின் சக்கரம், குதிரை முதலியனவாகவும், ஆயுதங்களாகவும் செய்துகொண்டு த்ரிபுராஸுரர்களை வதம் செய்யச் சென்றபோது, 'நம் ஸஹாயத்தாலேயே அன்றோ இவர் வெற்றிக்கு முயல்கிறார்?' என்று அத் தேவர்கள் செருக்குடன் நினைத்தார்கள். உடனே சிவபெருமான் அவர்களது உதவியைச் சற்றும் கொள்ளாமல் ஒரு சிறு நகை பூக்க, அவ்வளவிலேயே முப்புரங்களும் எரிந்து பஸ்மமாயின. அந்தத் தவறு இப்போது திரிபுரஸுந்தரி போருக்குச் செல்கையில் ஏற்படாமல் தேவர்களே அடங்கி நின்றனர்.

அவளும் தன்னிலிருந்தே படை வீரர்கள், ஆனை-குதிரைப் படைகள் யாவற்றையும் படைத்து விட்டாள். ஸகல ஸ்ருஷ்டியுமே அவளிடமிருந்துதானே?

அவள் முன்பு விடை கொடுத்தனுப்பி, பின் உலகங்களில் உலைந்த தேவர்களும் ரிஷிகளும் இப்போது அவள் போருக்குப் புறப்பட்டபோது, அவளுக்குத் துதி பாடவும், அவளது படைகளை உற்சாகப்படுத்தவும் வந்து குழுமி விட்டனர்.

இனி அத்தியாயத்துக்குப் பின் அத்தியாயமாக ஓரே போர் வர்ணனைதான். மாதாவின் கதையாயிற்றே, அன்பமுதப் பெருக்காகவே இருக்கும், அதில் ஆடித் திளைக்கலாம் என எண்ணுபவர்களுக்குக் குருதி ஆறுகளாகவே பார்த்துக்கொண்டுபோவதென்றால்

ஏமாற்று வேதனையாக்த்தானிருக்கும். நம்முடைய பூர்வகால யுத்த முறை பற்றிய சில பொது விஷயங்களைச் சொல்லி, குருதி ஆற்றுப் பிரயாணத்தைக் கூடியமட்டில் குறைத்தே தருவோம்.

*

புராணங்கள் தோன்றிய காலத்தைக் கருத்தில் கொண்டால்தான் நமது இதிஹாஸ புராணங்களில் அலுப்புத் தட்டுமளவுக்கு ஒவ்வோர் எதிரியுடனும் செய்த பயங்கரமான போர் விவரங்களைச் சொல்லிக் கொண்டே போவதற்குச் சமாதானம் காண முடியும். அக் காலங்களில் நமது ஜன சமூகம் பொதுவாக ரொம்பவும் ஸாத்விகமாக இருந்து வந்தது. இதைப் பயன்படுத்திக் கொண்டு அஸுர சக்திகளும், அயலாரும், நம்மிலேயே சில இடங்களில் முளைத்த துஷ்டர்களும் வெற்றி நடை போட முடிந்தது. இப்படிப்பட்ட சூழ்நிலையிலேதான் தர்ம ரக்ஷணைக்காக மக்களை வீரத்தில் உசுப்பி எழுப்பும் நோக்கத்தில் எல்லாப் புராணங்களும் தர்ம யுத்தங்களை வர்ணித்துப் போர் விவரங்களை விஸ்தாரமாகக் கொடுத்தன. பௌத்த, சமண மதங்களின் ஸாத்விக வாதத்தில் மக்கள் வீரசூரங்களை இழந்து ஹூணர், சகர், யவனர், கலப்ரர் முதலிய அந்நியர்கள் இங்கு புகுந்து ஆக்ரஹம் செய்ய, அக் காலத்தில்தான் மக்களைத் தட்டியெழுப்புவதற்காகப் புராணங்கள் பௌருஷ மிக்க தார்மிகப் போர்களை விஸ்தரித்து எழுதப்பட்டதாக வரலாற்றறிஞர் கூறுகின்றனர்.

நம் புராணம் கொடுக்கும் ஆயுதப் பட்டியலே ஆஞ்ஜநேயன் வாலாக எத்தனையோ ச்லோகங்களுக்கு நீண்டு கொண்டு போகிறது. நம் எல்லோருக்கும் தெரிந்த வில், அம்பு, கத்தி, சூலம், வேல், ஈட்டி, கதை முதலியன மட்டுமின்றி சிலருக்கு மட்டுமே தெரிந்த பரசு (கோடரி), முத்கரம் (சம்மட்டி), புசுண்டி (கவண்) முதலானவற்றையும், வெகு அபூர்வமான பிதுரம், பிந்திபாலம், சதக்நி,

உரகானனம் (இதே பொருள் கொண்ட 'பணி சீர்ஷம்' — அதாவது, பாம்பு முகம்), கரட்டம், கண்டலம் இத்யாதி நூற்றுக்கணக்கான படைக்கலங்களையும் சொல்கிறது உபாக்யானம்.

படைப் பிரிவுகளிலும் எத்தனையோ வகை தொகைகள். நமது பூர்விகர்கள் பரலோகத்தையே கவனித்து இக லோகத்தைப் புறக்கணித்ததாகக் கூறப்படும் குற்றச் சாட்டு ஸாரமற்றது என்பதைக் காட்டும் நுணுக்கமான ராணுவ இயல் இங்கு தெரிகிறது.

'அக்ஷௌஹிணி' என்பதுதான் நமது ஆதிகால ராணுவத்தில் முக்கியமான மிகப் பெரிய படையமைப்பு. ஓர் அரசனின் சைனியத்தை "இத்தனை அக்ஷௌஹிணி கொண்டது" என்றே அளவு காட்டுவார்கள். இதில் தொண்ணூற்றில் ஒரு பங்கு, படையமைப்புக்களில் சிறிய ஒன்று. அதற்கு "ப்ருதனா" எனப் பெயர். ரத-கஜ-துரக (குதிரை)-பதாதி (காலாட்படை) என்னும் நான்கில் ஒவ்வொன்றிலும் இத்தனை கொண்டது ஒரு ப்ருதனா என்று கணக்கு இருக்கிறது. அதாவது மூன்றின் ஐந்தாம் மடங்கான (3×3×3×3×3 =) 243 ரதங்களும், இதே அளவு கஜங்களும், இதைப்போல் மும்மடங்கான 729 குதிரைகளும், ஐந்து மடங்கான 1215 காலாட்களும் கொண்டது ப்ருதனா. அக்ஷௌஹிணி இதைப்போல் தொண்ணூறு மடங்காக 21870 ரதங்களும், இதே எண்ணிக்கை கஜங்களும், 65610 குதிரைகளும், 109350 காலாட்களும் அடங்கியது. மிகச்சிறிய படைப்பிரிவு 'பத்தி' எனப்படும். அது ஒரே ரதமும், ஒரே கஜமும், மூன்று குதிரைகளும், ஐந்து காலாளும் கொண்டது.

யுத்தக் கிரமத்தில் சில நமது கவனத்துக்குரியன. பௌதிக சக்தி மட்டுமே கொண்ட நம் கால அணு ஆயுதங்களை விட வலிமை பெற்ற மந்திர சக்தி பொருந்திய பிரம்மாஸ்திரம் முதலியன அக் காலத்தில் இருந்திருக்

கின்றன. அணுவுக்கும் ஆதாரமான ஆகாச அதிர்வுகளின் சப்தத்தை ரிஷிகள் கிரஹித்து, இப்பேர்ப்பட்ட சப்தக் கோவைகளால் ஆன மந்திரங்களைத் தந்திருக்கிறார் களென்பதை உணர்ந்தோமாயின், அந்த அஸ்திரங்களின் அபார சக்தியில் நம்பத் தகாததாக எதுவுமில்லை என்று விஞ்ஞான பூர்வமாகவே தெளியலாம். புராண கதா நாயகர்களாக உள்ள தெய்வ புருஷர்கள் மட்டுமின்றி எதிரிகளான அஸுர-ராக்ஷதர்களும் இத்தகைய மஹாஸ்திரங்களைப் பெற்றவர்களாயிருப்பார்கள்.

ஆயினும் அந்த அவுண, அரக்கருங்கூட ஒரு தர்மத்தைப் பின்பற்றினார்கள். அதாவது மந்திர பலத்தால் மகா வீரியம் பெற்ற இவ்வஸ்திரங்களை, கதிரியக்கத்தால் உலகுக்கு உத்பாதம் விளைவிக்கக்கூடிய இப் பயங்கரப் படைக்கலங்களைப் போர் முற்றி உச்ச கட்டத்துக்கு வந்த பின்தான் உபயோகித்தனர். சாதாரண ஆயுதங்கள் கொண்டு போராடி இனிப் பயனில்லை என்ற நிலையில் தான் இத் திவ்யாஸ்த்ரங்களைப் பிரயோகிப்பார்கள்.

'திவ்யாஸ்த்ரம்' என்று இந்தப் பயங்கர ஆயுதங் களைக் குறிப்பிட்டதில் சில நுணுக்கமான தர்மங்கள் இருக்கின்றன. வருணன், அக்னி, வாயு, பிரம்ம-விஷ்ணு-ருத்ரர்கள் போன்ற தேவர்களின் பெயர்களில்தான் இப்படிப்பட்டவையான வாருணாஸ்திரம், ஆக்நேயாஸ்திரம், வாயவ்யாஸ்திரம், ப்ரம்மாஸ்திரம், நாராயணாஸ்திரம், பாசுபதாஸ்திரம் முதலியன ஏற்பட்டுள்ளன. அதாவது, குளிர்பதனப் பெட்டி, கொதிகலன் இரண்டுக்கும் ஒரே மின்சாரம் பாய்வது போல, தேவ சக்திகள் நல்லது கெட்டது பாராமல் வெறும் சக்தி மாத்திரமாகப் பாயும் ஒரு நிலை உண்டு. அந்த நிலையில் அதைத் தவம் எனும் கம்பி மூலமாக இழுத்து ஆக்கத்துக்கும் பயன்படுத்திக் கொள்ளலாம்; அழிவுக்கும் பயன்படுத்திக் கொள்ளலாம். விந்தையாக இந்தத் தபோ பலத்தைக் கொண்டுதான் அஸுரர்கள் திவ்யாஸ்திரங்களைப் பெற்றுத்

தேவர்களையே தாக்கினர்! தவத்துக்கான பலனைத் தந்தேயாக வேண்டும் என்பதற்காகத் தங்கள் இனத்தை - தங்களையுமே - தாக்க எதிரிகளுக்குப் படைக்கலம் கொடுக்கும் தர்மத்தைத் தேவதைகள் ஆற்றினர்.

சிறிய ஆயுதங்களில் தொடங்கிப் பெரிய ஆயுதப் பிரயோகத்துக்கு வருவது போலவே சிறிய படைத் தலைவர்களிலிருந்து ஆரம்பித்து முடிவாகத்தான் நாயகன் யுத்தத்துக்கு வருவான்.

இரு படைகளிலும் ஸம ஸ்தானத்திலிருப்பவர் களே — அதாவது சிறிய பகுதித் தலைவனான தளபதியை எதிர் தரப்புத் தளபதி, மொத்த சேனையையும் நடத்தும் தண்டநாதனை சத்ரு பக்ஷ தண்டநாதன் என்ற முறையில் தான் பெரும்பாலும் எதிர்த்துப் போராடிக் கொள்வர்.

புராணங்களில் தேவ விரோதிகளும் அதிவீர பராக்கிரமமுள்ளவர்களாகவே சித்தரிக்கப்படுவது குறிப்பிடத் தக்கது. தேவர்களினும் சிறந்த முயற்சிப் பிடிவாதம் கொண்டவர்களாக உக்ர தபஸ் செய்து உத்தமாயுதங்களைப் பெற்ற அவர்கள் வீரிய சௌரியங் களில் உயர்ந்தவர்களாகவே வர்ணிக்கப்படுகிறார்கள். பலிஷ்டர்களைப் போரிட்டு வெல்வதுதான் புராண புருஷர்களுக்குப் பெருமையேயன்றிப் பேடிகளை ஜயிப்பதல்லவே!

இன்னொரு சிறப்பு, தேவ சத்ருக்களான அசுர-ராட்சதரும் தங்களுக்குள் மிகுந்த ஒற்றுமை, ராஜ விச்வாஸம், அன்புறவுப் பிணைப்பு ஆகியன கொண்டிருப் பார்கள். தங்கள் இனப் பிரஜைகளை அருமையாகப் பேணிக் காப்பார்கள்.

பொய்யறியாத புராண கர்த்தர்களான ரிஷிகளுக்கு உள்ளூர எவரும் விரோதமில்லாததால் தங்களது காப்பிய நாயகர்களுக்கு விரோதமானவர்களிட முள்ள பெருமைகளை ஒளித்து மறைப்பதில்லை.

*

கோமாளி பண்டனை வெல்வது நம் அன்னைக்கு ஒரு பெருமை இல்லை என்பதால் போலும், இந்தக் கோமள ஸுகுமாரி கோபக்கனல் மாரியாகப் போருக்குப் புறப்படும் கட்டத்தில் பண்டனும் அரச மிடுக்கு மிக்க மாவீரனாக நம் காட்சிக்கு வருகிறான். ஆயினும் சற்று அதிகமாகவே தலை துள்ளித்தான் பேசுகிறான். 'பண்ட' (பம்ட) என்பதற்கான எழுத்துக்களைத் திருப்பினால் 'டம்ப' என்றாகும். இதற்கேற்ப, பகட்டுக்காரனாகவும், வீண் பெருமைக்கார னாகவும் இருக்கிறான் நம் சத்ருராஜன்.

பண்ட ராஜதானியை நோக்கி அன்னை புறப் பட்டது கோலாஹலக் கலியாண உத்ஸவமாக இருந்தது. ஆனகம், பணவம், கோமுகம், டிண்டிமம் முதலான பலவித யுத்த பேரிகைகள் எழு கடல்களும் பொங்கி எழும்பினாற் போல் கோஷித்தன.

முதலில் கஜமுகன் என்றாலும் நம் கதையில் அவனது உற்பவம் பிறகுதான்! ஆயினும் அதற்கு முன்னடையாளமாக யானைப் படையே முன்னால் சென்றது. அதன் தலைவி ஸம்பத்கரி. ரண கோலாஹலம் என்ற மத்தகஜத்தின் மீது வீற்றுப் புறப்பட்டாள்.

தொடர்ந்தாள் புரவிச் சேனையுடன் அச்வாரூடை. அவள் அமர்ந்திருந்த குதிரையான அபராஜிதம் புவி மீது குளம்பு படுவதே தெரியாமல் படபடவெனச் சென்றது, முடிவில் அம்பாள் பெறவிருந்த வெற்றிக்கு இப்போதே கெட்டிமேளம் கொட்டுவதாக இருந்ததாம்! இரு கைகளில் பாசாங்குசங்களுடனும் மேலும் இரண்டு கைகளில் ஒன்றால் கடிவாளத்தை இழுத்துக் கொண்டும், மற்றதில் சவுக்கு தாங்கியும் அச்வாரூடை குதிரைப் படையை நடத்திச் சென்றாளாம். இல்லை, நடத்திச் செல்லவில்லையாம்; நாட்டியமே ஆடிக் கொண்டு போகச் செய்தாளாம்!

மஹிஷக் கொடிகளும், மான் கொடிகளும், சிங்கக் கொடிகளும் பளபளத்துக் காற்றில் படபடக்க, வேறு யார், தண்டநாதைதான் இதோ அணிவகுத்துச் செல்கிறாள்! அவளுக்காகப் பரிவாரங்கள் தூக்கிப் பிடிக்கும் ஏராளமான வெண் குடைகள் ஆதவனொளியை அடியோடு மறைத்துவிட அவற்றின் பால் வெண்மையே அங்கு அநேக சந்திர மண்டலங்களை உண்டு பண்ணினாற்போல் தண்ணொளி பெருக்கினவாம்! அதுவும் போதாதென்று குடைகளின் பொன் தண்டுகளோ கதிரவனாகவும் ஜோதி வீசினவாம்!

இந்த ஒளியையெல்லாம் உறிஞ்சிக் கொள்வது போல தண்டினியாகிய வாராஹியைப் போலவே வராஹ முகமும் கோரைப் பற்களும் அனற் பார்வையும் கொண்ட அவளது சக்திகள் கன்னங் கரேலென்ற வஸ்திரமுடுத்துக் கரிய எருமைகளில் ஏறிச் சென்றனர். வாராஹியும் தனக்கே உரிய ஐந்தடுக்குத் தேரான கிரி* சக்கரத்தில் புறப்பட்டாள். கிரி என்றால் வராஹம் என்றே பொருள்.

லலிதை, சியாமளை (மந்திரிணி), வாராஹி (தண்டினி) ஆகியவர்களுக்கான யந்த்ரங்கள் உண்டு. யந்த்ரத்தைச் சக்ரமென்றும் சொல்வார்கள். (லலிதையின் யந்த்ரம்தான் புகழ்பெற்ற ஸ்ரீசக்ரம் எனப் பார்த்தோமே!) இந்த யந்த்ரங்களுக்குப் பல ஆவரணங்கள் உண்டு. ஆவரணம் என்றால் சுற்று. யந்த்ரத்தின் மையப் புள்ளி அதற்குரிய தேவியின் ஸ்தானமாய் அமைய, அதைச் சுற்றி இந்த ஆவரணங்கள் அமைந்திருக்கும். ஒவ்வொரு ஆவரணத்திலுமுள்ள பல கோணங்களில் பரிவார தேவதைகள் இடம் பெற்றிருப்பார்கள். லலிதையின் ஸ்ரீசக்ரம் ஒன்பது ஆவரணங்களும், சியாமளா தேவியின் கீதி (அல்லது கேய) சக்ரம் ஏழு ஆவரணங்களும், வாராஹியின் கிரி சக்ரம் ஐந்து ஆவரணங்களும் கொண்டவையாகும்.

* Kiri. (Giri அல்ல)

இந்த யந்திரங்களே இப்போது இவர்கள் போருக்குப் புறப்பட்டபோது இவர்களுக்கு ரதங்களாயின. இவற்றில்தான் ஐந்தடுக்குத் தேராகப் பரிணமித்த கிரி சக்ரத்தில் சென்றாள் தண்டநாதை.

இவளது பயங்கரப் புறப்பாட்டுக்கு அற்புத மாற்றாக இதோ பச்சை சுந்தரி மந்திரிணி இசைக் கச்சேரி கோஷ்டி சேர்ந்தாற் போலத் தன் ஸைன்யத்துடன் இனிக்கப் புறப்படும் காட்சி. இவள் ஸங்கீத யோகினி அன்றோ? மந்திரிணி என்றால் மந்திராலோசனை சொலபவள். மனத்தைக் காப்பது எதுவோ, மனத்தால் காக்கப்படுவது எதுவோ, மனத்தைக் கொண்டு தீர்க்கமாக எண்ணுவதால் காப்பது எதுவோ அதுவே மன்-த்ரம். அரசனுக்கு மந்திரி கூற வேண்டிய அறிவுரையும் இதனால் தான் மந்த்ரமாகிறது; அவனும் மந்த்ரி ஆகிறான். லலிதைக்குப் படைத் தலைவியாகி, அவளுக்கு உடற் பலத்தால் வலுத்தருவது போலப் பாத்திரமேற்கும்படி அவளாலேயே படைக்கப்பட்டவள் தண்டினி. எனவே பௌதிக பலத்தைக் காட்டும் பொருட்டு அவள் உக்ர உருவம் கொண்டிருக்கிறாள். ஸ்ரீமாதாவுக்கு அறிவாலும் மனத்தாலும் பக்கபலம் தரப் பாத்திரமேற்றவள் மந்த்ரிணி. எனவே இவள் இனிமையும், பசுமையுமே வடிவாக இருக்கிறாள்.

இவள் யுத்தத்துக்கு எழுந்தருளும் எழில் பார்ப்போம்.

## 9

**போர்** முரசங்களை அடக்கிக் கொண்டு வீணைகளின் மதுர ரீங்காரம்! மந்த்ரிணியின் பரிவார தேவிகள்தான் வீணை மீட்டிக் கொண்டு ரணகளம் கிளம்பு

கிறார்கள். வீணையின் மதுரத்துடன் அவர்களது திரு வாயிலிருந்து மதுவின் மதுரமணம் பரவுகிறது.

இந்த சக்திகளின் வாஹனங்களோ அழகழகான பக்ஷிகள். மயில், ஹம்ஸம் போன்றவை. குரலழகு கொண்ட குயில் வாஹனமும் உண்டு.

இதென்ன, சற்றும் பொருத்தமில்லாமல் நகுல (கீரி) வாஹனங்களும் காண்கின்றன? அதுவும் ஒரு காரணமாகத் தான். எதிரி ஏராளமான நாகக் கணைகள் வீசவிருப்பதை மந்த்ரிணி அறிவாள். அப் பாம்புகளை அழிப்பதில் மயில்களும் தவறிவிடக்கூடிய இடத்தில் நிச்சயம் வென்று கொன்று காட்டத்தான் கீரிப் பிள்ளைகள். கருடபக்ஷியும் இவ்வாறே அரவப்படையை அழிக்கத் துணை கொள்ளப் படுகிறது.

ஜீவனில் பராசக்தி பிராணசக்தியாக இருக்கையில் முதுகுத் தண்டின் அடியிலுள்ள மூலாதாரத்தில் குண்டலினீ என்ற மண்டலித்த (சுருண்ட) பாம்பாகத்தான் இருக்கிறாள். இக உலக இன்பங்களான விஷயஸுகம் எனும் விஷத்துக்கு ஆதாரமான பாம்பாகவே இவளை நம் நிலையில் நினைக்க முடிகிறது — நமது இயற்கை உந்தல்களையும் இயக்கங் களையும் இவள் இயற்றி வைப்பதைக் கொண்டு. ஆனால் தற்போதைய நமது ஸ்திதியில் இவள் உறங்கும் பாம்பாகத் தனது உட்சக்தியைக் காட்டாமல்தான் இருக்கிறாள். இவளை யோகமோ, பக்தியோ, ஞானமோ, தன்னலமற்ற கர்மமோ கொண்டு அதில் நம் உள்ளார்ந்த ஈடுபாட்டினால் எழுப்பிவிட்டால், இவள் முதுகுத் தண்டின் வழி ஏறி ஏறிச் சென்று முடிவாய் நம் முடியுச்சியிலுள்ள ஸஹஸ்ராரம் என்ற ஸ்தானத்தை அடைவாள். அங்கே விஷத்துக்கு நேர் எதிராக அமிருத தாரையை நம்முள் கொட்டி, அக உலகப் பேரின்பமாய் அவளோடேயே சிவமாம் பரம்பொருளுடன் ஐக்கியமுறும் உயர்வை அருள்வாள். மண்மயமான வாழ்வு பதியும் மூலாதாரமும் அதிலிருந்து மேலேறும் வழியான ஸுஷும்னையும் 'குலம்' எனப்படும். இதில் விஷமெல்லாம்

நீங்கிச் சின்மயமாகி அமுதம் பருகும்போது 'குலம் இல்லாத', அல்லது 'குலத்துக்கு மாறான' அநுபவமே அல்லவா கிடைக்கிறது? இதுதான் 'ந குலம்' — அதாவது விஷயப் பாம்பை இல்லாமற் செய்யும் கீரியான நகுலம். பின்னால் மந்திரிணியே நகுலேச்வரி ஆவது பார்ப்போம்.

மந்திரிணியின் ஏழடுக்குத் தேருக்கு 'கேய சக்ர ரதம்' அல்லது 'கீதி சக்ர ரதம்' என்று பெயர். 'கேயம்', 'கீதி' என்ற இரண்டுமே ஸங்கீதத்தைக் குறிப்பவைதான். இத்தேர் நகருகையிலேயே அதன் மணிகள் ஸப்த ஸ்வரங்களை இசைக்கும். ஸப்த ஸ்வரங்களுக்கேற்ப இத் தேருக்கு ஏழு தட்டுக்கள். (கேய சக்ர யந்திரத்தில் ஏழு ஆவரணங்கள்.)

மந்திராலோசனையில் ஒரு மந்திரி கூறும் நல்லறிவும் நடைமுறைப் பயிற்சிக்கு உரியதாக அறவழியை இசைவு செய்து தரும் இசைதான்!

ஸ்ரீராஜராஜேச்வரியைப் பணிந்து, அவள் உத்தரவு கொண்டு சியாமளையான மந்திரிணி தனது திவ்ய ரதத்தில் ஆரோஹணித்துக் கிளம்பினாள்.

அவளது கடாக்ஷம் எங்கு தீண்டினாலும் அங்குள்ள சக்தி ஸேனைகள் ஒரு புதிய உற்சாகம் கொண்டன.

செந்தாமரையாய் உள்ளங்கையும், அதன் பச்சிலையாய்ப் புறங்கையும் கொண்ட ச்யாமளை அக் கரத்தில் ஒரு தாமரையும் ஏந்தி இருப்பாள். அதிலே அவளுக்குப் பிரியமான கிளி அமர்ந்து பாடிக் கொண்டிருக்கும். அதனால் அவளுக்கு 'சுகப்ரியா' என்று ஒரு நாமமுண்டு. உள்நாதத்தை வெளிச் சொல்லாக்கித் தரும் 'வைகரி' என்னும் வாக்தேவி இவளே. அதைக் காட்டத்தான், மாந்தர் தவிர மிருக-பக்ஷி இனங்களிலே பேசும் திறம் பெற்ற ஒரே ஜந்துவான கிளியை இவள் தாங்குவது. இன்றும் இவள் ஆலயம் கொண்டுள்ள ஆலவாயில் கிளிகள் "மீனாக்ஷி!"

"மீனாக்ஷி!" என்று குதூஹலமாய்க் கூச்சலிடக் கேட்கிறோம்!

காந்தர்வ வேதமாம் கானத்தின் உருவான இக் கிளியிடமிருந்து தநுர்வேதம் வெளிப்பட்டதாம்! உல்லாஸத்தின் உள்ளிருந்தும் உரிய சந்தர்ப்பத்தில் ஆக்க வேகம் பிறக்க வேண்டுமென அர்த்தம் போலும்! முத்தலைகளும் முக்கண்ணும் கொண்ட தநுர்வேத தேவதை சியாமளையிடம், "அன்னையே! அஸுர வதத்துக்குக் கிளம்பிய உனக்குத் துணை புரிய வேண்டியது என் கடமை. சித்ர ஜீவமென்ற இவ்வில்லை ஏற்றருள்வாய்!" எனப் பிரார்த்தித்தது. அந்த அற்புத தநுஸையும், அக்ஷயமான (அதாவது எடுக்க எடுக்க அம்பு குறையாத) இரு அம்பறாத்தூணிகளையும் அர்ப்பணித்தது.

அங்கீகரித்த மந்த்ரிணி வீணைத் தந்தி மீட்டும் தன் காந்தள் விரலால் சித்ரஜீவ வில்லில் நாண் பூட்டி டங்காரம் செய்தாள். அவுணரை அஞ்சி நடுங்கவும், அமரரை ஆனந்த நடமிடவும் செய்தது அதன் கம்பீர ஒலி.

ஆயிரம் அக்ஷௌஹிணிகள் சூழ, யந்த்ரிணி, தந்த்ரிணி என்ற இருவர் இரு மருங்கும் மெய்க்காவலராக வர, மந்த்ரிணி யுத்த பூமி சென்றாள்.

சக்ரவர்த்தினி ஸாக்ஷாத் ஸ்ரீ லலிதா த்ரிபுரஸுந்தரி சக்ர ராஜ ரதத்தில் அதி கம்பீரமாய் அமர்ந்து இவர்களுக்குப் பின்னே கிளம்பினாள், ஜயா, விஜயா முதலான பிரதான பரிசாரிகைகள் வெண்சாமரம் வீச! உதய ஸூரியர் கோடியாக அம்பாளின் செம்மேனி காந்தி வீசியது. அதை விஞ்சித் தண்ணிலவு வெள்ளமாய் அவளது திருமுகம் கருணை பெருக்கிட்டது. மறக்கருணை உந்தவே யுத்த ஸன்னாஹம் கொண்ட தேவியைத் திரிமூர்த்தியரும் ஏனைய தேவதையரும் அடிதொழுது, அமுத நாமம் இருபத்தைந்தும் கூறி அர்ச்சித்து, "ஜய விஜயீபவ!" கூறிப் புறப்பாடு செய்தனர்.

"ஸம்ஸார தாபம் தணிப்பதில் தனி ஸாமர்த்தியம் வாய்ந்த நாம ரத்தினங்கள்" என ஹயவதனன் கூறும் அந்தக் கால் நூறு திருப்பெயர்கள்: ஸிம்ஹாஸனேசி, லலிதா, மஹாராஜ்ஞீ (மஹாராணி என அர்த்தம். கர்வம் எனப் பொருள்படும் 'ராங்கி' என்பது 'ராஜ்ஞீ'யின் திரிபுதான்!), வராங்குசா (சிறந்த அங்குசமுடையவள்), சாபினி (வில்லேந்தியவள்; கரும்பு வில்தான் ஸ்ரீமாதாவின் முக்கியமான ஆயுதம்), த்ரிபுரா (மூவருக்கும் முந்தியவள் என்று இதற்கொரு பொருளுண்டு), மஹாத்ரிபுரஸுந்தரி, ஸுந்தரி சக்ரநாதா (ஸ்ரீ சக்ரத்துக்கு ஸுந்தரி சக்ரமென்றும் பெயர்), ஸம்ராக்ஞீ, சக்ரிணி, சக்ரேச்வரி, மஹாதேவி, காமேசி, பரமேச்வரி, காமராஜப்ரியா (காமராஜனென்பது இங்கு காமேச்வரனையே குறிக்கும்), காமகோடிகா, சக்ரவர்த்தினி, மஹா வித்யா, சிவா, அனங்கவல்லபா (காமனைத் தன் மேலாதிக்கத்தின் கீழ்க் கொண்டவள்), ஸர்வ பாடலா (உடல், உள்ளம் யாவும் சிவந்தவள்), குலநாதா (குண்டலிநீ மார்க்கத்தின் தலைவி), ஆம்னாய நாதா (வேதமரபுகளின் தலைவி), ஸர்வாம்னாய நிவாஸினி (வேத வழி சாரும் எல்லா சாஸ்திரங்களுள்ளும் குடி கொண்டவள்), ச்ருங்கார நாயிகா என்பவையாகும்.

ஞானத்தாயே சிங்கார சுந்தரியாகி, இப்போது சிங்கார சுந்தரி சீறும் வீறுகொண்டு போர்க் கோலமும் பூண்டு விட்டாள்!

ஸ்ரீசக்ரராஜ ரதம் கிளம்பிற்று. அதிசய ரதம்! நாலு வேதங்களும் அதன் நாலு சக்ரங்களாயின. அறம், பொருள், இன்பம், வீடு எனும் நாலு புருஷார்த்தங்களும் குதிரைகளாகி அத் தேரில் பூட்டப்பட்டன. நித்யானந்தமே அம் மாபெரும் தேர் உச்சியில் கொடியாக ஒளிர்ந்து பறந்தது. ஸ்ரீசக்ரத்தின் ஒன்பது ஆவரணங்களை ஒன்பது பர்வா(அடுக்கு)களாகக் கொண்டு, அவ்வாவரண தேவதைகள் அனைவரும் தமது ஆயிரக்கணக்கான

பரிவாரங்களோடு வில்லேந்தி அதில் வீற்றிருக்க, மேருமலையே இடம் பெயர்ந்து செல்வது போல் ஸ்ரீமாதாவின் சீரார் ரதம் சென்றது.

இந்த ஆவரணங்களை விளக்கி, அவற்றிலுள்ள தேவதையர் பற்றி விவரிக்குமாறு இக்கதை கேட்கும் அகஸ்தியர் வேண்ட, ஹயக்ரீவர் அவ்விதமே செய்கிறார். பின்னால் தேவி வெற்றிக் கொடி நாட்டிய பின் அவளுக்கென ஓர் ஆனந்த லோகம் 'ஸ்ரீநகரம்' என்ற பெயரில் நியமிக்கப்பட்டதாக வரும். அந்த நகரமும் ஸ்ரீசக்கரத்தின் கிரமத்தில்தான் அமைந்திருக்கும். அங்கு வெகு விஸ்தாரமாக மீண்டும் இவ்விளக்கம் வந்து நம் விருத்தாந்தத்தைப் பூர்த்தி செய்கிறது. ஸ்ரீவித்யா உபாஸனை என்பது இந்த நவ ஆவரண பூஜையே ஆதலால் அப்போது வேண்டுமாயின் சுருக்கமாக இதைத் தெரிந்து கொள்ளலாம். தற்போது தடையறாமல் புறப்பட்டு விட்ட அன்னையுடைய வெற்றித் தேரின் கதிக்குக் குறுக்கே நிற்க வேண்டாம். எப்போது அவள் அவுணனை எதிர்த்துப் போரிடுவாள் என அமரர்கள் தவித்துக் கொணடிருக்கும் சமயமாயிற்றே!

விந்திய பர்வதமும், மந்தர மலையும், மஹாமேருவும் ஒன்றின் பின் ஒன்றாய்ச் செல்வது போல கிரி சக்ர, கீதி சக்ர, ஸ்ரீசக்ர ரதங்கள் ஒன்றையடுத் தொன்றாகச் சென்றனவாம். நிலம் நடுங்கிற்று. ஐந்து பூதங்களுமே சற்று அலமாந்து விட்டன. ஆயினும் இது —

போரெனில் இதுபோற் புண்ணியத் திருப்போர்
பாரினில் ஒன்று பார்த்திடற் கெளிதோ?

என்னும்படி தர்மத்தின் பொருட்டுப் பிரேம மாதா மேற்கொண்ட இன்ப விழாவென்பதைத் தேவர்கள் மனத்தில் வாங்கிக்கொண்டு பயத்தை விடுத்து துந்துபிகளை முழக்கினர். மலர் மாரி பொழிந்தனர். விச்வாவஸுவின் தலைமையில் கந்தர்வர் யுத்த கீதங்கள் பாட, தும்புருவும் நாரதரும் சூழ வந்த கலைவாணியே ஜய மங்களத் துதிகளை

கானம் செய்தாள். ஆனந்தத்தில் அவர்களது முக புஷ்பங்கள் அலர்ந்து மலர, மயிர்க்கூச்சையே ஆபரணமாகப் பூண்டு பாடினர் என்கிறது புராணம். ஜயலக்ஷ்மியை லலிதா தேவியிடம் விரைந்தோடி வரச் செய்வதற்காக இந்த சப்த கோலாஹலங்களை விஞ்சிக் கொண்டு ஸப்த ரிஷிகள் வேத வசனங்களை கன கம்பீரமாக ஓதினர்.

பண்டாசுரபுரமான சூன்யக நகரத்திலுள்ளோர் விண்ணெட்டும் மூன்று மஹாரதங்களுடன் லலிதையின் சைனியம் எங்கோ வருகையிலேயே நடுங்கத் தொடங்கினர்.

'லலிதம்' என்பதற்கு முற்றிலும் மறு கோடியின் உருவாக நின்ற தேவதைகள் அம்பாளுடைய படை முகப்பில் தண்டினியின் கிரிசக்ர ரதத்தின் இரு மருங்கும் தென்பட்டனர். தண்டினியின் முக்கியமான ஆயுதங்களான ஹலமும் (கலப்பை), முஸலமும் (உலக்கை)தான் இப்படி இரு புறமும் உக்ர தேவதா ரூபம் கொண்டு நின்றன. இவ்விரு ஆயுதங்களையே அந்தத் தேவதைகள் தம் தலைகளில் முடிபோலச் சூடியிருந்தனர். அத்தேரின் உச்சித் தட்டிலிருந்துகொண்டு உலகையே செவிடுபடச் செய்வது போலப் பற்களைக் கடகடவெனக் கடித்துக் கொண்டிருக்கும் மூன்று கண்ணனான சண்டோச்சண்டனைக் கண்டாலே போதும், சண்டைக்கு வராமல் ஓடிவிடத் தோன்றும்!

சக்திப் பட்டாளம் வருமுன் அஸுரருக்காகக் காத்திருந்த அபஜயத்துக்கு அறிகுறியாக ஓர் அபசகுனப் பட்டாளம் வந்துவிட்டது — அழகான கடற்கரையில், எழிலான மஹேந்திரமலையில் அமைந்திருந்த சூன்யக புரத்தை நோக்கி.

அந் நகரமெங்கும் ஏதோவொரு புகை மூட்டம் மண்டியது. விண்ணிலிருந்து தூமகேதுக்கள் எனும் பல எரி நக்ஷத்திரங்கள் அங்கு விழுந்தன. பண்டனின் ராஜமாளிகை

த்வஜங்களின் மேல் ராஜாளிகள் அமர்ந்து கதிரவனைப் பார்த்துக் கடோரமாகக் கத்தின. நாய்களும் கதிரோனைக் கண்டு ஊளையிட்டன. செந்நீராய் மழை பொழிய, அதனிடையே சுருள் சுருளாக ரோமங்கள் காணப்பட்டன — அதாவது அந்தணாளரின் வேள்விகளைக் கலைக்க அஸுரர் என்ன தீங்கு செய்வார்களோ, அது இப்போது அவர்கள் நகரிலேயே நடந்தது! அவர்கள் பளபளக்கத் திட்டி அணியும் கத்தி-கவசங்களும், முகம் பார்க்கும் கண்ணாடியும் காரணமின்றி ஒளிமங்கின. அஸுர மாதர் அணியும் ஹாரம் முதலான ஆபரணங்கள் கழன்று விழுந்தன.

இதுகாறும் உற்சாகத்துக்கு மேல் உற்சாகம் பெற்று, இப்போது நேர்மாறாய் உற்பாதத்துக்கு மேல் உற்பாதமாகக் கண்ட பண்டன் மந்திராலோசனை ஸபையைக் கூட்டினான்.

அசுர-அரக்கருக்கு அரசர் அறத்துக்குப் பணியாத துஷ்டரே ஆயினும், முடிவாகத் தமது உத்தேசத்தையேதான் அவர்கள் பிடிவாதமாக நடத்துவார்களாயினும், புராண இதிஹாஸங்களில் வரும் இப்படிப்பட்ட பாத்திரங்களும் ஆபத்துக் காலத்தில் மந்திராலோசனை என்பதாக அர்சவை அங்கத்தினரை யோசனை கலக்கத் தவறுவதேயில்லை. அப்பட்ட யதேச்சாதிகாரமாக அரசன் ஒருகாலும் நடத்தக்கூடாது என்ற கொள்கை அப்படி வேரூன்றி இருந்திருக்கிறது ஆதி காலத்திலே!

விசுக்ர, விஷங்கர்கள் பண்டனின் மந்திராலோசனையில் முக்கியமான பங்கு கொண்டனர். பண்டனின் தோள்களிலிருந்து பிறந்து அவனுக்குத் தம்பி முறையான இருவர்தான். இருவரில விசுக்ரன்தான் மூத்தவன். பராக்ரமத்திலும் மிக்கவன். யுவராஜ ஸ்தானத்திலிருந்தவனும் இவனே. அவுணருக்கு முக்கியம் பல பராக்ரமம் தான்! ஆனால் அறத்துக்கு முக்கியமான நீதி உணர்வு

பண்டன் தரப்பில் கொஞ்சமாவது ஒருவரிடம் இருந்தது என்றால் அது இளையவனான விஷங்கனிடம்தான்.

முதலில் விசுக்ரன் தடபுடா என்று அடித்துப் பேசினான், திரித்துப் பேசினான். தமையனாரான பண்டனை விளித்து, "தேவா! (தேவசத்ருவான அஸுரனையும் உச்ச ஸ்தானத்தில் வைக்கும்போது 'தேவ'னாகத்தான் அழைக்க வேண்டியிருக்கிறது!) தங்கள் தோள்வலி கண்டு வலுவிழந்து, மனம் வலித்த பேடித் தேவர்கள் தீக்குளிக்கப் போனார்களாம். அங்கே தற்செயலாக யாரோ ஒரு பெண் தோன்றி அவர்களுக்கு அசட்டுத் துணிச்சல் தந்தாளாம். உடனே அந்தப் பைத்தியக்காரர்கள் அவளையே பெரிதாக வெறியூட்டி விட்டிருக்கிறார்கள். அவளும் அதில் மயங்கி ஓர் அபலைப் பட்டாளத்தைச் சேர்த்துக் கொண்டு நம்மோடு யுத்தம் செய்ய வந்திருக்கிறாள். மாமலைகளைப் பிளக்க மாந்துளிர்கள் புறப்பட்ட கதைதான்!

"நம் பாணத்தில் பட்ட தழும்பு இன்னும் ஆறாமல் பிரம்மன் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறான். விஷ்ணுவோ அன்று நம்மிடமிருந்து பிடித்த ஓட்டம் இன்றும் நின்றதாகத் தெரியவில்லை. சிவன் நம் திக்கின் புறமே தலை வைக்கப் பயப்படுவான். (நன்றியின்மையின் சிகரமாக இப்படிச் சொன்னான் — ஸ்ரீருத்ர ஜப பலத்தாலேயே பண்ட ஸாம்ராஜ்யம் தோன்றியிருந்ததை மறந்து, அல்லது மறைத்து!) எனவே இந்த அபலைப் பெண் கூட்டம் வருவதை ஒரு படையெடுப்பு என்று கருதிப் பொருட் படுத்தவும் தேவையில்லை. என்றாலும் அவளுக்கு ஒரு பாடம் கற்பிக்காமல் உதாஸீனமாயிருந்து விடக்கூடாது. எனவே நமது கீழ்நிலைக் கிங்கரர்களில் எவர்களையேனும் அவளிடம் அனுப்புவோம். அவர்கள் போய் அந்த மதோன்மத்தையின் கூந்தலைப் பிடித்து இழுத்து வந்து இங்கே தள்ளட்டும். அவளை நம் அந்தஃபுரத்தில் பணிமகளாக வைத்துக் கொள்ளலாம். இது அடியேன்

விண்ணப்பம். தேவரீர் சித்தம்!" என்று அவுணர்க்கே உரிய ராஜவிச்வாஸத்துடன் முடித்தான்.

# 10

விஷங்கன் சற்று மாறான ச்ருதியில் யோசனை கூறினான். "தங்களுக்கே தெரிந்ததை நினைவூட்டு முகமாகத்தான் விண்ணப்பித்துக் கொள்கிறேன்," என்று பணிவாகத் தொடங்கினான்.

"சத்ரு பக்ஷத்தின் உண்மையான உட்பலம் என்ன என்று காணாமல் உதாஸீனம் செய்வது உசிதமாகாது. எதையும் தீர விசாரிக்க வேண்டிய மன்னனானவன் தேர்ந்த ஒற்றர்களைக் கண்ணாகக் கொண்டு எதிரியின் பலாபலங்களை நுணுகி அறிந்து வர வேண்டும். எடுத்த காரியத்தைத் திட உறுதியுடன் தொடரும்போதே ஓர் அரசன் எதெதிலிருந்து என்னென்ன அபாயம் வருமோ என்று எக்காலும் ஐயுற்றபடியும் இருக்க வேண்டும். அந்த ஐயத்தைத் தன் பிரஜைகளுக்குக் காட்டாமல் முக்ய ஆலோசகர்களிடம் மட்டுமே ஏகாந்தத்தில் வெளியிட்டுத் தீர்வுகள் நாட வேண்டும். அல்பமானவர்,• மெல்லியலார், விலங்கு என்றெல்லாம் கூட எதிரியை அலக்ஷ்யப் படுத்துவதற்கில்லை. ஒரு குள்ளப் பார்ப்பனப் பயல் மஹாபலியின் மஹாபலத்தை ஒடுக்கவில்லையா? சும்ப நிசும்பரும், மஹிஷனும் சண்டிகை என்ற ஒரு பெண்ணால் த்வம்ஸம் செய்யப்படவில்லையா? பாதி மனிதனாகவும் பாதி சிம்மமாகவும் வந்த நரஹரி ஹிரண்யனை ஹதம் செய்ததே! எனவே சக்தி ஸேனை என்பதாகப் படையெடுத்துள்ளவர்கள் மெய்யாலுமே சக்தி படைத்தவர்களா, அவர்களுக்குத் துணை பலமாக எவரேனும் உள்ளனரா

என்பதையெல்லாம் சாரர்களைக் கொண்டு தீர அறிந்து வரச் செய்ய வேண்டும்" என்றான்.

பண்டன் பரிஹாஸச் சிரிப்பில் வெடித்தான். "பிரமாதந்தான் போ, உன் விசார ஸாமர்த்தியம்! ஸம பலமுள்ளவர் குறித்து மட்டுமே செய்ய வேண்டிய கணிப்புக்களை ஒரு புடவைப் பட்டாளத்தின் பொருட்டுச் செய்யச் சொல்கிறாயே, பேஷ்! ஏற்கெனவே ஒற்றர் மூலம் அந்த 'மஹாபட்ட' சக்தி ஸேனை பற்றித் தெரிந்து கொண்டிருக்கிறேனப்பா! . அவர்களுடைய தலைவியின் 'லக்ஷண'த்தைப் பார். பேரே லலிதா — நோஞ்சான் என்று பொருள். போரில் முன்னநுபவம் பெற்றவளா என்றால் அதுவுமில்லை, ஏதோ சிறிது மாய மந்திர சக்தி கொண்டவளாம். (மஹா மாயையைத்தான் இப்படி வர்ணிக்கிறான்! அதுவும் அவள் மாயையே!) அதைக் கொண்டு அவள் செய்துள்ள அல்ப ஸ்ருஷ்டியைத்தான் 'சக்தி சேனை' என்று பெத்தப் பெயர் கொடுத்து நடத்தி வந்திருக்கிறாள்.

"பெண்கள் சாகசக்காரிகள், காரியாகாரியம் அறியாது அழிவு படுவர் என்பது எத்தனை உண்மை? இல்லாவிடில் தேவாதிதேவரையும் அதிகாரமிழக்கச் செய்து பரதையராகப் பறக்கவடித்த இந்தப் பண்டமஹாஸுரனை எதிர்க்க, நம் மகிமை தெரியாத, நேற்று முளைத்த இந்தப் பூஞ்சை லலிதை முற்படுவாளோ? புடவைப் பட்டாளத்தை ஒரு பொருட்டாய் எண்ணி நான் போர்முகம் செல்ல வேண்டியதே இல்லை. நமது எண்ணிறந்த ஸேனாநாயகர் களில் ஒருவனே போதும். அவர்களில் ஒவ்வொருவனும் ஸப்த ஸமுத்ரங்களைப் பானம் பண்ணவும், திரிலோகங் களை பஸ்மம் செய்யவும் சக்தனல்லவோ? லலிதையின் புடவைக் கோஷ்டியை மட்டுமின்றி, நீ பெரிதாக அஞ்சும் படி அவளுக்கு யார் துணை பலம் தந்தாலும் அவர் களையும் சேர்த்து மட்கலத்தை நொறுக்குவது போல் தூள் படுத்த இச் சேனாதிபதிகள் போதமாட்டார்களா? ஆயிரக்

கணக்கான அக்ஷௌஹிணிகள் கொண்ட நம் சேனையின் பலத்தை மறந்தாயா? சூராதி சூரர்களான என் முப்பது புத்திரர்களையும் அவர்களது நூற்றுக் கணக்கான மாவீர புத்திரர்களையும் உனக்கு நினைவில்லையா?

"அவளை வெல்ல யுத்த சதுரம் போதாது, மாயா சக்தியும் வேண்டுமெனக் கொண்டாலும் அதிலும் நம் படைத் தலைவர்கள் அதிசமர்த்தர்தான். அந்த சக்தி ஸேனையின் மயக்குகளைப் பிசுபிசுக்க வைத்து, அதை அப்படியே சிறு ஊறுகாய்த் துண்டமாய் விழுங்கக் கூடிய மாயா விலாஸம் நம்மவருக்கும் உண்டு அப்பனே!" என்று கூறிய பண்டனுக்கு அதற்கு மேல் மந்திராலோசனை என்ற பெயரில் மாற்றுக் கருத்துக் கேட்க மனமில்லை.

ஆஸனத்தை விட்டெழுந்தான். "ரே குடிலாக்ஷா!" என்று ஒரு கர்ஜனை செய்தான்.

உடனே அப்பெயர் கொண்ட அஸுர ஸேநாபதி அவன் முன் ஆஜரானான்.

பண்டன் அவனுக்கு உத்தரவு பிறப்பித்தான். "ஸேனைகளை யுத்தத்துக்குத் தயார்ப்படுத்து. கோட்டைப் ப்பாதுகாப்புக்காகப் படைகளில் ஒரு பகுதியை நாற்புறமும் காவல் வைத்து விட்டு, வேறொரு பிரிவுடன் துணைச் சேனாபதிகளில்ப் ஒருவனைப் போருக்கு அனுப்பு. மாயா பலமும் அவசியமாதலால் அத்தகு சக்தி வாய்ந்த யந்திரங்களை நிறையக் கைவசம் வைத்துக் கொள். துர்மந்திர சக்திகளை எதிரிகளிடம் ஏவும் பொருட்டுப் புரோஹிதர்களைக் கொண்டு ஆபிசார ஹோமங்கள் செய்யவும் ஏற்பாடு பண்ணு."

தான் லலிதையை உள்ளூர மிகவும் லக்ஷ்யம் செய்துதான் இவ்வளவு தீவிரமாக யுத்த முஸ்தீபு செய்கிறோமென்பது பண்டனுக்கு அவமானமாயிருந்திருக்க வேண்டும். அதை மறைக்குமுகமாக, "இதெல்லாம் ஓர் ஒப்புக்குத்தான். நீண்ட காலமாக நம்மோடு யுத்தத்துக்கு வர

எவருமில்லாமல் நாம் சும்மாயிருந்துவிட்டதற்கு மாற்றாகத் தான் இவ்வளவு ஏற்பாடு செய்யச் சொல்கிறேன். வாஸ்தவத்தில் நம் குட்டிச் சேனாபதிகளில் ஒருவனே அவளைக் கூந்தலைப் பிடித்து இழுத்து வந்து விடுவான்!" என்றான்.

டம்பம் பேசிய பண்டன் அந்தஃபுரம் சென்று விட்டான்.

*

"டம் டம்" என்று நகருக்கு வெளியே முழங்கிய சக்தி ஸேனைகளின் நகராக்கள் ஏனோ அவுணர்களின் வயிற்றைக் கலக்கத்தான் செய்தன.

தங்களைச் சமாளித்துக் கொண்டு, தங்களது அஸுர வெறியை நன்றாகக் கிளப்பி விட்டுக் கொண்டு, அவுணப் படைப்பிரிவொன்று ரணபூமிக்குட் புறப்பட்டது. துர்மதன் என்ற மாவீரனின் கீழ் அப் பிரிவை அனுப்பி வைத்தான் குடிலாக்ஷன்.

பல விசித்ர ஆயுதங்களை ஏந்தி, விசித்ர உருவமுடைய தைத்ய வீரர்களின் படை (தைத்யர், தானவர், தநுஜர் என்ற பெயர்கள் அஸுரரைக் குறிப்பனவே) சிங்கம், புலி, ஓநாய், ஒட்டை, குதிரை, கழுதை, நாய், பன்றி, காக்கை, கழுகு ஆகிய ஊர்திகள் மீதும், இன்று காண்பதற்கில்லாத சரப மிருகம், பேருண்ட பக்ஷி ஆகியவற்றின் மீதும், பிரேத வாஹனத்தின் மீதுங்கூட ஆரோஹணித்து ரோஹண பர்வதமே பெயர்ந்து வருவதுபோல் போர்க்களம் புகுந்தது.

*

போர்த்தொடக்கமே இரு சேனைகளிடையே பலமான மோதலாக அமைந்தது. அப்போது பிறந்த புழுதிப் படலம் யானைகள் செவிகளை ஆட்டுவதாலும் அச்வங்கள் அடர்ந்து மூச்செறிவதாலும் எங்கும் சுழன்று சுழன்று

பரவியது! படைகள் தாக்கிக் கொண்டதில் பீறிட்ட குருதி வீச்சிலேயே அப் புழுதிப் படலம் புவியில் படிந்ததாம்!

குருதியால் சிவந்த யுத்த பூமியில், அறுத்துத் தள்ளப்பட்ட பட்டுக் குடைகள் பளபளத்தன. அது ஸந்தியா கால வானத்தில் சூரியர்கள் தளதளப்பது போலிருந்ததாம்!

தேவியின் யானைப் படைத் தலைவி ஸம்பத்கரியை நேரே எதிர்த்தான் துர்மதன். யானையின் மதத்துக்கு எதிராக மமதை மதம்! ரண கோலாஹலம் எனும் கிரி போன்ற கரி மீதிருந்து ஸம்பத்கரி கோலாஹல மாகப் போர் புரிய அவுணன் ஒட்டை மீதிருந்து வீர ஸாஹஸம் விளைத்தான். இவர்கள் எதிரெதிராகத் தொடுத்த சரமாரிகள் அவ்வப்போது கதிரவனை மறைத்து இருள் பரப்புவதாகவும் அவை ஒன்றோடொன்று உராய்கையில் பிறக்கும் தீப்பொறிகள் அவ்விருளை நீக்குவதாகவும் மாறி மாறி ஆச்சரியம் நிகழ்த்தின!

துர்மதன் ரோஷத்துடன் ஆக்ரோசம் செய்து எய்த ஒரு பாணம் ஸம்பத்கரியின் மகுடத்திலிருந்த ஒரு மணியை நிலத்தில் வீழ்த்தியது. சக்தி ஸேனைக்கு இது ஒரு பெரிய அவமானமேயாகும். (நம் புராண கர்த்தர்கள் எதிரிகளின் பராக்ரமத்தையும், அதனால் அவ்வப்போது காவிய நாயக நாயகியருக்கு ஏற்படும் பரிபவத்தையும் ஒளிப்பதில்லை.)

அவமானமே ஒரு புதிய எழுச்சியை ஸம்பத்கரிக்கு ஊட்டியது. அவள் சரவர்ஷமாகவே துர்மதன் மீது பாணப் பிரயோகம் செய்ய அதில் அவன் பிராண வியோகமாகித் தரணியில் விழுந்தான்.

தலைவன் தலை சாய்ந்ததும் படையும் படுதோல்வி கண்டது.

முதல் வெற்றி பரதேவிக்கு!

விஷயமறிந்த பண்டன், "என்ன, வீராதி வீரன் துர்மதனா அபலை ஒருத்திக்குப் பலியானான்?" என்று ஆர்த்தான்.

அவன் உத்தரவுப்படி மாயையில் வல்லவனான குருண்டனை இருபது அக்ஷௌஹிணிப் படைகளுடன் அனுப்பினான் குடிலாக்ஷன். இவன் துர்மதனுக்குச் சகோதரனாதலால் வெஞ்சினத்துடன் பழிவாங்குவா னென்று மனோதத்துவமறிந்து செய்த ஏற்பாடு!

உடன்பிறந்தானைக் கொன்ற ஸம்பத்கரியிடம் கனன்று பேசினான் குருண்டன். "இதோ, உதிரத்துக்காக இப் போர்க்களத்தில் சுற்றிக் கொண்டிருக்கும் ரணபூதனை களுக்குத் தாகவிடாய் தீர்க்கிறேன்!" என்று கூறித் தன் படையை உக்ரமாகக் கிளப்பிவிட்டான்.

அச்வாரூடைக்குத் தன் உயிர்த்தோழி ஸம்பத்கரி குறித்துக் கவலை ஏற்பட்டு விட்டது. "ஸகி! முதல் யுத்தம் நீ செய்து வெற்றியும் ஈட்டிவிட்டாய். இப்போது என்னிடம் போர்ப் பொறுப்பைக் கொடு. என் வேண்டுகோளைத் தட்டாதே!" என்றாள்.

தேவியின் குதிரைப் படைத் தலைவியான அச்வாரூடைக்கு எடுத்துள்ள போர்த்தினவு, தன்பால் அவளுக்கு எழுந்துள்ள கரிசனப் பரிவு இரண்டையும் ஸம்பத்கரி புரிந்து கொண்டாள். எனவே அறைகூவும் எதிரிக்கு முகம் கொடாது செல்வது வீரப் பண்புக்கு அவ்வளவாக ஒவ்வாததாயினும் அவள் தன் படையை வேறு திக்கில் திருப்பிவிட்டு, அச்வாரூடைக்குப் பொறுப்பைக் கொடுத்தாள்.

அபராஜிதம் என்ற அச்வ ரத்தினத்தில் ஆரோஹணித்து அச்வாரூடை செய்த யுத்தம் ஓர் எழில் நிருத்தமாகவே இருந்தது. ஆஹா, அவளுடைய பின்னல் அசைவதும், தலையில் அணிந்துள்ள திருகுப் பூக்கள் முன்னும் பின்னுமாய் மின்வெட்டுவதும்!

பாசாயுதத்தைப் பிரயோகித்தாள். பல்லாயிரம் பாசங்கள் உடனே தோன்றிப் பகைவர்களைக் கட்டிப் போட்டு மூர்ச்சித்து விழச் செய்தன. படை முழுதும் கட்டுண்டது கண்ட குருண்டன் கட்டுக்கடங்காத கோபத்துடன் அம்பு பொழிந்து அச்வாரூடை"யின் வில் நாணை அறுத்தான்.

அவள் வில்லை எறிந்தாள். அங்குசத்தை எய்தாள்.

அது குருண்டன் மார்பில் புதைய அவன் உருண்டான் பூமியில்!

அவன் தாம்பூலம் காட்டி வரவேற்ற ரண பூதனைகள் இப்போது அவனுடையவும், அவனது ஸேனாவீரர்களுடையவும் குருதியைப் பருகியே தாகம் தணிந்தன!

"மாயாவினியின் மகிமைதான் குருண்டனும் மாண்டது!" என்ற பேருண்மை பண்டனையும் அறியாமல் அவன் வாயிலிருந்து புறப்பட்டது — செய்தி அவனை எட்டிய அப்போது.

"தேகத் தியாகம் செய்யும் மஹாசக்தர்களான கரங்கன் முதலிய பஞ்ச ஸேநாதிபதிகளை நூறு அக்ஷௌஹிணியுடன் போருக்கு அனுப்பு" என்று குடிலாக்ஷனுக்கு உத்தரவிட்டான். அவ்வாறே சென்ற கரங்காதி ஐந்துபடைத் தலைவர்களும், அவர்தம் வீரர்களும் யஜமானனின் 'திர்க்க தரிசன வாக்'கின்படி முடிவில் தேகத் தியாகம் செய்யத்தான் செய்தார்களென்றாலும், முதலில் சக்தி ஸேனைகள் விலவிலத்துப் போகுமாறு அற்புதப் போரும் செய்தார்கள்.

விலவிலத்த சக்தி ஸேனைகள் மீண்டும் மீண்டும் வீறுடன் விறுவிறுப்புப் பெறுவதைப் பார்த்த அவுணர்கள் இனி மாயா சக்தியையே துணை கொள்ள வேண்டுமென ஒரு கட்டத்தில் எண்ணலாயினர். உடனே ஸர்ப்பிணி என்ற

மாயையைப் படைத்து ஏவினர். கறுத்த ரூபமும் தொங்கும் உதடும் கொண்ட ஸர்ப்பிணி ஆயிரக்கணக்கான அரவங்களை அணிந்து ஆரவாரமாகப் பிரவேசித்தாள். அவள் பாம்புகளையே ஆயுதங்களாகப் பிரயோகித்தாள். அவளது குரூரமான கண்களிலிருந்தும், இதர அங்கங்களி லிருந்தும் அவை கோடிக் கணக்காகப் புறப்பட்டன. பல வர்ணங்களில், பல தலைகள் கொண்டவையாய்த் தோன்றிய அப் பாம்புகள் தாங்கவொண்ணாத விஷ ஜ்வாலை வீசிக் கொண்டு சக்திப் படைகளின் கை கால்களைக் கட்டிக் கடித்துச் சொல்லொணா ஹிம்ஸை செய்தன.

நச்சுப் புகையில் மூச்சு முட்டித் தேவியின் கணங்கள் அடியோடு செயலிழந்து நின்ற அச் சமயம் பார்த்துக் கரங்கன் நூறு கழுதைகள் பூட்டிய தேர் மீதிருந்து பிரளய கால மேகம் போல் பாணங்களைப் பொழிய லானான். பஞ்ச ஸேநாதிபதிகளில் இன்னொருவனான காகவாசிதனும் துணை சேர்ந்து, யானையின் மீதிருந்து சக்கரங்களை வீசலானான். மூன்றாமவன் வஜ்ரதந்தன். அவன் ஒட்டை மீதிருந்து வஜ்ராயுதங்களைப் பொழிந்தான். நான்காமவனான வஜ்ரமுகனும், பஞ்ச ஸேநாதிபதிகளில் கடையனான வஜ்ரலோமனும் முறையே கோவேறு கழுதை மீதிருந்தும் கழுகின் மீதிருந்தும் அம்புகளைத் தொடுத்தனர்.

பெரும் தாக்குதல்தான்.

அம்பிகையின் படை அடி பணிந்துவிடுமோ எனும் அபாய நிலை!

அபாயத்தில் அபயம் தர அன்னை லலிதை தோன்றினாள்.

அவளது உள்நாக்கிலிருந்து கிரி வடிவான ஒரு தேவி வெளிப் போந்தாள்.

மந்திரிணியின் உள்ளாற்றலே இப்படிக் கிரி உருவினளான நகுலியாக மஹாராணி லலிதையிடமிருந்து வெளி வந்தது. பேரபஜயத்தைப் பெருவெற்றியாக்குவதில் அரசிக்கும் பங்கிருக்க வேண்டுமென்றுதான் அமைச்சியின் ஆற்றல் அரசியின் உள்நாவிலிருந்து உத்பவித்தது. (வெளிப்பட ஒலிக்கின்ற வைகரி வாக்குச் சக்தியே மந்திரிணி என முன் சொல்லியிருப்பது நினைவிருக்கலாம். உள்நாக்கு இதை உணர்த்துவதே.)

நகுலி தன் வாயைத் திறக்க அவளது முப்பத்திரு பற்களில் ஒவ்வொன்றிலிருந்தும் ஒரு கோடி நகுலங்கள் தோன்றின. அஸுர மாயையில் விளைந்த அரவங்களை அவை கண்ட துண்டமாகக் கடித்தெறிந்தன. அவ் வரவங்களின் சிரோ ரத்னங்கள் இக் கிரிகளின் கோபாக்னிச் சுடர் போலத் தோன்றின என்கிறது புராணம்!

ஸுமேரு பர்வதம் போல பக்ஷிராஜ கருடனும் பறந்து வந்து ஸர்ப்பிணி படைத்த ஸர்ப்பங்களைப் பக்ஷிக்கலானார். முடிவாக நகுலாதேவி காருட அஸ்திரத்தைப் பிரயோகிக்க அது ஸர்ப்பிணியை அப்படியே விழுங்கி ஜீரணித்து விட்டது — அவளைத் தானே ஆக்கிக் கொண்டு அருள் செய்து விட்டாளெனப் பொருள். எதிரியும் அவள் குழந்தைதானே?

அடங்காத ஆக்ரோசத்துடன் பஞ்ச ஸேநாதிபர்களும் நகுலி மேற் பாய, அவள் கருடன் மீது ஆரோஹணித்து அவர்களோடு போரிட்டாள். 'அக்ஷீண நகுல அஸ்திரம்' என்ற ஒன்றை அவள் எய்ய, அதன் பெயருக்கேற்பக் குறைவறியாத மாபெரும் கிரிப்படை தோன்றியது. அது எதிரிகளின் நூறு அக்ஷௌஹிணிகளையும் நீற்று விழச் செய்தது.

நகுலி படை மத்தியில் பட்டிஸ ஆயுதத்துடன் குதித்துக் கரங்களின் சிரத்தைத் துண்டித்தாள். மற்றவர்

நால்வர் தலைகளும் அவளது கத்தி வீச்சில் பனங்குலை யாய் விழுந்தன.

வீர விஜய நகுலியை மந்திரிணி மனமாரப் போற்றி, "நீ என் அங்க தேவதையாவாய்" என்று ஆசீர்வதித்துத் தன்னிலேயே பாகமாக்கிக் கொண்டாள். அதாவது மந்த்ரிணி நகுலேச்வரி ஆனாள்.

## 11

ஸர்ப்பிணியின் மாயையும் சக்தி ஸேனையிடம் பலிக்கவில்லை என்றறிந்த பண்டன் ஸர்ப்பமாக மூச் செறிந்தான்! பஞ்ச ஸேநாதிபர் பஞ்சாகப் பறந்த பின், ஸப்த ஸேநாபதிகள் என்ற எழுவரை யுத்தரங்கம் அனுப்பினான்.

வலாஹகன், ஸூசிமுகன், விகடானனன், கராளாக்ஷன், கரடகன், பாலமுகன், விகர்ணன் எனும் இவ் வெழுவர் கடும் தவமிருந்து கதிரவனைக் கண்ணெதிரே வரவழைத்தவர்கள்; "போரில் நாங்கள் விரும்பும்போது எங்கள் கண்களில் நீ குடிகொண்டு, எதிரிகளைக் கொளுத்த வேண்டும். அவர்களது ஆயுதங்களை ஸ்தம்பிக்கச் செய்ய வேண்டும்" என்று ஆதவனிடம் வரம் கோரிப் பெற்றவர்கள்.

முந்தைய வெற்றியில் பெற்ற உற்சாகத்தில் ஏழு என்ன, எழுநூறு ஸேநாபதிகள் வந்தாலும் எதிர்முகம் கொடுக்கச் சக்தி ஸேனை தயாராயிருந்தது. விளையாட்டாக ஓர் ஆனைக்குட்டி மதிலில் மோதி மோதியே அதைத் தகர்ப்பதை 'வப்ரக்ரீடா' என்பார்கள். சக்திகள் அவுணரோடு இப்படி 'வப்ரக்ரீடா' விளையாடியே நாசம் விளைவித்தனராம்!

வலாஹகன் வாஹனமாகக் கொண்டிருந்த ஸம்ஹாரகுப்தம் என்ற பெரும் கழுகு அரை க்ரோச (ஒரு மைல்) நீளமுள்ள தனது இறகுகளை விரித்துப் பறந்து வந்தது. கொள்ளிக் கண்களால் சக்திகளை அச்சுறுத்தி, அக்னி குண்டமான அலகினால் அவர்களைப் பக்ஷித்தது. இப்படியே மற்ற ஆறு ஸேநாபதிகளும் காட்டிய பேராற்ஸல் போதாதென்று அவர்களது ஊர்திகளான காகம், பருந்து, பேருண்ட பக்ஷி, சேவல், ப்ரேதம் (ஆவி), வேதாளம் முதலியனவும் பெருஞ்சேதம் விளைவித்தன. இத்தனைக்கும் ஈடு கொடுத்தும் 'பூஞ்சை' லலிதையின் பூவைப் படையினர் பூவாக மலர்ந்தே நின்றனர்!

தோள்வலியையும், போர்க் கலை நுட்பங்களையும் காட்டிய பின்பே வீரர்கள் வர பலத்தைப் பயன் செய்து கொள்வரென்று முன்பே கண்டோமல்லவா? அந்தக் கட்டம் வந்து விட்டது என்று சப்த சேனாபதியர் கருதினர். மாதவம் செய்து ஆதவனிடமிருந்து பெற்ற திறனை வெளிக்காட்டலாயினர். அவர்களுடைய கண்கள் ஸூர்ய கர்ப்பமாக அக்னியைப் பொழியலாயின. அதில் பூவைச் சக்திகள் பூ வாடுவது போலச் சாம்பினர். அவர்கள் கணைகளை எய்வதற்குமில்லாமல் 'ஸ்தம்பனம்' ஆகி, நகர மாட்டாமல் கட்டுண்டிருந்தனர். அந்நிலையில் அவுணர் ஆயுத மழை பொழிந்து அவர்களைக் குருதி கொட்ட வைத்தனர். செந்தளிர் செறிந்த கங்கோள (அசோக)ச் செடிகளாக இந்த அலங்கோலத்திலும் அவர்கள் அலங்காரம் பெற்றதாக இப் புராணத்தைக் குறுமுனிக்குக் கூறும் பரிமுகன் வர்ணிக்கிறான்!

ஸ்ரீமாதாவின் கம்பீர ஆக்ஞை பிறந்தது. உடனே தண்டநாதையின் வெளி உறுப்புக்களின் காவலாளியான திரஸ்கரிணி வெளிப் போந்தாள். திரஸ்கரிணி என்றால் மாயமாக மறைக்கும் சக்தி. 'இருள் பூசி' எனப் பொருள் படும் 'தமோலிப்த' விமானத்திலேறி வந்தாள் இந்த இருள் வர்ண பயங்கரி! அந்தாஸ்திரத்தை எய்தாள். 'அந்த' என்றால் குருடு.

சூரிய வெப்பத்தில் தாக்குண்டிருந்த சக்தி ஸேனைக்கு இவளது இருட் பிரவேசமே இதமாயிருந்தது. அந்தாஸ்திரத்தின் ஆற்றலில் அவுணர்களின் கண்கள் குருடு பட்டன. பார்வை மறைபட்டதால் போர் புரியாமல் அசுரர்கள் ஸ்தம்பித்து நிற்க, இதுவரை ஸ்தம்பித்து நின்ற சக்திகள் எழுச்சி பெற்றனர். "ஆக்ஞையிட்ட மஹாராஜ்ஞியும், உன்னை அங்கரக்ஷகியாய்க் கொண்ட தண்டினியும் களிக்க ஸப்த ஸேநாபதியரை ஸம்ஹாரம் செய்வாய்! நாங்கள் அவர்களது படைகளை மரண தேவனுக்குப் படையல் செய்கிறோம்!" என்று அவர்கள் திரஸ்கரிணியிடம் கூறினர்.

அவளும் வெகுண்டெழுந்தாள். எழுவரும் எழா வண்ணம் தீர்த்துக் கட்டினாள், அவர்களுடைய அருமை வாகனங்களோடு சேர்த்து!

அவர்களது கணங்கள் சக்திகளின் கணைகளுக்குப் பலி ஆயின.

சங்கதி கேட்டு அதிர்ந்த பண்டனின் வாயிலிருந்து அவனையுமறியாது உண்மைகள் உதிர்ந்தன. "அவுணர் குலத்துக்கு அழிவுக் காலம் வந்து விட்டது. அதனாலேயே வர பலமும் தேய்கிறது. எதிரிப் படையை வெல்லத் திறமிருந்தாலும், விதியை யாரே வெல்வது?" என்றான்.

ஆயினும், "விதி வலிமைக்கு முன் நாம் ஏதும் செய்வதற்கில்லை!" என்று விடுவது வீரருக்கு அழகல்லவே! எனவே விசுக்ர-விஷங்கருடன் விஷயாலோசனை செய்தான் தானவராஜன்.

வேரை அறுத்தாலே விருக்ஷம் சாயுமாதலால், தலைவியான பராசக்தி லலிதையையே நேராகப் போருக்கு இழுத்து, இரண்டில் ஒன்று தீர்க்க வேண்டுமென முடிவு செய்யப்பட்டது.

"இதற்குப் பூர்வாங்கமாகப் 'பரிமித ஸேனை' என்று அவளைச் சுற்றியுள்ள பரிவார கணங்களை அழிக்க வேண்டும். விஷங்கா! சத்ருவைச் சுற்றி வளைப்பதில் நீயே கெட்டிக்காரன். உன் ரகசிய வேலையை வெளிக் காட்ட இதோ வாய்ப்பு. போ போருக்கு! நீ மறைவாக, குறையான படையுடன் செல். ஸேநாபதியர் பதினைவர் தலைக்கு ஓர் அக்ஷௌஹிணியுடன் பின்னணியில் நின்று உனக்கு உதவி செய்யட்டும்," என்று தட்டிக் கொடுத்துத் தம்பியைக் கிளப்பினான் தைத்யராஜன்.

விசித்திரப் பெயர்கள் கொண்ட ஹூம்பேகன், ஹூலுமுல்லன், கல்கஸன், புல்கஸன், கல்கிவாஹனன் முதலான பதினைந்து தானைத் தலைவர்கள் படை ஸஹிதம் தயாராகி விட்டனர்.

*

அஸுரரின் பலம் பெருகுவது அந்திப் பொழுதுக்குப் பிற்பாடுதான். எனவே கதிரவன் மலைவாயில் சாய்ந்த பின்னர் ரஹஸ்ய யுத்த தந்திரம் காட்ட விஷங்கன் புறப்பட்டான். கறுத்த வஸ்திர, கவச, தலைப்பாகைகளுடனும் காரிருள் மனத்துடனும் இரவோடு இரண்டறக் கலந்து சென்றது அஸுரப்படை. யுத்த பேரி முழக்கம், வீரவாத கோஷம் எதுவுமின்றி மௌனமாக முன்னேறியது — காலடி ஒலி, மூச்செறியும் ஓசைகூட இல்லாமல் அத்தனை நிசப்தமாக! பின்னால் நிகழவிருந்த தங்கள் மரணத்துக்குத் தாங்களே முன்கூட்டி மௌன ஊர்வலம் செல்வது போல!

தண்டினியும், மந்திரிணியும் முன்னே செல்ல, ஸ்ரீமாதா படைகளின் பின்னே வந்ததை முன்பு பார்த்தோ மல்லவா? விஷங்கன் அவ்விருவரின் எதிர்ப்பை விடுத்து, பின்புறமாகச் சென்று, நேரே அம்பாளைப் பிடிக்க (அவள் பாதத்தைப் பிடிக்க அல்ல; அவளையே சிறைப் பிடிக்க!) எண்ணினான். குறைவான படையுடன் மறைந்து மறைந்து

சென்றான். எதிரிகள் எவரேனும் எதிர்ப்பட்டால் தங்களை அம்பிகையின் படையினர் என்றே தோன்றச் செய்யும் ஸமிக்ஞைகளைச் செய்தபடி முன்னேறினான்.

இதோ மகிமை பொருந்திய சக்ரராஜ ரதம்!

அதன் உச்சி மையத்தில் முத்துக் குடையின் கீழ் — உலகுக்கே மையமான ஆதார பராசக்தி! உலக மாயையிலிருந்து விடுவிக்கவும் செய்யும் முக்தி நாயகி!

முத்து முறுவல் பூத்து, தன்னைச் சுற்றியுள்ள நித்யா தேவிகளோடு விளையாட்டுப் பேச்சில் விநோதித்துக் கொண்டிருக்கிறாள்!

நித்யா தேவிகள் பதினைவர். காலதத்வ வடிவின ராகிய அவர்கள் ப்ரதமை முதலான பதினைந்து திதிகளுக்கு அதிதேவதையராவர். அவுணர்கள் பெயர்ப் பட்டியல் நிறையப் பார்த்து விட்ட நாம் இந்த அன்பு அன்னையரின் புண்ய நாமங்களையும் பார்க்கலாம். ப்ரதமையின் அதிதேவதையான முதல் நித்யைக்கு ஸ்ரீமாதாவின் சிறப்புப் பெயரான காமேச்வரி என்பதேதான் பெயர். மற்ற பதிநால்வர் பகமாலினி, நித்யக்லின்னா, பேருண்டா, வஹ்நிவாஸினி, வஜ்ரேச்வரி, சிவதூதி, த்வரிதா, குலஸுந்தரி, நித்யா, நீலபதாகா, விஜயா, ஸர்வமங்களா, ஜ்வாலாமாலினி, சித்ரா என்பவர்கள். லலிதா தேவியே பதினாறாவது நித்யையாகக் கருதப்படுவதிலிருந்து இவர்தம் பெருமையை அறியலாம்.

விளையாட்டுப் பேச்சிலும் அம்பாள் கடமை மறவாது தனது தீர்க்க நயனங்களால் முன்னே விரிந்த மாபெரும் படையைக் கண்காணித்துக் கொண்டே யிருந்தாளாம். 'படாதா? நம் மீது படாதா?' என்று மாமுனிவோரும் ஏங்கும் அக் கண் பார்வை தன் மீது படாதவாறே 'ஜாக்கிரதை' செய்து கொண்டு, ஒளிந்தபடி முன்னேறினான் விஷங்கன். சர்வசாக்ஷியான அவளிடம் எதுவும் மறைய முடியாதாயினும், அவளும் விந்தை

லீலையில் அச் சத்துருவின் ஊடுருவலை அறியாதது போலத் தான் நடித்தாள்!

முன்னணிப் படை சக்ரராஜ சேனைப் பிரிவுக்குத் தொலைவாகி விட்டதால் அம்பாளுக்கு உதவ இயலாது என்று உறுதிப்படுத்திக் கொண்டான் விஷங்கன். உடனே ஒன்பதடுக்கு கொண்ட அத்தேரின் வெளி ஓரத்திலிருந்த அணிமாதி சக்திகளின் மேல் தாக்குதலைத் தொடங்கினான்.

முன்னணிப் படைகளை விட்டு, இப்படிப் பின்புறத் திடீர்த் தாக்குதல் நிகழும் என்று அச் சக்திகள் எதிர்பார்க்கவில்லை. கருமையோடு ஒருமையுற்ற சத்ருக்களைப் புரிந்து' கொள்ளவே அவர்களுக்குச் சிறிது பொழுது பிடித்தது. கவசங்களைக் கழற்றிவிட்டு, ஆயுதங்களையும் கைக்கொள்ளாமல் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த சக்திகள் அவற்றைக் காரிருளில் தேடி எடுத்து தரிப்பதற்குள் விஷங்கன் அவர்களை நையப் புடைத்து விட்டு உள்ளடுக்குகளுக்கு முன்னேறப் பார்த்தான். அவ்வப்போது அண்ணனுக்கு அறவுரை சொல்பவனாயினும் அடித்தளத்தில் இவன் விஷ அங்கனே ஆதலால் இப்படி யுத்த தர்மம் மீறி அயுக்தங்கள் செய்து கொண்டே போனான்.

இந்த அல்லோலகல்லோலத்தில் உள் ஆவரணங் களின் (அடுக்குகளின்) சக்தி கணங்கள் விழிப்புற்றன. பிரதம ஆவரணத்திலிருந்து காதுக்குக் காது செய்தி போய் நவம ஆவரணத்திலிருந்த ஸ்ரீமாதாவின் திருச்செவி எட்டியது. அவள் நித்யாதேவிகளை உஷார்ப்படுத்தினாள்.

இனி ரஹஸ்ய தந்திரம் பலிக்காதெனக் கண்டான் விஷங்கன். முக்ய ஸேனாநாதனான குடிலாக்ஷனுக்கு "SOS" அனுப்பினான்! குடிலாக்ஷன் உடனே பத்து அக்ஷௌஹிணி யுடன் தண்டினி-மந்த்ரிணி ஸேனைகளுக்கும் சக்ரராஜ

ரதத்துக்கும் இடையே புகுந்து அவை லலிதைக்குத் துணை வரவே முடியாவண்ணம் தடை செய்தான்.

அம்பாள் லீலை யாரே அறிவர்? ஸகல ஆதார சக்தி, ஸர்வ பூரண சக்தி, தனது நேர்ப் படைப் பகுதியுடன் மட்டுமே தனித்து விடப்பட்டாள்! அவளது சக்ரராஜ மஹாரதம் சத்ருக்களின் சரங்களால் மூடப்பட்டது!

புருவ வில்லைச் சிறிதே வளைத்தாள் கரும்பு வில்லி. அவ்வளவில் நித்யா தேவியர் பொங்கி எழுந்தனர். பெயராலேயே பேரொளியைச் சாற்றும் வஹ்நிவாஸினியும், ஜ்வாலாமாலினியும் முற்பட்ட மாத்திரத்தில் அங்கு படிந்திருந்த கன இருள் கரைந்தோடியது. ('வஹ்நி': தீ.)

அதிகம் வளர்த்துவானேன்? நித்யைகள் பதினைவருக்கு எதிராக வந்த தைத்ய ஸேநாபதியர் பதினைவரும், தங்களது பதினைந்து அக்ஷௌஹிணி சகிதம் அத் தேவிகளின் கணைகளுக்கு இரையாகி விட்டனர்!

விஷங்கனும் அதே கதிக்கு, அதோகதிக்கு ஆளாகித்தானிருப்பான். ஆனால் சுத்த யுத்த முறைகளை விட்ட அவன் இப்போது பேடி போல் போர்முனை விட்டு ஓடினான். புறமுதுகிட்டவனைத் தாக்குவதில்லை என்று தேவியின் கணங்கள் பெருமனத்தோடு அவனை விட்டன. விதியின் வலிமையை பண்டன் சொன்னது போலவே தேவீகணங்களும் கூறின. "மாவீரனாயினும் விதியை யாரே வெல்வது? தண்டினியால்தான் வதையுற வேண்டுமென விதிக்கப்பட்டதாலேயே நம்மிடமிருந்து தப்பி ஓட எண்ணம் கொண்டு விட்டான்!" என்று கூறி அவை விஷங்களை நிரபராதியுமாக்கிவிட்டன!

*

இரவு கழிந்தது. இரவி உதித்தான். அவ்வொளியையும் தண்மையாலேயே விஞ்சும் நிலவுப் பார்வையை அம்பிகை தனது பரிவாரத்தினர் மீது பொழிவித்தாள்.

அவர்களது திருமேனிகளில் ஏற்பட்டிருந்த ரணகாயங்கள் அந்த நொடியில் ஆறின. வெற்றி கண்ட அவர்களை மெச்சி மகிழ்ந்தாள் மஹாராஜ்ஞி.

பதினைந்து படைத் தலைவரும் உற்ற பரிபவத்தினால் குடிலாக்ஷன் பதற்றமுற்று, தனது மாவீரத்துக்கு உகாத முறையில், விஷங்களைப் பின்பற்றி ஓட்டம் பிடித்தான்.

"அடடா! அரசியின் ரதம் இவ்வளவு நேரம் நம்மிடமிருந்து துண்டித்து விடப்பட்டதே!" என்ற ஆதுரத்துடன் தண்டினியும் மந்திரிணியும் அன்னையிடம் ஓடி வந்து அவள் அடி பணிந்தனர்.

"தேவி! தப்பிதம் நடந்து விட்டது. க்ஷமித்தருள்வாய். இனி அஸுரர்கள் திடும் பிரவேசம் செய்து நேரே உன்னிடம் வர விடமாட்டோம். இனி நாம் ஓய்வு கொள்ளும் போது தங்குவதற்காக இதோ இந்த மஹேந்திர பர்வதத்தின் தென்புறம் விசாலமான கூடாரம் அமைப்போம். அதைச் சுற்றி 'வஹ்நி ப்ராகாரம்' என்று தீப் பிழம்புகளாலேயே கோட்டை கட்டி எதிரிகள் அணுகாத வண்ணம் தடுப்போம்!" என்று விண்ணப்பித்துக் கொண்டனர்.

"ஆஹா!" என தேவி மந்தஹாஸம் புரிந்தாள். "நம் சேனைகளுக்கு உரிய காப்புத் தருவதே நமக்கான தர்மம். அதை நீங்கள் உணர்ந்து கூறியதில் மகிழ்ச்சி!" என்றாள்.

ஜ்வாலாமாலினியை, "குழந்தாய்!" என்று அழைத்தாள். "அக்னிசக்தியான நீயே இந்த வஹ்நி ப்ராகாரத்தை எழுப்புவாயாக!" என ஆசீர்வதித்தாள்.

கூடாரம் அமைக்கப்பட்டது. அதைச் சுற்றி ரத்தினத்தால் எடுத்த மதிலோ என வியக்கும் வண்ணம் செந்தீயால் அரண் எடுத்தாள் ஜ்வாலாமாலினி.

இருபது அக்ஷௌஹிணி ஸேனைகளை வெளியே சுற்றிலும் காவல் வைத்தனர். அவர்களுக்குத் தலைமை

தாங்கியவர் இருவர். ஒருவர் தண்டினியின் விக்னதேவி என்று போற்றப்படும் தண்டாயுததாரிணியான ஸ்தம்பினி. மற்றவர் இந்த லலிதோபாக்யானத்தைக் கும்பமுனிக்குக் கூறும் பரிமுகனேதான்!

*

தோல்விக்கு மேல் தோல்வி கண்ட பண்டன் தன் முப்பது மைந்தரை அழைத்தான். "வீரச் செல்வங்களே! உங்கள் துணை கொண்டே அன்று அமரேந்திரன் உள்ளிட்ட அஷ்டதிக்பாலரையும் வென்றேன். பெண்டிருடன் போர் செய்வது பழிப்புக்கிடமல்லவா என ஒதுங்கும் சிங்கக் குட்டிகளே! நம் குலம் நசியாது காப்பதற்காக இப்போது மகளிருடன் யுத்தம் புரியும் அபகீர்த்தியையும் பொறுத்துக் கொண்டு செல்லுங்கள். இது என் ஏற்பாடல்ல, விதியின் ஏற்பாடு!" என்றான்.

மெய்யே! நேராகத் தன் குலத்தையே நசிப்பிக்கத் தான் விதியின் உசுப்பலில் மக்களைப் பலி பீடத்துக்கு விரைவுபடுத்துகிறான்!

இருபது அக்ஷௌஹிணியுடன் அசுர அரச குமாரர்கள் புறப்பட்டனர். பழுத்த ஸுமங்கலிகள் பொரி இறைத்து சோபனம் செய்தனர். வந்திகள் வாழ்த்திப் பாடினர். வீட்டுக்கு வீடு ஆரத்தி சுற்றப்பட்டது. ஆனால் இந்த மங்களங்களை விஞ்சிக்கொண்டு அபசகுனத்துக்கு மேல் அபசகுனமாக ஏற்பட்டது. நில நடுக்கமே உண்டாயிற்று.

பண்ட புத்ரர் மனம் நடுங்கவில்லை. "வானையும் உலர்த்தி விடுவோம். அக்னிக் கோட்டையை அரை நொடியில் அணைப்போம்!" என்று வீராட்டஹாஸம் செய்து முன்னேறினர்.

அடி நிலையில் உள்ளோரைப் போருக்கு அனுப்பிப் பின்னரே மேநிலையினர் செல்லும்

வழக்கமுண்டு. பண்டன் இப்படித்தான் நகரிலேயே இருந்து கொண்டு ஏனையோரை அனுப்பி வந்தான். படை எடுத்து வரும் எதிரி முக்யஸ்தர்களும் இவ்வாறே பாசறையில் இருந்து கொண்டு, பிறரைப் போருக்கு அனுப்புவதும் வழக்கம்.

இன்று லலிதை இப்படித்தான் இதரப் படைகளை ரணகளம் அனுப்பி விட்டு, அக்னிக் கோட்டையுள் தன் நேர் பரிவாரப் படை மட்டுமே சூழ இருந்தாள். அவளையே சமருக்கு இழுத்து வெல்ல வேண்டுமென்பது பண்ட புத்ரர் திட்டம். எனவே கோட்டையைச் சூழ்ந்து கொண்டு அவளை அழைக்குமுகமாக கர்ஜனை செய்தார்கள்.

கர்ஜிக்கும் கடும்புலிகளை எதிர்க்க வந்தது ஓர் இளம் அன்னப்பேடு!

## 12

புலிக் குட்டிகள் வெளியே கர்ஜிக்க, அக்னிக் கோட்டையுள்ளே அன்னக் குஞ்சு அரைச் சிரிப்புச் சிரித்துக் கொண்டது.

அன்னையேதான் இப்படி அன்னக் குஞ்சுமாகி யிருந்தாள்!

அவளைத்தான் பாலா என்பது. அப்படிச் சொன்னாற் போதாது என்று பாலா த்ரிபுரஸுந்தரி என்றும் பாலா பரமேச்வரி என்றும் பெருமை த்வனிக்கப் போற்றுவது.

ஏழாம் அத்யாயத்திலேயே இந்தக் குழந்தைத் தாயை அறிமுகம் செய்வித்திருக்கிறோம். அங்கு கூறியதை மீண்டும் நினைவூட்டுகிறோம்:

லலிதா மஹா திரிபுரஸுந்தரியின் செல்வ மகளாகக் கூறப்படும் இவள் எப்போது எப்படி உத்பவித்தாளோ தெரியாது. திடுமென இப்போது ஒன்பது பிராயத்தினளாக நமக்குக் காட்சி கொடுக்கிறாள். என்றுமே இவள் ஒன்பது வயதினள் — "ஸதா நவ வர்ஷா" — என்கிறார் புராண கர்த்தர். என்றும் நவமாயிருப்பது என்றால் எப்போதும் புதியதாய், அதாவது வாடாத வியன்வெளியாய் உள்ள ப்ர-நவம் (ப்ரணவம்) என்றும் பொருள். ப்ரணவப் பொருளான பாலைக்கும் பிறப்பைச் சொல்வதா என்றே விட்டு விட்டாரோ?

அம்மா போலவே செக்கச் சிவந்தவள். அம்மா போலவே நாற்கரத்தினள். ஆனால் அவற்றில் அம்மா போல் பாச - அங்குச - தநுர் - பாணம் தாங்குபவளல்ல. ஸரஸ்வதி போல ஞானமூர்த்தியாக இரு கரங்களில் மாலையும், புத்தகமும் தாங்குகிறாள். ஸகல வித்யை களுக்கும் இவளே கருவூலம்: "ஸர்வ வித்யா மஹாகநி" என்கிறது புராணம். மற்ற இரு கைகளில் அபய - வரத முத்திரைகள். குழந்தையம்மா பரம கருணையோடு நமது அச்சம் நீக்குகிறாள்; வேண்டும் வரம் நல்குகிறாள். அம்மாவின் அரச மேட்டிமை நெகிழ்ந்து பட்டாய்த் திகழ்கிறது இவளிடம். அம்மாவை சிம்மவாஹினியாக, சிம்மாசனேச்வரியாகத் தியானிக்கவேண்டுமெனில், நம் குழந்தையம்மாவைப் பொல்லென மலர்ந்த செங்குவளைப் புஷ்பத்திடை ஜில்லென அமர்ந்தவளாக ஸ்மரிக்க வேண்டும்.

ஸ்ரீசக்ர தேவதையரெல்லாம் இந்த ராஜ குமாரியைப் பூஜித்த போதிலும், ராணிக்கு உயிராக அவள் பக்கலை விட்டு நீங்காத மகளோ பூஜையில் பூரிக்காமல்

அன்னையின் அடிப் பீடத்திலேயே ஒட்டி அமர்ந் திருக்கிறாள்.

பண்டபுத்ரர் வெளியே அறைகூவ, உள்ளே அம்பிகை புத்ரி அரைச் சிரிப்புச் சிரித்துக் கொண்டாள்.

மறு விநாடி ஹம்ஸக் குஞ்சே ஸிம்ஹக் குட்டியாயிற்று. குதித்தெழுந்து தாயிடம் கூறினாள் பாலை: "அம்மா! பண்ட புத்திரர் போருக்கு அழைக்கிறார்கள். குழந்தைக்கு விளையாட்டு பிடிக்குமல்லவா! இப்போது உன் குழந்தை போர் விளையாட்டு புரிய ஆசை கொண்டேன். அதைத் தடுக்காதே. என் தோளின் தினவைத் தீர்த்துக் கொள்ள அனுமதிப்பாய்!"

தேவ இனத்துக்குப் பல விதங்களில் கீழ்ப்பட்டதாக மானுட இனத்தைப் பராசக்தி படைத் திருக்கிறாள்; ஆயினும் இதிலும் அழகு மிக்க அநேகப் பண்புகளை அவள் அருளியிருக்கிறாள். பரதேவியான அவளே இந்த மானுடப் பண்புகளை அவ்வப்போது ஏற்பதுண்டு. இப்போது அப்படித்தான் செய்தாள்.

மானுட அம்மாவின் அங்கலாய்ப்புப் பாசத்துடன் மஹாமாதா மறுமொழி சொன்னாள். "கண்ணே! மிருதுவினும் மிருதுவான உன் தோளுக்கா தினவு? ஒன்பது வயதுச் சிறுமி, போரில் முன்னநுபவமில்லாதவள், நீ மஹாயுத்தத்துக்கு ஏற்றவளா? என்னுடைய ஒரே குழந்தையான உன்னைக் கணமும் பிரியச் சகியாத நான் போர் முனைக்கு உன்னை எப்படி அனுப்புவேன்?" என்றாள். ஆதியிலிருந்து ஊழிவரை உண்டாகும் உயிர்களை யெல்லாம் குழந்தையாய்க் கொண்ட ஜனனி, பாலையைத் தன் ஒரே குழந்தை என்றது அவளிடம் மட்டும் இவளுக்குள்ள அதீதக் குழைவால்தான்!

குழந்தையாக பாலையும் அடம் செய்தாள்.

முடிவில் அன்னை அவளை யுத்தத்திற்கு அனுப்ப உளம் கொண்டாள்.

மகளை ஆரத் தழுவித் தன் சக்தி முழுதையும் அவளுக்கும் ஆக்கினாள். தனது கவசத்திலிருந்தே ஒரு சிறு கவசத்தை ஸ்ருஷ்டித்து அதை இளங்கொடியின் இன்னுடலில் பூட்டினாள். போரில் அபய - வர முத்திரையையும், ஏட்டுச் சுவடியையும், அக்ஷமாலையையும் வைத்துக் கொண்டு என்ன செய்வது? எனவே தனது தநுர் - பாண - பாச-அங்குசங்களிலிருந்து அதே போன்ற ஆயுதங்களைப் படைத்து அருமைப் பெண்ணுக்குக் கொடுத்தாள். தன்னிலிருந்தே உண்டான தனயைக்குத் தன் கவசத்திலிருந்து உண்டான கவசம், தன் ஆயுதங்களிலிருந்து உண்டான ஆயுதம்! ஆனாலும் அந்தச் செல்வ மகளுக்குங் கூட தனது ஸ்ரீசக்ரத்திலிருந்து அதன் 'குழந்தைச் சக்ர'த்தை உண்டாக்கித் தர சக்ரவர்த்தினிக்கு மனமில்லை போலும்! அதனால் தன்னுடைய சக்ரராஜ ரதத்திலிருந்து அதன் 'மினி'யைப் படைத்துப் பெண்ணுக்குத் தராமல், கரும்பு வில்லின் தண்டத்திலிருந்து ஒரு ரதத்தை ஸ்ருஷ்டித்து பாலாவுக்குக் கொடுத்தாள்.

பரமஹம்ஸையான ஞானக் குமரிக்கேற்றதாக அன்னங்கள் பூட்டிய அழகு ரதம் தயாராயிற்று. பல்லக்குப் போன்ற வடிவழகு கொண்டதால், அது 'கர்ணீரதம்' எனப் பெயர் பெற்றது.

ராஜகுமாரி ரதமீதமர்ந்தபோது கந்தர்வ கின்னரர் மங்கள கானம் பாடினர். ஆவரண தேவதையர் யாவரும் வாழ்த்தினர்; வணங்கவும் செய்தனர்.

சிவந்த சிறிய தேவி சீறியெழுந்ததில் மேலும் செக்கர் ஜ்வலிப்புப் பெற்றுப் புறப்பட்டாள். விஷயம் கேட்டு அமைச்சி சியாமளையும் சேனாநாயகி வாராஹியும் ஓடோடி வந்தனர். "பர்த்ருதாரிகே (பட்டத்திளவரசீ)! நாங்களிருக்க நீ யுத்தம் செய்யவா? சற்றும் எதிர்பாராதபடி

தேவி தனது ஜீவனேயான உன்னை எப்படிப் போர் முகம் அனுப்பினாள்? திரும்பிச் செல், குட்டித் தாயே! உன்னை நமஸ்கரிக்கிறோம்!" என்று வேண்டினர்.

'அதெப்படி இவ் வேண்டுதலை ஏற்பதாம்? எதிரெதிர்த் தரப்புகளில் ஸம ஸ்தானத்திலுள்ளவர் தாமே பரஸ்பரம் மோதிக்கொள்வது வழக்கம்? பண்ட ராஜகுமாரர்கள் சமருக்கு வந்துள்ளபோது சக்தி ராஜகுமாரிக்குத்தானே பதிலடி தரத் தனியுரிமை?' — என்று மனத்தில் எண்ணிய பாலை கம்பீர மிடுக்குடன் பதில் பகராமலே மேலே சென்றாள். அப்படிப்பட்ட ஸ்தானம் அவளுக்கு மெய்யாகவே இருந்தது என்பதை உணர்ந்த மந்திரிணியும் தண்டினியும் தங்கள் படைகளோடு அவளை அணைத்துச் சூழ்ந்து அவளுடன் காவலாகச் சென்றனர்.

கோட்டை வாயில் கோமகளுக்காகத் திறந்தது. அதன் வழி பாலை வெளிவந்ததும் அவளது வீர கம்பீரப் பொலிவைக் கண்டு வியந்து தடதடவென்று படைத் தலைவியர் அவள் முன் விழுந்தனர். குழந்தையம்மா அஞ்ஜலிகளை இயல்பாய் ஏற்று, அரும்புக் கையால் ஆசி பாலித்தபடி சென்றாள்.

*

அசுரரைப் பொறுத்த மட்டில் இந்த அமுத மகளும் எதிரிதான்! எனவே அம்பு அர்ச்சனைதான் அவளுக்குச் செய்தனர்! அதற்கதிகமாகவே ஆசிகளை — அதே அம்பு உருவில்தான் — பாலையும் அவுணர் மீது பொழிந்து தள்ளினாள்! ஆம், ஆசிதான். இவளால் உயிரிழந்தவர் உயர் முக்தியே பெறுவரன்றோ?

அவளது அற்புத ஸாஹஸங்களைப் பரிவார கணங்கள் கணத்துக்குக் கணம் லலிதையிடம் ஓடி 'ரிலே' செய்தன. சியாமளையும், வாராஹியுமோ தாங்கள் போரே செய்வதற்கில்லாமல் பார்த்ருதாரிகை ஒருத்தியே போர்க்

களம் நிறையப் பேரெழுச்சி கொண்டு புரியும் சத்ரு ஸம்ஹாரததை வியந்து ரஸித்துக் கொண்டிருந்தனர்.

ஒரு பாலைதானா, அல்லது பண்ட புத்ரர் முப்பது பேரில் ஒவ்வொருவருக்கும் ஒரு பாலையாக முப்பது பாலைகளா எனுமாறு அங்கும் இங்கும் எங்கும் சுற்றிச் சுழன்று 'விளையாட்டு' புரிந்தாள் குழந்தைத் தேவி. "பாலா லீலா விநோதினி" என ஸஹஸ்ரநாமம் சொல்வதில் அழிப்பு லீலை!

இரண்டாம் நாள் போர் முழுவதும் அவளுடைய தனிக் குத்தகை ஆயிற்று.

விளையாட்டை முடிக்க மனம் கொண்டாள்.

மாமனுக்குப் பெருமை கூட்ட எண்ணினாள் போலும்! நாராயணாஸ்திரத்தை வீசினாள். பண்ட புத்திரருடன் வந்த இருபது அக்ஷௌஹிணியும் அந்த க்ஷணமே சாம்பற் குவியலாயிற்று.

வெகுண்ட பண்ட புத்ரர் முப்பது பேரும் ஏக காலத்தில் குழந்தைத் தேவியைச் சுற்றிக் கொண்டு தாக்க, அவளும் ஒரே வீச்சில் முப்பது கணைகளைத் தொடுத்தாள். அவை கண் இமைக்கும் நேரத்தில் முப்பது சிரங்களையும் துணித்து விட்டன! இத்தனை எளிதாய் — பாப்பாவின் சொப்பு உடைப்பு விளையாட்டாய் — முடிந்து விட்டது மாபெரும் வீரதீர காரியம்!

ஜயகோஷமே தூக்கிக் கொண்டு வந்தாற் போல் தன் முன் வெற்றித்திரு விளங்கத் திரும்பி வந்து நிற்கும் திவ்ய குமாரியை அள்ளி எடுத்து மடி சார்த்திச் சிரம் மோந்து கொஞ்சிக் கொண்டாடினாள் ஸ்ரீமாதா.

அதோடு என்ன? மகள் மாதாவுக்குள்ளேயே கரைந்து ஐக்கியமாகிவிட்டாளா? அப்படித்தான் போலும். பண்ட புத்திரரின் யுத்த கோஷத்துக்கு முன் பாலையைப்

பற்றி லலிதோபாக்யானத்தில் எந்தக் குறிப்பும் இல்லாதது போலவே அவள் வெற்றிக் கண்டு அன்னையிடம் திரும்பிய பின்னரும் அவளைப் பற்றிப் பிரஸ்தாவம் இல்லை. ஆதி அந்தம் அற்றதாக உள்ளது அவளது அற்புத சரிதம்!

*

அங்கே தன் குலமே குலைந்ததே என்று ஆகுலத்தோடு அலறினான் பண்டாஸுரன். "சதுர் பாஹு! சகோராக்ஷா! சதுச்சிரா! வஜ்ரகோஷா!... ஸிம்ஹகோஷா!... கண்டலா! சண்டவர்மா!... பூர்வமாரா!" என்றெல்லாம் ஒவ்வொரு பிள்ளையையும் பெயர் சொல்லி விளித்து, "ஸ்வர்க்க சத்ரு!... அதிமாயா! உபமாயா! தனியொருத்தியான மாயாச் சிறுக்கி உங்கள் முப்பது பேரில் ஒருவரைக்கூட எனக்காக விட்டு வைக்கவில்லையா? அந்தகா! யமாந்தகா! நீங்களிருவரும் கூட அந்தகனிடம் சென்று விட்டீர்களா? இதோடு நானும் நாசமானேன்!" என்று கதறி ஆஸனத்திலிருந்து சாய்ந்தான் அஸுரராஜன்.

அவனை ஆச்வாஸப் படுத்தினர் விசுக்ரனும் விஷங்கனும். "வீர புருஷர்கள் இப்படிப் பிரலாபிக்கலாமா? போரில் மரிப்பது பெரும் பேறல்லவா? ஆயினும் பெண்ணொருத்தியால் மரணம் வந்த அவமானத்திற்கு வேண்டுமாயின் துக்கிப்போம்!" என்று அவர்கள் கூறும்போதே பண்டனின் துக்கம் விலகிற்று. அந்தப் 'பெண்'ணைப் பழி தீர்க்கும் சீற்றம் ஊற்றெடுத்தது.

உருவிய வாளுடன் புறப்பட்டான் உடனே! உடன் பிறந்தானைத் தம்பியர் தடுத்துத் தணித்து நிறுத்தினர். "நாங்கள் இருக்கத் தாங்கள் யுத்தம் புகுவதாவது?" என்று கூறி, தோல்வியிலும் வர்மத்திலும் பிறந்த புதிய ரோஷத்துடன் விசுக்ர-விஷங்கர்கள் கிளம்பினர்.

பண்டன் யோசித்தான். தம்பியரை அழைத்து, "வாளும், வேலும் கொண்டு எதிரியை வெற்றி காண

முடியும் எனத் தோன்றவில்லை. மாய மந்திரச் சூதுதான் செய்தாக வேண்டும். பேத உபாயத்தால் எதிர்த் தரப்பு தனக்குள்ளேயே ஒற்றுமை குலையச் செய்வதுதான் வழி. எனவே, விசுக்ரா! நீ எப்படியேனும் மறைவாகச் சென்று சத்ருவின் கடகத்தில் (படை வீட்டில்) இடையூறுகளை உண்டாக்கும் விக்ன யந்த்ரத்தை நாட்டிவிட்டு வா!" என்றான்.

அண்ணன் ஆணையை உச்சிமேல் கொண்டு விக்ன யந்திரம் உருவாக்கினான் விசுக்ரன். சோம்பல், பலவீனம், கையறுநிலை, உறக்கம், தயக்கம், மயக்கம், பேடித்தனம், முனைப்பின்மை ஆகியவற்றின் அதி தேவதையரான அலஸா, க்ருபணா, தீனா, நித்ரா, தந்த்ரா, ப்ரமீலிகா, க்லீபா, நிரஹங்காரா என்ற எண்மரை யந்திரத்தில் ஆவாஹனம் செய்தான். அதன் நடுவே ஸம்ஹார அக்ஷரத்தையும், எட்டுத் திசைகளில் சூலக் குறியையும் பொறித்தான். மந்திர ஜபத்தால் அதை வீர்யமுள்ளதாக்கி, அதற்கு மிருக பலிகள் ஏராளமாகத் தந்தான்.

*

இருளரசியின் இறுகிய அணைப்பில் கதிரவன் மறைய, அவனது உட்பிரவேசத்தால் கருமைக் கடலிலிருந்து எழும்பிச் சிதறிய திவலைகள் போல் தாரகைக் குவியல்கள் உதித்தன. அந்த நிழல் மூட்டத்தில் மாயா ரதமேறி மறைந்து சென்றான் விசுக்ரன், அக்னிக் கோட்டையை நோக்கி. ஹயக்ரீவனும், ஸ்தம்பினியும் உஷாராய் காவலிருக்கும் கோட்டையுள் பிரவேசித்து விக்ன யந்திரத்தை ப்ரதிஷ்டை செய்வது நடக்காத காரியம் எனக் கண்டான்.

வெகு நேரம் யோசித்த பின் வெளியிலிருந்தே விசையுடன் யந்த்ர சிலா பட்டத்தை வீசி உள்ளே எறிந்தான். அது வானை முட்டும் வன்ஹிப்ராகார

மதிலைத் தாண்டி உட்சென்று அம்பாளின் சிபிர(கூடார)த் தருகே பூமிக்குள் ஆழப் பதிந்து புதைந்தது.

இந்த நம் புராணம் சுவைபட உருவாக வேண்டுமென்று பராசக்தி தன் சக்தியை ஒளித்து லீலை செய்தாள்! அவளது நேர் ஸந்நிதியிலேயே அவளுக்கு எதிராக விக்ன யந்திரத்தின் சக்தி வேலை செய்யத் தொடங்கியது! அவளை உயிருக்குயிராய் நேசித்து, அவள் இட்ட பணியை இட்டமுடன் செய்துவந்த சக்தி கணங்களின் புத்தியில் சோம்பல், பலவீனம் முதலான அந்த எட்டு அவகுணங்களும் குடி புகுந்தன. சூலக்குறியும், ஸம்ஹார அக்ஷரமும் இந்தச் சோர்வு நிலையிலேயே அவர்களுக்கு அம்பாளிடம் அடங்காமையையும், விரோத உணர்வையும் ஊட்டி விட்டன. மாபெரும் சக்தி சேனை முழுதையும் பீடித்த இந்த துராவேசத்துக்குத் தப்பியவர்கள் மந்த்ரிணி, தண்டநாதை ஆகிய இருவர் மட்டுமே.

அவ்வளவுதான்! சக்திகளுக்குப் போர் 'போர்' அடித்து விட்டது! ஆயுதங்களை அப்பால் எறிந்தனர். "போதும், போதும் மோதலும், நோதலும்! யஜமானி என்று சொல்லிக் கொண்டு எவளோ ஒருத்தியும், அவளுடைய கையாட்களாயுள்ள அமைச்சியும், படைத் தலைவியும் கொண்டாட்டம் போடுவதற்காக நமக்கேன் இந்தத் திண்டாட்டம்? ஆம், வெற்றியடைந்துதான் நமக்கு என்ன லாபம்? தோல்வி கண்டால்தான் நமக்கென்ன நஷ்டம்? என்றைக்கும் நமக்கென்னவோ அடிமைப் பிழைப்புத்தான் மிஞ்சப் போகிறது. எனவே யுத்தத்தில் அடி, உதை படாமல் அசுரருக்கேதான் அடிமைப்பட்டுவிடுவோமே! ஒத்துழையாமைக்காக இந்த 'மஹா' ராஜ்ஞி நம்மை ஒன்றும் சிக்ஷித்துவிட முடியாது. ஏனென்றால் நம்மால்தான் அவள் ராஜ்ஞியாய் அதிகாரம் செலுத்துவது. நம் ஆற்றலே அவளுக்குச் சக்தி தருவது. நாம் பிரிந்தால் ராணிக்குத் திராணியெதுவும் இராது!" என்றெல்லாம் விபரீத மார்க்ஸிஸம் பேசினார்கள்.

உடனேயே விநோத காந்தியமும் பேசலாயினர். "அஸுரர்களும் உயிர்கள்தாமே! அவர்களோடு போர் செய்து நாம் ஏன் ஜீவ ஹிம்ஸை செய்ய வேண்டும்?" என்றனர்.

இப்படிச் சொல்லிக் கொண்டேயிருக்கையில் உறக்க, மயக்க, தயக்க சக்திகள் அவர்களுள் ஊறின. "வீரம் என்று சொல்லிக் கொண்டு எதற்காக ஓடி அலைந்து, முட்டி மோதி, அலட்டிக் கொள்ள வேண்டும்? ஆஹா, நித்திரையில் உள்ள சௌக்கியம் எதில் உண்டு?" என்றவாறு சக்தி ஸேனைகள் அசக்தி ஸேனைகளாகிக் கொட்டாவி விட்டன! கண்கள் சொருக, அப்படியப்படியே நீளநெடுகப் படுத்துவிட்டன!

விசுக்ரன்தான் எத்தனை சாமர்த்தியமாய் விக்ன யந்திரம் போட்டு விட்டான்? பேத உபாயம் என்று பண்டன் சொன்னதற்காக லலிதையை அவளது ஸேனைகள் எதிர்த்துத் தாக்கச் செய்யாமல் அவற்றைத் தூங்க வைத்தேயல்லவா இடையூறு உண்டாக்கி விட்டான்!

விக்னத்தை அம்பாள் எப்படித் தகர்க்கப் போகிறாள்? விக்னம் நீக்கும் காரியத்துக்கே ஏற்பட்ட விக்நேச்வரனை —?

அந்த அத்புதத்தை அடுத்த அத்தியாயத்தில் தெரிந்து கொள்ளலாம்.

## 13

அக்னிக் கோட்டையுள் அம்பாளின் கூடாரத் தருகே விசுக்ரன் விக்ன யந்த்ரம் நாட்டியது இரவு வேளையிலாகும். தேவப் பிறவிகளான சக்தி

ஸேனைகளுக்கு உறக்கம் தேவையில்லையாயினும், இராப் பொழுதில் அவை ஓய்வு கொள்வதுண்டு. எனவே போர் இல்லாத அவ்வேளையில் அவற்றுக்கு உறக்கம், ஓய்ச்சல், அடங்காமை முதலிய தன்மைகள் உண்டானதை மந்த்ரிணியும் தண்டினியும் அறிவதற்கு அப்போதே இடமேற்படவில்லை.

மறுதினம் கதிரவன் உதித்த பின்தான் விஷயம் வெளிச்சமாயிற்று. விசுக்ரன் முப்பது அக்ஷௌஹிணிப் படைகளுடன் வந்து திக்கோட்டைக்கு வெளியே நின்று வீராட்டஹாஸம் செய்து சக்தி கணங்களைப் போருக்கு அழைத்தான். அவையோ எழுந்திராமலே கிடந்தன! இதைக் கண்டவுடன் மந்த்ரிநாதையும் தண்டநாதையும் ஏதோ விபரீதம் விளைந்திருப்பதை ஊகித்தனர்.

இவர்கள் சக்தி ஸேனையைத் தட்டி எழுப்பிய போது, அல்லது எழுப்ப முயன்றபோது ஊகித்த விஷயம் ஊர்ஜிதம் ஆயிற்று.

“நாங்கள் அயர்ந்து, மயங்கி, அமைதியில்தான் கிடப்போம்; போர் முகம் புக மாட்டோம். நீ யார் மந்திரிணி எங்களைத் தட்டிக் கேட்க? உன் மந்திரம் எங்களிடம் சாயாது. அடியம்மா, தண்டினி! உன் தண்டனைக்கும் நாங்கள் பயப்பட மாட்டோம். நீங்கள் தண்டமிட்டு வணங்கும் அந்த அரசிக்குமே நாங்கள் அஞ்ச மாட்டோம்!” என்று தூக்கக் கலக்கத்திலும் திடமான தீர்மானத்துடன் ஸ்பஷ்டமாகக் கூறிவிட்டு, சக்தி கணங்கள் (சக்தியின் கணங்களாகவா இப்போது அவை இருந்தன?) புரண்டு படுத்துக் குறட்டைவிடலாயின!

அஸுர மாயை விளைவித்த ஆபத்து இது எனக் கண்ட ச்யாமளையும் வாராஹியும் மஹாமாயையான மஹாத்ரிபுரஸுந்தரியிடம் சென்று தங்களது ராணுவத்தின் ‘ஸ்ட்ரைக்’கை அவளுக்கு விண்ணப்பித்தனர்.

"விரோதி விசுக்ரன் பல வெள்ளம் அசுரருடன் வந்து விண் பிளக்க வீர முழக்கம் செய்கிறான். நம் படையோ ஒத்துழையாமை செய்கிறது. இனி என்ன லீலை செய்ய உத்தேசித்திருக்கிறாயோ, செய்துகொள் தாயே!" என்று முடித்தனர்.

'இடுக்கண் வருங்கால் நகுக' என்கிறது தமிழ் மறை. லலித அம்பிகை இப்போது நகைதான் பூத்தாள்.

ஆஹா, இடுக்கண் தீர்க்கவே ஏற்பட்ட இறை மூர்த்தத்தைப் படைத்து விட்டது அந்த இளநகை!

வெறுமேயா சிரித்தாள் சீரார் தேவி? இவளது யுத்த லீலையில் நேராய்ப் பங்கு பெறாவிடினும் ஸாக்ஷி மாத்திரமாய் அதைக் கண்டு களிப்பதற்காக இவளது கரம் பிடித்த காமேச்வரனும் இதர தேவர்களுடன் எழுந்தருளி யிருந்தான். அவனைப் பார்த்த வண்ணம்தான் மந்த ஹாஸம் செய்தாள் மஹாதேவி. சிவ பரமேச்வரன் மீது அவளது கருவிழி தூவிய சில்லிப்புப் பார்வைக்கு உடன் பிறப்பாகச் சிறு நகையும் சிவப்புதட்டில் நெளிந்தது. பாதி மலர்ந்த பதுமம் போன்ற கண்களிலிருந்து பிறந்தது கருங் கடாக்ஷ அமுது. பாதி விரிந்த சிவப்புப் பாதிரிப் புஷ்பத்தி னுள்ளிருந்து அதன் வெண் கேஸரங்கள் தெரியுமாப் போல, சிறிதே திறந்த அதரம் வழியே பற்கள் தெரிய நகையமுது பிறந்தது. அவ்விரு அமுதங்களும் கலந்தபோது அந்த மூன்று வர்ணங்களுக்குரிய முக்குணங்களும் ஒன்று சேர்ந்தன. அவை முக்குணங்களுக்கும் அதீதமான முக்கட் சிவனை முன்னிட்டுப் பிறந்ததால் முக்தியமுதையே மூர்த்தியாக்கின.

ஆம், அமுதையே கண்ணோரம், கன்னம் ஆகிய அங்கங்களிலிருந்து மதநீராகப் பெருக்கும் ஆனைமுகன் ஆவிர்பவித்து விட்டான்! அன்னை ஆவியாழ ப்ரேமையோடு ஈசனை நோக்கிப் புரிந்த இன்னகையிலே இளவல் ஜனித்து விட்டான்!

ஸ்ரீமாதாவின் தலைப்பிள்ளை வந்து விட்டான்!

நம்முடைய அன்னையை நேரிலேயே அன்னையாக நேசித்து 'ஸ்ரீமாதா' என அழைத்த மூத்த திருக்குமாரன் அவதரித்து விட்டான்!

மாதா என்றால் குறிப்பாகக் காட்ட ஒரு குழந்தை வேண்டாமோ? என்னதான் பாலாவை லலிதையின் புத்ரி என்றாலும் அவள் குட்டி லலிதையாகவே மனத்துக்கு வருகிறாள்; லலிதையின் குட்டியாக அல்ல! கொழு கொழு கணபதிதான் அவளது தாய்ச் சீராட்டின் செழுமைக் கெல்லாம் ரூபமாக, பெரிய களிற்றுக் குட்டி ரூபமாக, அம்மாவின் குழந்தையே குழந்தை எனுமாறு வந்தவன்.

ஈசனின் ஆறு நெற்றிக் கண்களுடைய நெருப்புப் பொறிகளில் வெற்றிவேலன் பின்னால் பிறக்கப் போகிறான். அதை அன்னையின் தொடர்பின்றி அப்பன் மட்டும் மகவு ஈந்ததாக அறியாதார் சொன்னாலும் ஐம்முகச் சிவனின் உள்ளே அதோமுகமாக உள்ள ஆறாவது வதனமும் அதற்குரிய நெற்றிக் கண்ணும் அம்பிகைக்கு உரியனவே என்று அறிந்தோர் கூறுவார்கள். அபிராமிபட்டரோ காமதஹனப் பெருமானிடம் குமாரன் உத்பவித்ததே அம்பாளின் வல்லபத்தால் (வல்லமையால்) தான் என்று உறுதி செய்து பாடுவார்: "காமனங்கம் தகனமுன் செய்த தவப் பெருமார்க்கு மூதறிவின் மகனுமுண்டாயதன்றோ வல்லி, நீ செய்த வல்லபமே!"

இப்போது நெருப்புப் பொறியினாலன்றி, சிரிப்புத் துளியினாலேயே அவள் மட்டும் குட்டியானை குணநிதியை கணபதியாகக் கொணர்ந்திருக்கிறாள். ஸச்சிதானந்த ஸ்வரூபிணியின் ஆனந்த நகையில் பிறந்த ஆனைக் குழந்தை ஸதா சிரித்த முகத்தோடு 'ஸுமுகன்', 'ப்ரஸன்ன வதனன்' என்றே திருநாமங்கள் பெற்றுத் திகழ்கிறான். இந்த மூத்த மகனும் மூதறிவின் மலர்ச்சி கொண்ட மகிழ்ச்சி வடிவுதான். சிவனைக் குறித்து எழுந்த கடாக்ஷத்தில் விளைந்ததே நாயகியின் நகைப்பு என்பது

தவிர இங்கு அப்பன் தொடர்பின்றி அம்மை தன்னிலிருந்து தன்னையே தனயனாகத் தந்திருக்கிறாள்!

ஆயினும் பதியிடம் பதிந்த பார்வையையே அவள் கணபதி அவதாரத்துக்குக் காரணமாகக் கொண்டது அவளது அதிசய பதிவிரதா தர்மத்தின் பெருமையாகும். பெயரளவுக்கேனும் அவனை அரசனாகக் கொண்டேதான் அரியணை ஏறுவது, ஸாக்ஷி மாத்திரமாகவேனும் அவனை அருகில் கொண்டே அமர் புரிவது, காரண மாத்திரமாக வேனும் அவனைக் கருத்திலும் கருவிழிப் பார்வையிலும் கொண்டே குழந்தையைக் கொணர்வது — என்றிப்படி யெல்லாம் மஹா பராசக்தி தனது மாபெரும் சக்தியை மஹாதேவனின் பாற்படுத்திப் பணிந்து காட்டிப் பெண்ணறத்தின் பெருமை, கொண்டவனைப் பெருமைப் படுத்துவதே எனக் காட்டியிருக்கிறாள்.

சக்தி சேனையை அவனது சம்பந்தமின்றியே சிருஷ்டி செய்தாள். பாலாவுங்கூடப் பரமன் தொடர்பின்றித் தோன்றியவளே போலும்! இதற்கெல்லாம் ஈடுகட்டுவது போல தற்போது விக்ன யந்திரத்தால் இடர்ப்பாடு ஏற்பட்டு, இடர் களைய நேர்ந்தபோது நேசநாயகனை முற்படுத்தியே விக்நேச விநாயகனை ஈந்திருக்கிறாள். தன்னுடைய வல்லபத்தைச் சற்றே குறைத்துக் காட்டித் தன் வல்லபனுக்கு (பதிக்கு)ப் பெருமை சேர்த்திருக்கிறாள்.

ப்ரணவமாக எக்காலும், முக்காலும் உள்ள மூத்த திருப் பிள்ளையார் 'வல்லப கணபதி'யாக அவதரித்தார். வல்லபை எனப்படும் ஆற்றல் மயமான தேவியை இடது தொடையில் வைத்து அணைத்த மூர்த்தியே வல்லப கணபதி. 'மஹா கணபதி' என்பது இவனைத்தான். திருமகள்-திருமால், பார்வதி-பரமேசன், ரதி-மதனன், பூதேவி-பூவராஹர் என்ற நான்கு திவ்ய தம்பதியர் முறையே இவனை முன்புறம், வலப்புறம், பின்புறம், இடப்புறம் ஆகிய நான்கு பக்கங்களிலும் சூழ்ந்திருப்பார்கள். சிவ-சக்தி

ஸு்தனாகவே முதற்கண் மதிக்கப்பெறும் விநாயகன் அவர்களுக்கும் முன்னதாக லக்ஷ்மி-நாராயணர்களைத் தனக்கு நேர்முன்னே கொண்டிருப்பது சைவ-சாக்த-வைஷ்ணவ மரபுகளுடைய ஸமரஸ இசைப்பின் உச்ச ஸ்தானத்தைக் காட்டுகிறது. மதன-ரதி தம்பதி இவனுக்குப் பின்புறம் இருப்பது இவனை ஸ்மரித்தால் காமம் பிறபட்டு ஓடுவதைக் காட்டும். மண்ணிலேயே விண்ணைக் காட்டும் பிருத்வி தத்துவத்தை விநாயகன் விசேஷமாக உணர்த்து வதால் பூதேவியை மீட்டெடுத்து வந்த பூவராஹர் இவனுக்கு ஒரு பக்கலில் விளங்குகிறார். பூமியாளும் பொறுமையை அருள்பவனாதலால் பூதேவியும் உடன் காண்கிறாள்.

இம் மஹாகணபதிக்குப் பக்கத்து ஐந்தாக மொத்தம் பத்துக் கரங்கள். அக் கரங்களில் தரித்துள்ள வஸ்துக்கள் மேற்சொன்ன நான்கு தம்பதியரும் இவனுள் அடக்கம் எனக் காட்டும். சிவபெருமான் அர்த்தநாரியாகும் போது இடப்புறம் அம்பிகை தத்துவத்தைக் காட்டுகிறா ரெனில் மஹாகணபதியோ தமது வலக்கரங்களில் திருமகள், பார்வதி, ரதி, பூதேவி ஆகிய பெண் தெய்வங்களின் சின்னங்களையும், அவற்றுக்கு நேர் நேரான இடக் கரங்களில் திருமால், ஈசன், காமன், வராஹமூர்த்தி ஆகிய ஆண் தெய்வங்களின் சின்னங்களையும் தாங்குகிறான். மேல் ஜோடிக் கைகளில் வலத்தே லக்ஷ்மியின் பத்மமும், இடத்தே விஷ்ணுவின் சக்ரமும்; அதற்குக் கீழ் அடுத்த ஜோடிக் கரங்களில் பார்வதியின் பாசாயுதமும் பரமேச்வரனின் சூலாயுதமும்; அதற்கும் கீழ் ஜோடிக் கைகளில் ரதியின் கருங்குவளை மலரும் மதனனின் கரும்பு வில்லும்; அதற்கும் கீழான எதிரெதிர்க் கரங்களில் பூதேவிக்குரிய நெற்கதிரும், வராஹருக்குரிய கதாயுதமும்.

பத்துக் கரங்களில் எஞ்சும் இரண்டான அடி ஜோடிக் கைகளில் விநாயகனுக்கே உரியதான தந்தமும்,

மாதுளம் பழமும்! தந்தம் வலது கையில்; மாதுளை இடதில். இவனது வலப்புறம் பெண்மையைக் குறிப்பது. பெண் யானைக்குத் தந்தம் கிடையாதென்பதை யொட்டி அப் பக்கம் இவனுக்குத் தந்தமில்லை. ஒற்றைக் கொம்பனாக இருக்கிறான். முகத்தின் வலது புறத்தில் இல்லாத தந்தமே வலக் கையில் விளங்குகிறது! பெண்மையின் கையில் ஆண்மை அடங்குகிறது!

இறைவன் செய்த மாதுளைக்குப் பதில் மானுடர் செய்யும் மோதகம் இடம் பெறுவதுமுண்டு. ஆன்ம பூரண இன்பத்தைக் குறிக்கும் இனிப்புக்குத்தான் இரண்டுமே உருவகம். 'மோதகம்' என்றால் இன்புறுத்துவது என்று பொருள். அதில் 'பூர்ணம்' இருப்பது பூர்ணப் பொருளைக் குறிப்பதே.

பத்துக் கை இருப்பினும், 'கரி' என்றும் 'ஹஸ்தி' என்றும் ஆனைக்குப் பெயர் தரும் கையான துதிக்கை அல்லவோ குஞ்ஜரானனுக்கு முக்கியம்? அத் துதிக்கையில் அமுத கும்பத்தை ஏந்தியிருக்கிறான் அமுதரூபி.

'தாயைப் போலப் பிள்ளை' — லலிதை போலவே செம்பருத்தி வண்ணமாய் ஜ்வலிக்கிறான் பிள்ளையா ரப்பன். தாயையும், தந்தையையும் போல முடியிலே இளமதி சூடி, அது காரணமாக 'பாலசந்த்ரன்'* என்று பெயர் பெற்றவன் இவன். நிறைந்த நிறைவைக் காட்டும் தொப்பை வயிறன். அவ்வுதரத்தின் அடியிலிருந்து மூலாதார நாதம் ஆனையின் அடங்கிய கர்ஜனையாக மந்த்ர ஸ்தாயியில் குமுகுமுத்துக் கொண்டிருக்கும்.

இவன் இடத் தொடையில் இடம் கொடுத்துள்ள வல்லபைக்கு ஸித்தலக்ஷ்மி என்றும் பெயர் சொல்வதுண்டு. அற்புத சக்திகளான அஷ்ட ஸித்திகளுக்கு ஆதாரம் அவள். இவ்வற்புதங்களுக்கும் மேலான அடங்கிய ஆன்ம ஸித்திக்கு

* Phaalachandran; Baalachandran அல்ல.

ஆனைமுகன் உருவமானான். அந்த ஒரு ஸித்தி பெற்றோரிடம் இந்தப் பல ஸித்திகள் உலக நலனை முன்னிட்டுத் தானாகவே கூடிவிடும் என்பது உட்பொருள்.

உற்பவித்த மாத்திரத்தில் மஹாகணேசன் செய்த காரியம் தன்னுடைய மஹா மஹா மாதாவை நமஸ்கரித்ததுதான். நமது முதல் வணக்கத்தைப் பெறும் தெய்வம் புரிந்த முதற்காரியம் முன்னறி தெய்வமான அன்னையை வணங்கியதே!

அன்னை அவனுக்கு ஆசி பொழிந்தாள். எதன் பொருட்டு உத்பவிக்கப் பெற்றானோ அப்பணியில் அவனை ஏவினாள்.

குதித்துப புறப்பட்டது குஞ்ஜரச் செல்வம்!

விக்ன யந்திரத்தைத் தேடி (அல்லது தேடுவது போல பாவித்து) திக்கோட்டை எங்கணும் சுற்றித் திரிந்து, அம்பிகையின் பாசறை அருகில் அது புதைந்திருப்பதைக் கண்டான் கணநாதன்.

நிலத்தை அகழ்ந்து யந்த்ரத்தை வெளியே எடுத்தான். அப்புறம் ஒரு நொடிதான்! பொடியாகி மேலே பறந்தது, விசுக்ரன் வீசிய விக்ன யந்த்ரம்! விக்நேசன் தனது தந்தத்தால் குத்திய குத்தலில் பொடித்த யந்திரத் துகள்கள் மேலே எழும்பி அங்கு யந்திர பாலகர்களாகச் சூழ்ந்திருந்த துர்தேவதைகளின் மீது பட்டவுடன் அத்தேவதைகள் வதையாகி அழிந்தன. சூர்ணமான யந்திரப் பொடிகளும் சூன்யமாய் மறைந்தன.

அப்புறம் கேட்பானேன்? மயக்கம், தயக்கம், தூக்கம், சோர்வு முதலிய துராவேசங்களிலிருந்தும், அடங்காமை என்ற மூல மஹா பிசாசத்திடமிருந்தும் சக்தி கணங்கள் சடேரென விடுபட்டன.

முன்னிலும் சிறப்பான ஊக்க உற்சாகத்துடன் அக் கணங்கள் கணநாதனைப் பின் தொடர்ந்து யுத்த பூமி சென்றன.

பெண் படையே கொண்ட தேவி இந்த ஆண் மகவால் அதற்கு ஏற்பட்ட இடரைக் களைந்து புத்துயிர் பெய்தது, ப்ரக்ருதி தர்மத்தில் இரு பாலும் இணைந்து நிற்க வேண்டுமென உணர்த்தவே போலும்!

*

இப்போது ஓர் ஆண் படையை, தன்னைப் போன்ற ஆனைமுகப் படையைப் படைத்தான் விக்னராஜன். மொத்தம் ஏழு கோடி கஜங்கள். ஒரு கோடிக்குத் தானே நேராகத் தலைமை தாங்கினான். மற்ற ஆறு கோடிகளில் ஒவ்வொரு கோடிக்கு ஒரு ஸேநாதிபதியாக ஆமோதன், ப்ரமோதன், ஸுமுகன், துர்முகன், விக்னன் (அல்லது அரிக்னன்), விக்னகர்த்தன் என்ற ஆறு விநாயகர்களை ஸ்ருஷ்டித்தான். ஸித்திகள் என்ற அற்புத சக்திகளில் கவடு விடும் எண்ணிறந்த ஆற்றல்களைக் குறிக்கும் 'ரித்திகள்' இந்த அறுவருக்குப் பத்தினியராயின. இவ்வாறாக மீண்டும் ஆண்-பெண் ஒற்றுமை வெளிப்பட, படைகள் அக்னிக் கோட்டைக்கு வெளியே வந்து அவுணப் படைகளின் மீது மோதின.

கணேச கணங்கள் செவிகளை ஆட்டிச் சென்றதே புஷ்கலம், ஆவர்த்தகம் எனும் புயல் முகில்கள் போல் அசுரர் படை மீது காற்றை வீசி அவர்களில் பலரைச் சிதறவடித்துச் சிதைத்ததாம்! எஞ்சியவர்களை அவற்றின் பிளிறல் கோஷம் பிளந்து தள்ளியது! அதற்கும் மிஞ்சியவர்களை கணேச கணங்கள் துதிக்கையை வளைத்துப் பிடித்தும் (ஆஹா, கொடுமை போல் தோன்றுவதிலேயே அவுணருக்கு எப்பேர்ப்பட்ட அநுக்கிரஹம்?) தந்தங்களால் குத்தியும், ஆயுதப் பிரயோகம் செய்தும் ஸம்ஹாரம் செய்தன.

விக்ன யந்திரம் புழுதியாய் மறைந்தது போலவே இப்போது தன் படையெல்லாமும் அடியோடு மறைந்து, புழுதி மட்டும் ரணபூமியைச் சூழ்ந்திருப்பதைக் கண்டான் விசுக்ரன். அப்போதும் பின் வாங்காமல் தன் மாயா சக்தியையெல்லாம் திரட்டினான். கஜமுகாஸுரனைப் படைத்து கஜமுக தேவன் மேல் ஏவினான்.

தன்னைப் போலவே உருவோடு வந்த கஜாஸுரனைப் பார்த்தான் பிள்ளைப் பெருமான். 'ஆனை பலம்' என்பது வழக்கு. இந்த பௌதிக பலத்தாலேயே வெற்றி காணலாமென எண்ணித்தான் விசுக்ரன் கஜமுகாஸுரனை ஏவியது. இப்போது அருள் பலமே உண்மை பலம் என்று காட்ட விநாயகன் உளம் கொண்டான். 'பலமற்ற அபலையரும் தன்னை இதயத்தில் தரிக்கும்படியாக அவ்வளவு லேசாயும் தன்னால் நிற்க முடியும்; இத்தனை லேசாக நின்றாலும், தனது அருள் பலம் வெற்றிக் கொடி நாட்டும்' எனக் காட்ட மனம் கொண்டான். எனவே அல்ப ஜந்துவான ஒரு மூஷிகத்தின் மீது ஆரோகணித்து, கஜாஸுரனை எதிர் கொண்டான்.

பின்னர்? எதிரி என்று எதிரே நிற்க அந்த அசுரனும் இல்லாமல் அழிந்து போனான்.

விசுக்ரன் போர்க்களத்தை விட்டுப் புறமுதுகிட்டு ஓடினான்.

ஜயகணேசனாக ஸ்ரீ லலிதாம்பிகையின் திருமுன்னே போய் நின்றான் அவளது அருமை மைந்தன்.

களிப்பே உருவான களிற்றுக் கன்றைக் கண்டு உளம் குளிர்ந்தாள் உமையாள்.

"என் கண்ணே! இனி எந்த தேவதைக்கு எவர் வழிபாடு செய்தாலும் அதன் தொடக்கத்தில் உனக்குப் பூஜை செய்தாலே பலன் ஏற்படுமென ஆணையிடுகிறேன்!"

என்று கூறி ஆனைமுகனை முன் நிற்கும் முதற் தெய்வமாக்கி அருளினாள், அன்னை பராசக்தி.

## 14

தோற்று ஓடிய விசுக்ரன் அடியுண்ட வேங்கையாகப் புதிய ஆக்ரோசத்துடன் மறுதினம் அமர் புரிய வந்தான். அவனது அருமைத் தம்பி விஷங்கனும் அவனோடு சேர்ந்து கொண்டான். நூற்று நான்கு அக்ஷௌஹிணிப் படைகள் ஊழி வெள்ளம் போல் ஊழியம் புரிய உடன் சென்றன.

தூமிநி என்றொரு அஸுரியை பண்டனுக்கு உடன் பிறந்தாளாக நம் புராணம் சொல்கிறது. விசுக்ர விஷங்கர்களைப் பண்டன் தன் தோளிலிருந்து படைத்ததைச் சொல்லுமிடத்திலேயே இவளையும் படைத்ததாகக் கூறியிருக்கிறது. தூமிநி என்றால் புகைமகள். மன்மத பஸ்மத்திலிருந்து பண்டன் பிறந்தானெனில், அதிலிருந்து எழுந்த புகையில் பிறந்த புகைச்சல்காரி போலும்! அவளுக்கு உலூகஜித் முதலான பத்துப் பிள்ளைகள். உலூகஜித் என்றால் 'கோட்டானை வென்றவன்' எனப் பொருள். எல்லா அவுணர்க்குமே இரவில் பலம் அதிகமாயினும், இவனுக்கு ஏனையோரை விடவும் இரவிலே கூர்மையான பார்வை போலிருக்கிறது! இப் பதின்மரும் மாமனான பண்டனிடமே ஆயுத வித்தை பயின்று தேர்ச்சி பெற்றவர்கள். தற்போது நூற்று நாலு அக்ஷௌஹிணிகளோடு இவர்களும் கலந்து கொண்டனர்.

சக்தி சேனைகளின் முன்னணியில் கலப்பையையும், உலக்கையையும் சுழற்றிக் கொண்டு தண்டநாதையான வாராஹி புறப்பட, அவளைத் தொடர்ந்தாள் மந்திரிணி

சியாமளை, அம்பு பூட்டிய வில்லோடு, சக்ரவர்த்தினி யான லலிதைக்கே இவள் கிட்டத்தட்ட ஸமமானவள் என்பதை விளக்குவது போல, தநுவை இழுக்கும் இவளது கர மலரின் விரல் இதழில் சக்ரவர்த்தினியின் ஆணை முத்திரை பொறித்த மோதிரம் சுடரிட்டது. 'முத்ரேச்வரி' என்றே இவளுக்கு ஒரு பெயர் கண்டோமே, நினைவிருக்கிறதா?

இவர்களின் மங்களக் கோலம் கண்டு அப்ஸரஸ்கள் வாழ்த்துப் பாடி ஆடினர். அது மட்டுமா? தேவரிஷிகளும் "ஜய விஜயீ பவ!" கூறிக் களிக்கூத்தாடினர்.

மந்த்ரிணி போல் ச்யாமள கோமள மரகத ஜ்வாலை வீசுபவர்களும், தண்டினி போல் காரொளி பெருக்குபவர்களும் மஹாராக்ஞி லலிதை போல் செஞ்சோதி வெள்ளத்தில் திசைகளை முழுக்குபவர்களும், பரசிவத்தைப் போல நிலவின் பாலொளி பொழிபவர்களு மான வண்ண வண்ண சக்தி ஸேனைகள் யுத்த பூமியையே வித வித மலர் மண்டிய நந்தவனம் போலாக்கினர்!

ஸமமான ஸ்தானங்களிலுள்ளவர்களே ஒருவரை யொருவர் பொருத வேண்டுமென்ற யுத்த நீதிப்படி பண்டனாட்சியில் நம்பர்-2 ஆக இருந்த விசுக்ரனை லலிதையின் மந்திரி நாயகியான ச்யாமளையும், நம்பர்-3 ஆக இருந்த விஷங்கனை ஸேநா நாயகியான வாராஹியும் எதிர்த்தனர்*. உலூகஜித்தோடு அச்வாரூடை போர் புரிந்தாள்.

மதுர ஸங்கீத ரூபிணியான ச்யாமளை இப்போது யுத்த ஸந்நாஹம் செய்து உக்ர வீரியம் காட்டினாள்.

* லலிதா ஸஹஸ்ர நாமத்தில் நமது லலிதோபாக்யானக் கூற்றுக்கு மாறாக விசுக்ரனை வாராஹியும், விஷங்கனை ச்யாமளையும் எதிர்த்து வென்றதாக உள்ளது. பொதுவான யுத்த நீதிப்படி நமது புராணம் கூறுவதே பொருத்தமுடையது.

விசுக்ரனின் சேனா சமூகம் அதிலே வாடி வதங்கிக் களைத்தது.

"களைத்த என் படைக்குக் களிப்பு ஊட்டுவேன். எக்களிப்பில் தளிர்க்கும் இக் காளியின் ஸேனையைத் தளர்ந்து தத்தளிக்க வைப்பேன்!" எனச் சூளுரைத்த விசுக்ரன் தர்ஷாஸ்திரத்தை விடுத்தான். அது சக்தி ஸேனையை ஆறாத தாகத்தில் தவிக்கச் செய்தது.

'தர்ஷம்' என்ற சொல் அடியாய்ப் பிறந்த 'த்ருஷ்ணை' என்ற பதம் தாகம், ஆசை-வேட்கை இரண்டையும் குறிப்பதாகும். மானுட ஆன்மாவின் ஆண்மைக் கம்பீரத்தைக் குலைப்பது இந்த ஆசையாம் த்ருஷ்ணைதான். சுக்ரம் என்பது வெண்மை, ஆண்மை இரண்டையும் குறிப்பது. வெண்மையான ஸாத்விகத்தையும் ஆண்மையையும் ஆசைப் பிசாசு கொண்டு அழிக்கும் ஆணவ சக்தியின் ரூபமே வி-சுக்ரன்.

தர்ஷாஸ்திரத்தின் தாக்குதலில் சக்தி கணங்களது உதடு உலர்ந்தது; கண்டம் காய்ந்தது; காயம் பற்றி எரிந்தது. அசக்தி கணங்களாகி அவை அப்படியப்படியே ஆயுதம் கைசோர அவனியில் சாய்ந்தன. சமயம் பார்த்து அவுணர் பாணப் பிரயோகத்தைப் பிரவாஹமாகச் செய்யலாயினர்.

சிறிது காலம் இதைச் சமாளிக்க உபாயம் தெரியாமல் சியாமளியும் தண்டினியும் திகைத்தனர். பின்னர் தண்டநாதையிடம் ச்யாமளி, "உன்னுடைய கிரி சக்ர ரதத்தின் அங்கணங்களில் 'மதிரா ஸிந்து' உள்ளதல்லவா? அதன் தேவதையைக் கொண்டு நம் படைகளின் தாஹத்தையும் தாபத்தையும் சமனம் செய்வாய்!" என்றாள்.

'மதிரா ஸிந்து' என்றால் மதுக்கடல். ஸங்கீத ரூபிணியான மந்த்ரிணி நாதாம்ருதத்தில் திளைத்து, முத்து ஸ்வாமி தீக்ஷிதர் கானம் செய்வது போல, 'மதுமத மோதித ஹ்ருதயா' (கள்ளின் மதத்தில் களித்த மனத்தவளாக)

இருப்பவள். ஆனந்த போதத்தைத்தான் கள்ளின் போதையாகச் சொல்வது. ஆயினும் மதுக் கடலோ வாராஹியின் ரத பர்வத்தில் இருக்கிறது! இதிலிருந்தே இத் தேவியர் உட்சாரத்தில் ஒன்றேயாக — அதாவது ஒரே தாய்த் தத்வமாக, அன்புத் தத்வமாக, அன்போடு அறமும் இணைந்து தர்மத்துக்காகப் போரிடும் நீதி தத்வமாக — இருப்பவர்களென்பதை உணரலாம்.

தண்டினி அவ்வாறே மதிரா ஸிந்துவுக்கு ஆக்ஞையிட, யுத்தரங்கத்தில் இரு ஸேனைகளுக்குமிடையே ஒரு அணை எழும்பிற்று. அவுணர் நெருங்க முடியாமல் சக்தி ஸேனைகள் பக்கமிருந்த அணைப் பகுதியில் கௌடீ, பைஷ்டீ, மாத்வீ, காதம்பரீ முதலான பெயர் கொண்ட மதுக்கள் வெவ்வேறு வண்ணங்களில் பொங்கு புனல்களாகப் பீய்ச்சியடித்தன. விசித்ர ஃபௌன்டன்கள்! இனிப்பிலும், இவ்வினிப்பிலேயே புளிப்பு, துவர்ப்பு, கசப்பு முதலியன கூடிய சுவைகளிலும் மது தாரைகள் பெருகின. மதுவிலக்கு விலக்கப்பட்டு வரும் இந்நாளில் இதை எடுத்துச் சொல்லவே தயக்கமாகத்தானிருக்கிறது. ஆயினும் இங்கே யுத்த வீராங்கனைகளுக்காகவே மதுப் பிரவாஹம் தோற்றுவிக்கப்பட்டதை நன்றாகக் கருத்தில் இருத்தி இவ்விஷயமாக ஸ்ரீ காஞ்சி காமகோடி மூத்த பெருந்தகை முகிழ்த்த சொல் முத்துக்களைப் பார்த்துத் தெளிவு பெறுவோம்.

"ஒருத்தன் தர்ம ரக்ஷணத்துக்காகக் கத்தியைப் பிடித்துக் கொண்டு சண்டை போட வேண்டியிருக்கிறது. தர்ம ரக்ஷணை என்பது மனஸின் உயர்த்தி. அதுவே இவனுடைய கார்யத்தில் வருகிறபோது யுத்தம் என்று ஹிம்ஸை மாதிரி ஆக வேண்டியிருக்கிறது. ஆனாலும் இவன் ஜன ஸமூஹம் தர்மத்தில் அழிவடையாமல் காப்பாற்றுகிற உயர்ந்த நோக்கம் கொண்டவன். இந்த உயர்ந்த நோக்கம் இவனுக்கு இருப்பதால், இவனுக்கு யுத்தத்தில் உத்ஸாஹமும், நல்ல சரீரக் கட்டும் ஏற்படுவதற்காக, 'மது,

மாம்ஸாதிகளைச் சாப்பிட்டு விட்டுப் போகட்டும். அது அவன் சூழ்நிலையில் அவனுக்குரிய தொழிலால் அவன் பெறுகிற ஆத்ம வளர்ச்சியைக் கெடுக்காது' என்று சாஸ்த்ரம் வைத்திருக்கிறது."

லோக வாழ்வையும் இயற்கைப் போக்குகளையும் புறக்கணிக்காமல் ஒப்புவதே சாக்த தர்மத்தின் ஸாரம். பரம ஞான மார்க்கத்தில் ஒதுக்கப்படும் காம நுகர்ச்சி, மதுபானம், மாம்ஸ போஜனம் முதலியவற்றையுங்கூட அம்பாளுடைய லீலையின் அங்கங்களாக உணர்ந்து அநுபோகம் செய்து, இவற்றின் மூலமும் அவளை அடைய வேண்டுமென்ற அளவுக்குப் போய் விடுகிறது, சாக்த சமயத்தின் வாமாசாரப் பிரிவு. ஆனால் பெரும்பாலோர் விஷயத்தில் இது பேராபத்தான ஸாதனையாகும். வைதிக தர்ம மதத்தில் இப்படி ஒரேயடியாகப் போய்விடவில்லை. ஆயினும் ஸாமானிய ஜீவனை ஒரேயடியாக ஞான வைராக்கியத்தில் பிடித்துத் தள்ளினால் அவனது ஜன்மாந்தர வாஸனைகள், அதனால் ஏற்பட்ட குணம், இந்தைப் பொறுத்தே அவனுக்குப் பிறப்பால் அமைந்த தொழில் ஆகியவற்றுக்கு ஒத்து வராமல் தடுமாறித் தோல்வியுறுவான் என்பதை வேத தர்ம சாஸ்திரங்களை அருளிய ரிஷிகள் நன்கு கண்டு கொண்டிருந்தார்கள். எனவே உச்ச நிலையில் அடியோடு ஒதுக்கப்பட வேண்டிய பல நுகர்ச்சிகளைக் கீழ் நிலைகளில் ஒரேயடியாகக் கட்டறுத்து அநுபவிக்க விடாமல், அதே போதில் ஒரேயடியாகத் தடுத்தும் விடாமல், அவரவர் குண-கர்மங்களைப் பொறுத்தும், வாழ்க்கையில் அவர்கள் உள்ள வயதுக் கட்டத்தைப் பொறுத்தும் அளவுபடுத்திக் கொடுத்திருக்கிறார்கள். உச்சிக்குப் போகப் போகத் தன்னால் மெல்ல மெல்ல இந்த அளவுகள் குறைந்துகொண்டேபோய் அடியோடு தேய்ந்து மறையும்படியாக வர்ண-ஆச்ரம விதிகளை அளித்திருக் கிறார்கள். இதில்தான் கட்குடி க்ஷத்ரிய யுத்த வீரர்களுக்கு அநுமதிக்கப்பட்டது. மது விலக்கு மிகவும் முழக்கப்பட்ட

ஸமீப காலத்திலும் ராணுவத்தில் அவ் விதி ஒதுக்கப் பட்டிருந்ததே!

நம் காமகோடி ஸ்ரீசரணர்கள் வலியுறுத்துவது போல, ஆதரிச நிலை அனைவர்க்கும் அவர்கள் தற்போதுள்ள நிலையில் ஸாத்தியமானதல்ல என்பதை நமது சாஸ்திர காரகர்கள் கருத்தில் கொண்டு, மானுட இயல்புக்கு அநுஸரணையான விதத்திலேயே அவ்வாதரிச நிலைக்குக் காலக்ரமத்தில் உயர்த்திச் செல்லும் விதத்தில் வாழ்க்கை விதிகளை அமைத்துள்ளனர். மனித இயல்பிலுள்ள எல்லாவற்றுக்கும் ஒவ்வொரு ஸ்திதியில் இவ்வாறு இடமளித்து அளவுபடுத்தித் தருவதிலேயே காமம், களியாடல், மதுபானம், மாம்ஸ போஜனம் ஆகியனவும் சிலருக்கு அநுமதிக்கப்பட்டிருப்பது. இதைப் புரிந்து கொள்ளாமல் புராணங்களைப் பரிஹஸிக்கிறார்கள்.

இதுவும் தவிர, புராணங்கள் உருவகக் கதைகளு மாகும். நிறைவேறாத காமத்தின் கோபப் பகட்டுக்கு உருவகம்தான் பண்டன் என நினைவிருக்கலாம். ஜீவாத்ம பரமாத்ம ஐக்கியத்துக்கு சிருங்காரம் உருவகமாவதுண்டு. இந்த ரீதியில் மது என்பது ஆத்மானந்த ரஸம். ஆன்மாவின் அறிவாகிய ஆண்மையை ஆணவ விசுக்ரன் வற்ற வைத்தபோது அதில் பசுமை பாய்ச்ச ஆனந்த மது தேவைதானே? இதுவே கதையுருவம் பெறும்போது தர்ஷாஸ்திரத்தால் வற்றியுலர்ந்த சக்தி ஸேனைகளை யுத்த உன்மத்தம் கொள்ளச் செய்வதற்காக மது தாரைகள் தோற்றுவிக்கப்படுகின்றன.

ஐராவதத்தின் துதிக்கைகளைப் போல் அத்தாரை கள் பீய்ச்சியடித்தன. அவற்றைச் சக்தி கணங்கள் ஒரு முஹூர்த்த காலம் இன்பமாய்ப் பருகின. ஊக்க உத்ஸாஹம் பெற்றன. ஆவேசமாக யுத்தத்தில் ஈடு பட்டன.

மதுவினால் சிவந்த சக்தி கணத்தின் கண்களுக்குப் போட்டியாக அவற்றின் அஸ்திரங்களும் அவுணர்களின் உதிரத்தில் தோய்ந்து சிவந்தனவாம்!

பரிவாரத்தின் வீராவேசம் தலைவியையும் 'தொற்றிக்' கொண்டது. தண்டினி எதிரிகளின் நூறு அக்ஷௌஹிணிகளை நொடியில் நொறுக்கித் தள்ளினாள்.

அவுணர் தலைவர்களின் தலைகள் சாயத் தொடங்கின. அச்வாரூடையின் அங்குசம் உலூகஜித்தின் உயிரை யமாலயத்துக்குக் கொண்டு சேர்த்தது. அவனது ஸோதரர் ஒன்பதின்மரின் கதையை ஸம்பத்கரி முதலியவர்கள் ஸமாப்தி செய்தனர்.

கதிரவன் மலை சாயும் நேரம் விசுக்ர-விஷங்கர் இருவர் தவிர அன்று வந்த சேனை முழுதும் தலை சாய்த்து விட்டது.

விசுக்ரனையும் சாய்க்க வந்தாள் சியாமளை. ஆம், அன்று இரவும் போர் தொடர்ந்தது! ஆன்மாவின் ஆண்மையறிவுக்கு அழிவு தேடும் ஆணவமே விசுக்ரன் அல்லவா? மாதுர்ய கானத்துக்கு அதிதேவதையான ச்யாமளையே இப்போது ஞான கம்பீரமாகப் பொங்கியெழுந்து ஆணவ அவுணனை எதிர்த்தாள்.

அவளுடைய அம்பு வீச்சுக்கு முன் விசுக்ரனின் ஆயுதம் எதுவும் நிற்க முடியவில்லை. ஓர் அம்பின் தாக்குதலில் கொடியவனின் கொடி அறுந்து வீழ்ந்தது. இன்னோர் அம்பு அவனுடைய சாரதிக்கு யமலோக சாரதியாற்று! அடுத்த அம்பு அவனது வில்லின் நாணைத் துண்டித்தது. அவனுடைய வில்லின் தண்டும் பின் வந்த அவளது சரத்தின் தாக்குதலில் சுக்கல் சுக்கலாயிற்று.

இதற்கு மேல் இழக்க அவனிடமிருந்தது உயிர் ஒன்றுதான்!

அவ்வுயிரையும் பறித்தது கண்ணைப் பறிக்கும் காந்தியுடன் ச்யாமளையின் திருக்கரத்திலிருந்து புறப்பட்ட பிரம்மசிரஸ் என்ற அஸ்திரம்.

பிரம்ம கபாலத்தால் ஐயன் அன்பைப் பிச்சை வாங்குவானெனில், அன்னையோ பிரம்ம சிரஸினால் ஆணவத்தின் உயிரை வாங்கிவிட்டாள்!

ஆணவம் அழிந்த பின்னுங்கூடச் சிறிது காலம் பழக்க தோஷத்தால் விஷய ஆசை தலை தூக்குவதுண்டு. ஆணவ விசுக்ரன் வீழ்ந்த பின்னரும் விஷய ஆசையின் வடிவான விஷங்கன் ஆர்த்துப் போர் செய்தான். சிறிது காலந்தான் இந்தக் கொட்டம் நிற்க முடியும்.

யமதண்டம் போன்ற கதாயுதம் கொண்டு விஷங்கன் 'தண்டினி மேல் மோதினான். அவள் தனது உலக்கை ஆயுதத்தை வன்மையாகப் பிரயோகித்தாள். இவர்களது ஆயுதங்கள் சுழன்று சுழன்று உராய்ந்ததில் ஆகாயமே பெரும் கலக்காகக் கலக்கப்பட்டதாம்!

நள்ளிரவு நெருங்கிற்று.

கலப்பையைக் கொண்டு விஷங்கனை நெருக்கி இழுத்தாள் வாராஹி. அடுத்த விநாடி அவளது உலக்கை நேராக அவன் தலையில் பதிந்தது.

வெடித்து விழுந்தது விஷய ஆசை!

*

தம்பியர் இருவரும் வீர ஸ்வர்க்கம் புகுந்ததைக் கேட்டதும் இரு கரமும் ஒடிந்தாற்போலக் கதறினான் பண்டன். ஆணவமும் ஆசையுமே அஞ்ஞானத்தின் இரு கரங்களைப்போல!· பண்டனின் இரு தோள்களிலிருந்து தானே விசுக்ர-விஷங்கர் தோன்றினர்?

குடிலாக்ஷன் பெரும்பாடுபட்டு பண்டனைத் தேற்றினான். கண்ணீர் நின்றது. கோபாக்னி மூண்டது. அவிழ்ந்த சிகையை அழுந்தக் கட்டி எழுந்து நின்றான் தைத்யராஜன். வாளை உதறினான்.

வாள் வீச்சென வாய்ச்சொல்லால் ஆணை யிட்டான்: "என் மக்களையும், மருமக்களையும், தம்பியரை யும் மாயையால் கொன்ற அந்த மதோன்மத்தையின் கழுத்திலே இவ்வாளைப் பாய்ச்சி அவளுடைய குருதியைப் பீய்ச்சியடித்து அதிலேயே என் சோகாக்னியை அணைப்பேன்!"

மீதமிருந்த சகல சேனைகளுடனும் கிளம்பினான் அஸுரேந்திரன். தீய சக்திகளுக்குக் கணக்கே இல்லை. எத்தனையோ வெள்ளம் அவுணர் படைகள் இதுவரையில் அழிந்திருந்த போதிலும் ஈராயிரம் அக்ஷௌஹிணிகள் இப்போது கிலகில த்வனி செய்து தமது மன்னர்பிரானுடன் புறப்பட்டன.

மாவீரரில் எஞ்சி நின்ற ஒருவனேயான சேநாதிபதி 'குடிலாக்ஷன் உடன் வர, அவுணராஜன் ஆபீலம் என்னும் ரதத்தில் வீற்று வீறுடன் புறப்பட்டான். ஆபீலம் என்றால் பயங்கரம், புண் நோவு என்று பொருள். லக்ஷ்மீகரம் எனப் பொருள்படும் அம்பாளின் ஸ்ரீசக்ர ரதத்துக்கு நேரெதிராக பண்டனின் ஆபீல ரதம்!

அவள் ஸிம்ஹாஸநேச்வரி எனில் இவனது ரதத்திலும் ஆயிரம் சிங்கங்களே பூட்டப்பட்டிருந்தன.

அவள் கரத்தில் மதுரமான கரும்பு. இவள் கையிலோ யாதனை (நரக வேதனை) என்று பெயர் கொண்ட போர்வாள்.

மாபெரும் அஸுரப் படை வீரர் ஒருவர் மேலொருவர் மோதி மிதித்துத் தங்களைத் தாங்களே கொன்று கொண்டு ரணபூமி அடைந்தனர்.

போர்த் தொடக்கமாகப் பேரிடியையும் பொடி யாக்குவதாக ஓர் ஒலி எழும்பியது. பண்டனின் ஸிம்ஹ நாதம்தான்!

உலகைப் பிளந்த அவ்வோசையில் கடல்கள் உலர்ந்தன; கதிரவனும் மதியமும் கலங்கியோடின; தாரகைகள் உதிர்ந்தன. அம்பாளின் படை வீட்டைச் சூழ்ந்த அக்னி ப்ராகாரமும் சற்றே பிரகாசம் அடங்கிப் பிறகுதான் ஜ்வாலை வீசிற்று என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

பிராகாரத்தினின்று வெளிப் போந்தாள் நமது ஸுகுமார' ஸுந்தர மஹாமாதா, சீற்றத்தில் ஏற்றம் கொண்ட சண்ட பயங்கரியாக!

# 15

மந்தமாருதமே சண்டமாருதமும் ஆவது போல, பரம லலிதை பராக்ரம சண்டிகையாக ஸ்ரீசக்ர ரதமேறிச் சண்டை புரியக் கிளம்பியபோது சக்தி கணங்கள் நெருக்கியடித்துக் கொண்டு தொடர்ந்தன. அவை சிரம மின்றி வெளிவருவதற்காக, ஏற்கெனவே ஒரு யோஜனை (எட்டு மைல்) அகலமுள்ளதாயிருந்த கோட்டைவாயிலை ஜ்வாலாமாலினி மேலும் விஸ்தாரமாக்க வேண்டியிருந்தது.

ஸ்ரீசக்ர ரத உச்சியிலுள்ள முத்துக் குடைகளின் குச்சங்கள் அழகே அசைந்து, ஒவ்வோர் அசைவிலும் ஒரு சுப சகுனத்தை மலர்த்தின. அவுண ராஜனது ஆபீலச் சகடத்தின் ஒவ்வோர் உருளலும் ஒவ்வோர் அபசகுனத்தைப் பாட்டையாகக் கொண்டு அவன் தலை உருளுவதற்கான களத்துக்கு அழைத்துச் சென்றது.

இதுதான் போரின் பிரதான கட்டம். அஸுர நாயகனுக்கும் அமர நாயகிக்கும் நடக்கும் நேர் யுத்தம். ஆனால் அது எப்படி நடந்தது என்பதே வர்ணனைக்கு அகப்படா வண்ணம் இரு தரப்பினரும் எய்த சரமாரியில்

திக்குத் திசை தெரியாமல் காரிருள் கவ்வி விட்டது. அவுணர் கூட்டம் அழிய அழியத்தான் அம்பு மூட்டம் குறைந்து என்ன நடக்கிறதென்பதைக் காண முடிந்தது.

முக்கியமாகத் தெரிந்தது, அது யுத்த பூமியாக இன்றி ரத்த நதியாகி இருந்தது. தலையறுபட்டுத் தாண்டவமாடும் கபந்தங்கள் நதிக்கரை விருக்ஷங்கள் போல் தோன்றின. ஆற்றிடை மண் திட்டுக்களாகக் குருதிப் பெருக்கில் உயிரிழந்த மஹா கஜங்கள். நீரில் காணும் அல்லிக் கூட்டமாக அறுந்து விழுந்த வெண்குடைகள். நுரையாகக் காம்பிற்று வீழ்ந்த சாமரங்கள். பாசியாக உதிர நதியில் மிதந்தன அஸுரரின் கேச பாசங்கள். முத்துச் சிப்பிகளுக்கும் குறைவில்லையாம், இந்த ரத்தப் பிரவா ஹத்தில் — மரித்த அவுணர்களின் பிதுங்கிய விழிகள்தாம் அச் சிப்பிகள்!

முதல் இரண்டு யாமம் ஸேனைகள் போரிட்ட பின்தான் லலிதை நேரே பண்டனையும் பரிவாரங்களையும் தாக்க ஆரம்பித்தது.

இன்னமுதுக்கு நேர் எதிரே ஆலஹாலம்!

நேர் எதிர்தான் நின்று எதிர்த்தாள் நாயகி. அப்படி எதிர்ப்போரின் சக்தியில் பாதி தனக்கு வந்துவிட வேண்டும் என்பது பண்டன் பெற்றிருந்த வரம். ஆயினும் ஸர்வ சக்தியான பூர்ணை ஆயிற்றே அவள்! அவளை எப்படி பின்னப்படுத்த இயலும்? அனந்தத்தில் பாதி என்றால் அர்த்தமுண்டா? அப்படியே அவளது பாதியாற்றல் வெளிப் போக முடிந்தாலுங்கூட அந்த அபரிமித சக்தியை எவரால் வாங்கிக் கொள்ளவும் தாங்கிக் கொள்ளவும் இயலும்? என்னதான் பயில்வானாயினும் ஒரு யானையில் பாதியை வேண்டுமாயின் தாங்கலாமேயன்றி இமய வெற்பில் பாதியைத் தாங்க முடியுமா? அதி சாதுரியமாக வரம் கேட்டுப் பெற்றிருந்த அசுரேந்திரனை அசட்டு முட்டாளாக்கி எதிரே நின்றாள் பூர்ண அபின்ன சக்தி!

அந்த மஹா மஹா சக்தி முன் எவரது ஆற்றலுமே ஆனையின் முன் கொசு போலத்தான். ஆயினும் அம்பிகை யுத்த லீலா விநோதங்கள் புரிந்து காட்டுவதற்கு எண்ணங் கொண்டாள். அது மட்டுமின்றி அவுணனேயாயினும் பண்டனுக்கிருந்த வீர சாகசங்களை அவனுக்கும் அன்னையாயிருநது உலகறிய வெளிப்படுத்தவும் திருவுளம் பற்றினாள். எனவே நொடியில் முடிக்கக் கூடியவனுடன் நெடு நேரம் அமர் புரிந்தாள்.

மலரம்புடனேயே நாம் காணும் அவளது மலர்க் கரத்தில்தான் இன்று எத்தனை அதிசய யுத்த லாகவம்! ஒரு சரத்தை தநுஸில் கோக்கிறாள் என்றே நினைக்கிறோம். ஆனால் தநுஸிலிருந்தோ பத்து சரங்கள் புறப்படுகின்றன. பத்துதானா? இதோ எதிரியை நோக்கி அந்தரத்தில் விரைவது நூறு சரங்கள் அல்லவா? அந்தக் கணக்கும் தப்பு! அவுணர் கணத்தை நெருங்கும்போது ஆயிரமாக அல்லவா தெரிகிறது அம்புக் கூட்டம்? இல்லை, இந்தக் கணிப்பும் சரியில்லை. ஆயிரமாயிரம் அவுணர்கள் ஒவ்வொருவரும் அங்கமெல்லாம் பொத்திய நூறு நூறு அம்புகளுடன் அல்லவா அலறி விழுகின்றனர்?

பண்டனின் வீரமும் வெடித்து வெளிப்பட்டது.

நரகப் பேரிருளை உண்டாக்கும் அந்ததாமிஸ்ரக் கணையை எய்தான் அஞ்ஞான தமோ உருவன். கதிரவனாய் ஜ்வலிக்கும் மஹாதரணிக் கணையை ப்ரத்யஸ்த்ரமாக (எதிர்க் கணையாக) பிரயோகித்து அதை அழித்தாள் ஞான ஜோதிர்மயி.

பார்வையைப் பறிக்கும் அந்தாஸ்த்ரத்தைக் குருட்டு மோஹக் கொடியவன் ஏவினான். "காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்"ணம்மை சக்ஷுஷ்மதி அஸ்திரத்தால் அதை வீழ்த்தினாள். ('சக்ஷுஸ்' : கண், பார்வை.)

யமாலயம் சேர்ப்பதான அந்தகாஸ்திரத்தை அவுணன் எய்தான். தேவி தொடுத்த மஹாம்ருத்யுஞ்ஜய அஸ்திரம் அதற்கு யமனாயிற்று!

ஞானாம்பிகையின் அஸ்திர ஞானத்தையே அழிக்கக் கருதி, 'ஸர்வாஸ்த்ர ஸ்ம்ருதி நாசம்' என்ற படைக் கலத்தை ஞான சூன்யன் விடுத்தான். அதை 'தாரணை (சித்தத்தை அசையாமல் ஸ்திரப்படுத்துகின்ற) அஸ்திர'த் தால் பொடித்தாள் ஜகதோத்தாரிணி.

பய அஸ்திரத்தை விட்டான் பண்டன். அபய ஸ்வரூபிணி ஐந்திர அஸ்திரத்தால் அதை அழித்தாள். இதிலே அரிய கருத்து உள்ளது. இந்திரனுக்குரிய மந்திரத்தால் சக்தி பெற்றதே ஐந்திராஸ்த்ரம். தற்போது இந்திரன் பண்டனிடம் பயந்து நடுங்கி அம்பாளை அரண் கொண்டிருக்கிறான். அவனைக் கொண்டே அச்சத்தை அவள் அழிக்கிறாள் என்பது தஞ்சம் புகுந்த பஞ்சையரை யும் பலிஷ்டராக்குவதில் அவளது தயாவிலாஸம் எத்தனை விசாலமானது என்பதற்குச் சான்று.

அடுத்து இக்கால biological warfare போல பயங்கர நோய்களைப் பரப்பும் மஹா ரோக அஸ்திரத்தை சக்தி ஸேனை மீது பிரயோகித்தான் நன்மைக்கெல்லாம் நோயாய் வந்த பண்டாஸுரன்.

அஹா, அப்போது அம்பிகை விடுத்த ப்ரத்யஸ்த்ரம்! அது மற்ற நோய்களைத் தீர்ப்பது ஒரு புறமிருக்கட்டும்; தெய்வ பேதம் என்ற பெரிய நோயையும் தீர்க்கும் அமுத ஸஞ்ஜீவினியாக அது தித்திக்கிறது! 'நிஜமான' பாகவதம் என்பது விஷ்ணு பாகவதமா, தேவி பாகவதமா என்று வைஷ்ணவர்களும் சாக்தர்களும் வாதப் போர் செய்து கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். இங்கோ விஷ்ணுவின் நாமங்களால் ஆன கணையாலேயே தேவி மஹாரோக அஸ்திரத்தைத் தவிடு பொடி செய்திருக்கிறாள்!

அவளது ஆயிரம் நாமங்களில் ஒன்று 'ஸர்வ வ்யாதி ப்ரசமநி' என்பது. இன்னொரு திருப்பெயர் அவளை வியாதி மலையைத் தூளாக்கும் வஜ்ராயுதமான 'ரோக பர்வத தம்போளி' என்கிறது. அப்படியிருந்தும் இப்போது அவள் தனது ஸோதரன் திருமாலின் திருப்பெயர்களில் 'நாமத்ரய மஹா மந்த்ரம்' என்று பெயர் கொண்ட மூன்றையே அஸ்திரமாக்கி எய்தாள். நாவிலும், காதிலும், நெஞ்சிலும் தேன் சொரியும் 'அச்யுத', 'அநந்த', 'கோவிந்த' என்ற பவித்ர நாமங்கள்தாம்! இதைப் புராணம் 'மஹாஸ்த்ரம்' என்கிறது.

தேவி இவ்வாயுதம் எய்தவுடன் மாலவன் இம் மூவுருவில் தோன்றினான். ஹுங்காரம் செய்தான். அசுரன் பரப்பிய அனைத்து ரோகங்களும் அற்று நசித்தன!

"இந்த நாமத்ரயத்தை நவில்வோரை நோய்கள் நலிவு செய்யா" என்று அம்பிகை அருள் பூத்தாள்.

ஸமயக் காழ்ப்பின் விந்தையான விபரீத அலங்கோலத்தில் ஒரே அம்பிகையின் பல உருவ பேதங்களிடை விகற்பு கற்பித்து, உயர்வு தாழ்வு கூறுபவர் இருக்கிறார்கள். 'நிஜமான' பராசக்தி ஸௌம்ய ரூபமான நமது லலிதையா, அல்லது கோர காளியா, அல்லது இரு அம்சமும் கலந்த துர்க்கையா என்பதில் பக்தர்கள் பிரிவு பட்டு மோதிக் கொள்வதுண்டு. காளியையும் துர்க்கையின் ஒரு கூறாகவே 'தேவி மாஹாத்மியம்' ஸமரஸப்படுத்தி விடுகிறது. 'லலிதோபாக்யான'மோ நமது லலிதையையே துர்க்கா-காளியுமாக்கி மேலும் ஐக்கிய ரஸத்தைப் பொழிந்து விடுகிறது. இதன் பின் அவளைத் திருமாலின் தசாவதாரங்களுக்கும் காரண சக்தியாகக் காட்டுகிறது.

இவ்வாறு நம்மை ஸமரஸ நோக்குப்படுத்துவதற்காக நாம் முதற்கண் பண்டாஸுரனுக்குத்தான் நன்றி கூற வேண்டும்! அவன்தான் அந்த ஏனைய ஆவிர்பாவங்களில் அழிவு பட்ட ஒவ்வொரு தீயவனையும் இப்போது 'மஹா

அஸுராஸ்திரம்' என்ற படைக்கலத்தின் மூலம் படைத்து ஏவினான். தீயோர் கூட்டத்தைத் தீய்த்தழிக்கவே அம்பாளும் அந்த எல்லா திவ்ய மூர்த்தியரையும் படைக்க வேண்டியதாயிற்று!

மது, கைடபன், மஹிஷாஸுரன், சண்டன், முண்டன், சும்பன், நிசும்பன் முதலியோரை பண்டன் உண்டாக்கி உலாவ விட்டான். 'தேவீ மாஹாத்மிய'த்தின் படி மது-கைடபர்களை மஹா காளியின் லீலையில் மஹா விஷ்ணு மாய்த்தார். மஹிஷாஸுரனை மஹாலக்ஷ்மி சாய்த்தாள். சண்ட-முண்டர்களைச் சாமுண்டி வதம் செய்தாள். சும்ப-நிசும்பரை மஹா ஸரஸ்வதி ஹதம் செய்தாள்*. மஹாலக்ஷ்மியிலேயே ஏனையோரும் அடக்கம் என்றும், அவளே சண்டிகை என்றும் துர்கை என்றும் 'தேவீ மாஹாத்மியம்' கூறும். ஆயினும் அதில் மஹாலக்ஷ்மி சரிதையைத் தனிப்படக் கூறுகையில் அவள் மஹிஷமர்த்தினியாக மட்டுமே வர்ணிக்கப்படுகிறாள்.

நம் உபாகியானத்தில் என்ன காண்கிறோம்?



மது-கைடபர் முதல் சும்ப-நிசும்பர் வரை அனைவரையும் ஸம்ஹரிப்பதற்காக லலிதா தேவி ஒரே ஒரு மூர்த்தியைத்தான் தோற்றுவிக்கிறாள். அது பதினெண் கரங் கொண்ட மஹிஷ மர்த்தினியான துர்கா மஹாலக்ஷ்மிதான். இவளே அத்தனை அஸுரரையும் வென்று கொன்று, சக்தி ரூபங்களிடை நாம் கற்பிக்கும் உயர்வு தாழ்வுகளை உடைத்தெறிந்து விடுகிறாள். லலிதையின் புராணத்தில் துர்கை மஹிமை விரிகிறது.

இதன் பின்னர் நாரணனின் அவதாரங்களுக்கும் காரணமாகக் காட்சி தருகிறாள் நம் காமாக்ஷி.

* 'தேவீ மாஹாத்ம்ய'த்தின் மஹாஸரஸ்வதியும், மஹாலக்ஷ்மியும் பிரம்ம பத்னியான வாணியும், விஷ்ணு பத்னியான ரமையும் அல்லர். இவர்கள் பராசக்தியின் வேறு இரு வடிவமாவர்.

வேதத்தை அபஹரிக்கும் ஸோமுகன் முதலிய அஸுரர்களை பண்டன் உண்டாக்குகிறான். அம்பிகையின் வலக்கைப் பெருவிரல் நகத்தின் நுனியிலிருந்து வெளிப் படுகிறான் மத்ஸ்ய உருக்கொண்ட மாலவன். அவ்வஸுரரை வதைத்து வேதத்தை மீட்டு வருகிறான்.

பண்டன் 'ஸமுத்ர அஸ்திரம்' கொண்டு கடலைப் படைத்து சக்தி ஸேனையை அதில் முழுக்கடிக்கப் பார்க்கிறான். அம்பிகை தனது ஆள்காட்டி விரலின் நக நுனியிலிருந்து ஸோதரனை ஆதி கூர்மமாக அவதரிக்கச் செய்கிறாள். பத்தாயிரம் யோஜனை விசாலமான கூர்மத்தின் ஓட்டில் ஏறிச் சக்தி கணங்கள் காப்புப் பெறுகின்றன. கடலையும் பருகிவிடுகிறான் கூர்மன்.

அநேக ஹிரண்யாக்ஷர்களை ஸ்ருஷ்டிக்கிறான் பண்டன். அவ்வளவு பேரையும் அடிநாசம் செய்கிறான் மஹா வராஹன். திருமால்தான் தங்கையின் அங்கை நடுவிரல் நக நுனியிலிருந்து இப்படி அவதரித்தது!

மஹா கோபத்துடன் பண்டன் புருவத்தை நெரித்தான். அநேக ஹிரண்யகசிபுக்கள் உத்பவித்தனர்.

சக்தி ஸேனைகளின் ஆனந்தம் ப்ரஹ்லாதனாக உருவெடுத்தது. (ப்ரஹ்லாதம் என்றால் செழித்த ஆனந்தம்.) ப்ரஹ்லாதக் குழந்தை நித்யானந்த ஜனனியை சரண் புகுந்தது.

மோதிர விரலை உதறினாள் உதாரி. அதன் நகத்தின் நுனியிலிருந்து பிடரியை உதறிக் கொண்டு குதித்தது நரஸிம்ஹம். நகத்திலிருந்து தோன்றிய நரஹரி தனது நகத்தின் நுனியால் அத்தனை ஹிரண்ய கசிபுக்களையும் பிளந்து தள்ளினான்!

பண்டனின் அடுத்த ஸ்ருஷ்டி, பல மஹாபலிகள். 'என் சுண்டு விரல் பலம் காண்பார்களோ?' என்பது போல லலிதை சிறு விரலின் நகத்திலிருந்து சிற்றுருவ வாமனனை

வருவித்தாள். வாமன பாசத்தில் மஹாபலிகள் கட்டுண்டு செயலற்றுப் போயினர்.

அஸுரனின் ஆக்க ஆற்றலில் அடுத்து வந்தனர் கார்த்தவீர்யார்ஜுனர்கள். வலக்கை விரல்களால் திருமாலின் அவதாரங்களில் ஐந்தை அருளிய அன்னை இடக்கைப் பெருவிரலின் நுனியிலிருந்து ஆறாவதாகப் பரசுராமரைப் படைத்தாள். அவர் தமது பரசு (கோடரி) கொண்டு கார்த்தவீர்யர்களை வெட்டி வீழ்த்தினார்.

ஹுங்காரம் செய்தான் பண்டன். அவ்வுறுமல் ராவணேச்வரனாக உருவம் கொண்டது. அவனுடன் சோதரனாக கும்பகர்ணனும், மகனாக மேகநாதனும் (இந்திரஜித்தும்) தோன்றி சக்தி கணங்களைத் தாக்கலாயினர்.

திரிபுரஸுந்தரியின் இடது கர ஆள்காட்டி விரலின் நுனியிலிருந்து நீலோத்பல காந்தி வீசியது. ஆம், ஐயன் ஸ்ரீராமன் அவதரித்து விட்டான்!

அரக்கனுடன் தம்பியும் தனயனும் தோன்றின ரெனில் அமலனுடன் தம்பி இலக்குவன் ஆவிர்பவித்தான்.

ஜடை முடியும், இடையில் மரவுரியுமாக விளங்கிய வீரராகவன் வில் நாணை டங்காரம் செய்து புறப் பட்டான். ராவணனையும் கும்பகர்ணனையும் சம்ஹாரம் செய்தான்.

இலக்குவன் கணைக்கு இலக்காகி அழிந்தான் மேகநாதன்.

அரக்கரைப் படைத்த பண்டன் குரக்கரைப் படைத்தான். த்விவித அஸ்திரத்தால் பெரும் பலம் கொண்ட அநேக குரங்குகளை ஸ்ருஷ்டித்தான். செம்முகமும், செங்கண்ணும் கொண்ட க்ரூர வானரங்கள் கிறீச்சிட்டபடி சக்தி சமூகத்தைத் தாக்கின.

பராசக்தியின் நடு விரலிலிருந்து பால் நிறமாக வெளி வந்தான் பலராமன். மேனி வெண்மையைத் தூக்கிக் காட்டின, மது பானத்தில் அவனது கண்கள் பெற்ற செம்மையும், அவன் உடுத்தி யிருந்த பட்டின் நீல நிறமும்! பனைக் கொடி தாங்கிய பலபத்ரனின் மாவீரத்தில் பனங் குலையாக த்விவிதர்களின் தலைகள் உருண்டன. (குரங்கு உருக்கொண்ட த்விவிதன் என்ற அசுரன் பலராமனது ஆயுதமாகிய கலப்பையை அபஹரித்து, அதன் விளைவாக அவனால் கொல்லப் பட்டவன்.)

பண்டனின் படைப்பாற்றல் வற்றாத ஊற்றாக இருந்தது. மானுடர் போலவே தோன்றி அரசர் உருவில் வந்து அறத்தைக் குலைத்த அஸுரரான கம்ஸன், சிசுபாலன், பாணன் முதலியவர்கள் பண்டனிடமிருந்து தோற்றம் பெற்றனர்.

வந்தான் வாஸுதேவனும் வரதாயகியின் மோதிர விரல் நுனி வழியாக! அண்ணன் பலராமனான ஸங்கர்ஷணன், மகன் ப்ரத்யும்னன், பேரன் அநிருத்தன் ஆகியோராகத் தன்னையே பிரித்துக் கொண்டு, தானும் வாஸுதேவனாக எஞ்சி நின்றான் மாயக் கண்ணன். வ்யூஹ அவதாரங்கள் எனப்படும் இந் நால்வரும் அரச வேஷ அசுரர்களை அற அற மாய்த்து, அறத்தை நாட்டினர்.

அறத்தை அழித்தே தீர்ப்பது என்ற ஆராச் சினத்துடன் கலி அஸ்திரத்தை பண்டன் எய்தான். வேத தர்ம விரோதிகள் புற்றீசலாகப் புறப்பட்டனர்.

தர்மஸம்வர்த்தினி சளைத்து விடுவாளா என்ன? அவள் சளைக்கவுமில்லை, களைக்கவுமில்லை. இத்தனை அவதாரங்களை நிகழச் செய்து அரக்கர் வரிசைகளைத் துகள் செய்தும் அன்றலர்ந்த தாமரையாய் ஒளி வீசி நின்றாளென்கிறார் புராணகர்த்தா. அவளது கரத் தாமரையின் கடைசி விரலான இடச் சுட்டு விரலிலிருந்து

விறலும், வனப்பும் ஒருங்கே கொண்ட வேத புருஷன் தோன்றினான். புரவி மீதமர்ந்த புரவலன் கல்கி இவனே!

கல்கியின் களி முக மலர்ச்சி கலியைக் கலக்கிடும் அற மறுமலர்ச்சியாயிற்று. தர்ம விரோதியர் தரை மட்டமாயினர்.

எது ஒன்றிலும் சிறப்பான ஞானம் பெற்றவர்களுக்கு அவ்விஷயம் விரல் நுனியில் இருப்பதாக ஆங்கிலத்தில் வசனமுண்டு; at one's fingers' ends என்பார்கள். திருமாலை இப்படித்தான் தேவி தன்னில் கரைத்துக் குடித்துக் கொண்டு விரல் நுனி வழியாக வெளியிட்டிருக்கிறாள்!

அம்பிகை தனது லீலா நாடகத்தில் கல்பம் தோறும் அந்த அசுர, அரக்க, அரச-அசுரர்கள் மறுபடி மறுபடி தோன்ற வேண்டுமென்றும் அப்போதெல்லாம் மீள மீள தசாவதாரங்கள் நிகழ வேண்டுமென்றும் ஸங்கல்பம் கொண்டாள். எனவே, தசாவதார நாயகர்கள் அவளைப் பணிந்து விடை கேட்டபோது, "இவ்வாறே ஒவ்வொரு கல்பத்திலும் தர்மத்தை ரக்ஷிப்பீராக!" என்று ஆசி கூறினாள்.

*

இதுவரை பெரும்பாலும் பண்டன் தாக்குதலுக்கு எதிர்த் தாக்குதலாகவே லலிதையின் போர் விளையாடல் இருந்து விட்டது. இனிதான் எஞ்சியிருந்த பண்டன் படையைத் தானாகத் தாக்கி ஸமூலம் நிர்மூலம் செய்ய அம்பாளுக்கு உளம் பிறந்தது.

இதில் ஹரி, ஹரன் இருவருக்கும் பெருமை செய்ய எண்ணினாள்.

நாராயணாஸ்திரத்தை எய்தாள். அஸுரனின் அத்தனை அக்ஷௌஹிணிப் படைகளும் சாம்பராயின!

சிவன் கண்ணால் மதனன் நீறுபட அச் சாம்பரிலிருந்து பண்டன் தோன்றினான். இப்போது அவன் படை ஹரியின் சக்தியில் நீறு பட்டது!

குடிலாக்ஷன் முதலான நாற்பது ஸேநாதிபதியரே மிஞ்சினர். பரதேவி பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்தாள். ஹரனின் சக்தியில் அவர்கள் அனைவரும் ஸம்ஹார மாயினர்.

பண்டன் மாத்திரமே தனித்து நின்றான்.

## 16

ஏவரும் துணையின்றி அம்பிகையின் எதிரே நின்றான் பண்டன்.

எவளொருத்தியே எக்காலும் ஓரே துணையோ அவளுக்கு எதிரியாக நின்றான்.

அந்த அசுரக் குழந்தையின் தோள்வலி முழுதும் வெளியாகி அவனுக்கு வீரப் புகழ் சேர அம்பிகை முழு வாய்ப்பும் கொடுத்தாகி விட்டது. இப்போது அவன் தோள் வலித்து நிற்கிறான். பக்க பலம் தர அத்தனை ஆயிரம் வெள்ள அஸுரரில் ஒருவருமில்லை. மக்கள், சோதரர், நண்பர், தாஸர் அனைவரையுமிழந்த பிரிவுத்துயர் அந்த அஸுரப் பிள்ளையை அப்படியே பிழிந்தெடுத்து விடாதா? அதை அம்மா பார்த்திருப்பாளா?

எய்தாள் ஓர் இறுதிக் கணையை.

ஆயிரம் கதிரவர்களைச் சாறு பிழிந்து அம்பாக்கி அனுப்பினாளோ அம்பாள் எனும்படியாகத் தகதகா மயமாக விரைந்தது கணை!

சண்ட பராக்ரமன் வீழ்ந்தான், சண்டிகா பரமேச்வரியின் அஸ்திரத்தில்! அக்ரமம் செய்த அஸுரனை இவ்விடத்தில் "சண்ட பராக்ரமன்" என்றே லலிதோபாக்யானம் உயர்த்திக் கூறுகிறது.

பண்டனை லலிதாம்பிகை வதம் செய்தாளென்று அது கூறவில்லை. அவனை "மூச்சிழந்தவனாகச் செய்தாள்" (கதாஸும் அகரோத்) என்றே கூறுகிறது. மூச்சு உடலில் உயிரைப் பிணைப்பது மட்டுமேயன்றி, அதுவே உயிரல்ல. மூச்சை அடக்கி நிறுத்தும் போதுதான் உயிர் பேருயிருடன் ஒடுங்கி நிற்பதே! பேருயிரான தேவி அஸுரனின் மூச்சைப் போக்கி, உடலிலிருந்து அவன் உயிரை நீக்கித் தன்னிலேயே அணைந்து கொண்டாள் என்பதைத்தான் புராணம் இங்கு சுட்டுகிறதோ என்னவோ? தனித்து நின்ற அவனுக்கும் துணையானாள் தாய்; வலித்து நின்றவனுக்கு அஞ்சனம் ஆனாள்; பிரிவுத் துயர் காணாமல் என்றும் பிரியா ஆனந்தத்தைத் தன்னில் அருளி விட்டாள்!

"வஞ்சகர் உயிர் அவி உண்ணும் உயர் சண்டிகாளி" என்பது அபிராமி பட்டர் வாக்கு. 'உண்ணும்' என்பதால் வஞ்ச அசுரர் உயிரையும் புனித வேள்வி ஆஹுதியான அவியாகக் கருதி அவள் தன்னுள்ளேயே கொண்டுவிடும் அன்பைத்தான் சொல்கிறார்! அந்த அன்புச் சிறப்பாலேயே அவள் 'உயர்' சண்டியாகிறாள்!

முதலில் தேவர்கள் தங்கள் உடலைச் சிதைத்து அவி சொரிந்த போது, தான் சிதக்னியில் உதித்தாள்; முடிவில் பண்டன் உடல் சிதையும்போது அவனது உயிரைத் தனக்குள் அவி கொள்கிறாள்!

இங்கே அன்னை மறுபடியும் தனது பதிவிரதா தர்மத்தை நிலைநாட்டி அப்பனுக்குப் பெருமை சேர்க்கிறாள். அவள் எய்த அக்கணை காமேச்வராஸ்திரம் என்பதேயாகும். லலிதையாக அவள் உத்பவித்ததே பண்டனை ஸம்ஹரிக்கத்தான். அந்தப் பெரும் செயலைப்

புரிந்து, தான் வெற்றித் திருவோடு விளங்குவதற்குத் தன்னுடைய பதியே துணை நின்றதாகக் காட்ட எண்ணியே கற்பரசி காமேச்வரன் பெயரிலான கணையை எய்திருக்கிறாள்! அவன் கண் பார்வை பட்டுச் சாம்பரில் உற்பவித்தவனை அவனது கணை கொண்டே முடிப்பது தானே பொருத்தம்?

பேரொளியாகச் சென்று பண்டன் உடலை அழித்த அஸ்திரத்திலிருந்து ஒரு ஜ்வாலை கிளம்பி பண்ட பட்டணமாகிய சூன்யக நகருள் புகுந்து அதை மெய்யாலுமே சூன்யமாக்கி விட்டது! அல்லது பூர்ண அம்பிகையுள் புகுவித்து விட்டது!

*

பண்டன் ஸகல பரிவாரத்துடனும் முடிந்து போனதில் திரிலோகமும் ஆனந்தத் தாண்டவம் செய்தது. "மெய்தானா? பண்டனின் பிடிப்பிலிருந்து, பீடிப்பிலிருந்து நாம் விடுபட்டது மெய்தானா? என்ன ஆச்சரியம் அம்பிகை செய்து விட்டாள்!" என்று எண்ணி எண்ணி சராசரம் புல்லரித்தது.

வானவர் பெற்ற மகிழ்ச்சி வானினும் பெரிதாக இருந்தது.

சக்தி கணங்கள் விஜயலக்ஷ்மியுடன் விளங்கும் 'யஜமானி அம்மா'ளைப் போற்றி மத்தள பேரிகை முழக்கின.

கோப வடிவாய் வந்த பண்டனை உத்தேசித்தே உக்ர கோபத்துடன் யுத்தம் செய்த தேவி, அன்று கோபரூபன் வீழ்ச்சி கண்ட பின் எத்தனை குளிர்ச்சியாக விளங்கியிருப்பாளோ? அக் குளுமை தாங்கொணாததாகி விடக்கூடாதே என்பதால் வெற்றித் திரு அவளைச் சூழ்ந்து ஜ்வலித்தது. அவி சொரிந்து அக்னியைத் தழைக்கச் செய்வதுபோல், அந்த ஜயஸ்ரீயை ஸப்த ரிஷியர் வேத மந்திரங்களால் கொழுந்து விட்டோங்கச் செய்தனர்.

மஹாமாதா, தன் மகிமையைக் குறைத்துப் பதிக்குப் பெருமை சேர்த்தவள், இப்போது வஸிஷ்டாதியர் தன்னைத் துதிக்கையில் மேலும் எளியளாகி வெட்கத்துடன் தலை குனிந்து கொண்டாளாம்!

போற்றுதலிலிருந்து விடுவித்துக் கொள்ள விரும்பியவள்போல, பாசறைக்குத் திரும்பலானாள் பராசக்தி.

நான்கு நாள் யுத்தம் முடிந்ததில் மகிழ்ந்த ஸம்பத் கரியும் அச்வாரூடையும் 'கடையைக் கட்டுவது' போல முன்னே தங்களது யானை, குதிரைப் படைகளோடு செல்ல, அன்னையின் ஆருயிர் மந்திரிணியும் தண்ட நாதையும் அருஞ்செயல் முடித்து அவளது இருபுறமும் தங்களது கிதி, கிரி சக்ரங்களில் போக, வெற்றிப் பவனியாக சக்ரராஜ ரதத்தில் அன்னை சென்று கூடாரத்தில் பிர வேசித்தாள்.

கதிரவனும் மலை வாயில் பிரவேசித்தான்.

முகாமுக்குத் திரும்பியபின் அன்னை செய்த காரியம் பாணத் தாக்குதலால் நொந்திருந்த சக்தி சேனைக்கு அமிருதத்தைக் குழைத்துப் பூசியதே. எந்த அமிருதம் என்றால், தேவாமிருதத்துக்கும் மேலான தன்னுடைய கடாக்ஷ அமிருதத்தைத்தான்!

பிரம்மாதி தேவர்களும், அசுரரிலுங்கூட அன்பைப் புரிந்து கொண்ட ப்ரஹ்லாதன் போன்றோரும், மானுடரிலும் விண்ணகம் எய்தும் வித்தகம் படைத்த மஹான்களும் அம்பிகையின் முன் ஒன்றுகூடித் தோத்திரம் செய்தனர்.

நமோ நமஸ்தே ஜகதேகநாதே
நமோ நம: ஸ்ரீத்ரிபுராபிதாநே |
நமோ நமோ பண்டமஹாஸுரக்நே
நமோஸ்து காமேச்வரி வாமகேசி ||

*"உலகின் ஓரே நாயகியே நமோ நம! ஸ்ரீதிரிபுரை எனத் திருநாமம் கொண்டவளே, போற்றியோ போற்றி! பேரசுரன் பண்டனை பேதித்தவளே, வாழியோ வாழி! அழகிய குழலீ, காமேச்வரீ, நினக்கே ஆகட்டும் எங்கள் நமஸ்காரம்!"*

சிந்தாமணே சிந்தித தானதக்ஷே
(அ)சிந்த்யே சிதாகார தரங்கமாலே |
சித்ராம்பரே சித்ர ஜகத் ப்ரஸூதே
சித்ராந்த நித்யே ஸுகதே நமஸ்தே ||

*"எண்ணியதளிப்பதில் வல்லுநையான சிந்தா மணியே! சிந்தைக்கு அப்பாலே! சித்தாம் உயிர்-உணர்வு-அறிவு வெள்ளத்தின் அலை மாலையே! சித்ர வண்ண ஆடை அலங்காரியே! விசித்ர உலகை ஈன்றவளே! சித்ராவை இறுதியாகக் கொண்ட நித்யா தேவிகள்* வடிவானவளே! நித்யானந்தம் நல்குபவளே! நினக்கு நமஸ்காரம்!"*

இப்படி இருபதுக்கு மேற்பட்ட ச்லோகங்களை அர்ச்சித்து ஜயலலிதையை வாழ்த்தி வணங்கினர் வானவர்.

அதிலே ஓரிடத்திலே *"முத்ரேச்வரீ–சர்ச்சித–ராஜ தந்த்ரே!"* என்பதாக அம்பிகையை அழைக்கிறார்கள். முத்ரேச்வரியாகிய மந்திரிணியுடன் ஆலோசனை கலந்தே அம்பிகை அகில உலக அரசு ஓச்சுகிறாள் என இந்நாமம் காட்டுகிறது. அரசிக்கும் அமைச்சிக்கும் — காமாக்ஷிக்கும் மீநாக்ஷிக்கும் — உள்ள ஸைமத்வத்தைக் காட்டும் நாமம்.

வராஹமுகியாம் தண்டநாதைக்கும் இப்படியே லலிதையுடன் ஸாம்யம் தோன்ற, *"க்ரோடாநநே!"* என்று அடுத்த ச்லோகத்தில் லலிதையையே விளிக்கிறார்கள். வராஹ முகத்தினள் எனப் பொருள்.

* நித்யா தேவிகளில் பதினைந்தாமவள் சித்ரா என்பது நினைவிருக்கலாம்.

கரோடானனை'யைச் சுய அநுபவத்தில் பிறந்த சொந்த நேசம் தோன்ற "க்ரோடீக்ருதாசேஷ (அ)பயே!" என்று அழைக்கிறார்கள். அச்சமுற்ற அனைவரையும் மிச்சமறச் சேர்த்து ஆரத் தழுவும் அபய ஸ்வரூபிணியாம் அவள்! இங்கு 'க்ரோடீ' என்பது ஆரத் தழுவுவது எனப் பொருள்படும்.

"காளியுமாய் வடிவுதாங்கும் கோமளக் கொழுந்தே!" — கோமளாங்கே, கோபேஷு காளீதநும் ஆததாகே! — என்பது துதியில் வரும் ஒரு அழகான விளி. இன்னொன்று அவளை பிரம்மானந்த அமுதப் பெருக்கில் விளையாடும் அன்னப்பேட்டு அரசியான "ப்ரஹ்மாம்ருத —ஸ்ரோதஸி ராஜஹம்ஸி"யாகச் சித்தரிக்கிறது.

வாய் கொள்ளாது வாழ்த்திக் கொண்டே போகிறார்கள்.

"தேவ குரவராகவும், ஸித்த குரவராகவும், மானுட குரவராகவும் உருவம் கொள்பவளே! தேவாதிதேவ மஹா தேவன் மணாட்டியே! வணங்கினோம்!

"உன்னுடைய திருவருளமுதால் நனைக்கப்பட்டுப் புதுத் தளிர்ப்புப் பெற்றோம்; புவனம் யாவும் புது வாழ்வு பெற்றன. ஆனால் இன்னமும் எங்களுக்கு, உலகுகளுக்கு முழு விமோசனம் கிட்டவில்லையே, தாயே!

"காமனை எரித்த கண்ணுதற் கடவுள் இங்கே காமேச்வரனாக நின்றாலும், அங்கே இமயத்திலே மோனத் தபஸ்வியாகவே இருக்கிறான். இங்கே காமேச்வரியாக உள்ள நீயே அங்கே அந்தத் தவசி உன்னை மணக்க வேண்டுமென்ற தவிப்போடு ஹிமவான் குமாரி பார்வதியாகத் தவமிருக்கிறாய். பரமேச்வர ரூபத்தில் அங்கே உள்ளவன் அவனுக்கு நிகரான ஒரு புதல்வனை ஈந்து அவனைப் போர் தொடுக்க அனுப்பினாலன்றி அந்த உருவனிடமிருந்து வரம் பெற்ற தாரகாஸுரன் அழிய மாட்டான். பண்டனின் ஆதிக்கத்தில் சற்று அடங்கியிருந்த தாரகன், இப்போது

சேர்த்து வைத்து துராக்ரஹம் செய்வான். அவனழியாமல் உலகுக்கு விமோசனம் ஏது?

"பரமேச்வரன் பார்வதியிடம் ப்ரேமை கொண்டு, தன்னை நிகர்த்த தனயனை ஈந்தாலே தாரகனுக்கு அழிவு என்பதால்தான் மன்மதனை ஈசனிடம் அனுப்பினோம். ஆனால் அவனை ஈசன் சாம்பராக்கி விட்டான். சாம்பரில் பிறந்த பண்டன் பரமனின் காமேச்வர ரூபத்தை உன்னோடு கூட்டி வைத்து ஸாம்பனாக்கி விட்டாலும், அம்மா, நீயே அங்கே கைலாஸநாதனாக உள்ள அவனுக்காகப் பார்வதி உருவில் உருகி ஏங்குகிறாய். நாங்களும் பூர்ண விமோசனம் கிட்டாமல் ஏங்குகிறோம். எல்லாவற்றுக்கும் மேலாக நாதனை இழந்த இந்த ரதி ஏங்குவதைப் பார்!"

—இப்படி தேவர்கள் நன்றியறிதலுடனேயே அம்பாளிடம் குறையும் இரந்தனர்.

வெற்றி மகிழ்ச்சியிடையே பரம சோக சித்திரத்தை விரிக்கிறது புராணம். அழகின் எல்லையான ரதி அழுகையின் எல்லையாகி, அழுக்குற்ற, அணிகளற்ற உடலோடு அம்பாளின் அடிமலரில் விழுந்தாள். தலைவிரிகோலமான அவளது கூந்தல் தலைவியின் பாதச் செந்தளிரில் புரண்டது.

அக் குழந்தையைக் கண்ட மாத்திரத்தில் மாதாவின் மாகருணை புரண்டு எழுந்தது.

கண்ணால் காமனைக் காய்ந்த ஈசனின் மறுவடிவான காமேசனைத் தன் கடைக் கண்ணால் நோக்கினாள். முன்பு அவனை நோக்கி அவள் மலரச் சிரித்தபோது மஹாகணபதி தோன்றினான். இன்று உளமெலாம் அநுதாபமாக அவள் அவனைப் பார்த்தவுடன்?

என்ன விந்தை! அன்று அவன் எரித்த அந்தக் காமனே இன்று காமாக்ஷியின் இந்தக் கடாக்ஷத்திலிருந்து மீண்டும் பிறந்து விட்டான்!

அவளுடைய கற்பைப் பாருங்கள்: தன் கடாக்ஷம் பதியின் பால் படிந்து அதிலிருந்தே காமன் புத்துயிர் பெற்றதாகக் காட்டுகிறாள். இல்லாவிடில் பதி அழித்த ஒருவனைப் பத்தினி படைத்ததாக அல்லவா ஆகிவிடும்?

சுபத்தை மூடிய சோகத்திரை விலக, சுபம் முன்னிலும் சோபை பெற்றது. முன்னிலும் காந்தி பெற்ற உருவோடு உதித்து விட்டான் மன்மதன்!

மகிழ்ச்சி கடலாடினாள் ரதி.

மஹாராஜ்ஞி மந்தஹாஸத்துடன் மந்திரிணியை நோக்கிச் சொன்னாள்: "ச்யாமளே! ரதிக்கு மங்கள ஸ்நானம் செய்வித்து, ஆடையாபரணம் அணிவித்து அழைத்து வா!"

கதாநாயகியாகத் தான் நடுவிடம் பற்றி வெற்றிப் பெருமை காட்ட வேண்டிய கட்டத்தில் காமனுக்கும் ரதிக்கும் இடம் ஒழித்துக்கொடுத்துக் கதாநாயகர்களாக்கு கிறாள், அன்னை! தியாகராஜனின் ஸதியான தியாக ராணிதான்!

அவள் ஆணைப்படியே மந்திரிணி ரதியை நீராட்டி அலங்கரித்து அழைத்து வர, அம்பிகை ப்ரம்ம-வஸிஷ்டாதியரைப் பார்க்கிறாள்.

அவர்கள் வேத விதிப்படி மீண்டும் மன்மதனுக்கும் ரதிக்கும் திருமணம் நடத்துகின்றனர்.

புதுமணத் தம்பதியர் நாயகியின் நறுமணப் பாதத்தில் நமஸ்கரித்தெழுந்தனர். "அம்மா! ஈசனின் பார்வையில் பாழ்பட்ட என்னை வாழ்வித்த பார்வையின ளான அம்மா! இவ்வுடல் உன்னால் ஆனது. நான் உன்

மகன். உன் அடிமை. எனக்கு உன் தொண்டிலே ஏதேனும் பங்கு தா!" என்று வேண்டினான் மன்மதன்.

அம்மா அவனுக்குத் தந்த தொண்டு அவன் முன் போலவே உலகெங்கிலும் காமத்தை உண்டாக்கிக் கொண்டிருக்க வேண்டுமென்பதுதான்!

வெயில் இருந்தால்தானே நிழலின் அருமை தெரியும்? அவளது அத்வைத ஆத்ம சாந்தியின் அருமை நிழல் தெரியவே த்வைதமான அசாந்த ஸம்ஸார வெயில் அடிக்கத்தான் வேண்டும். அவளது ஞானத்தின் பெருமை தெரியவே மாயை கூத்தாட வேண்டும். மோக்ஷத்தின் மஹிமைக்காகவே மோஹமும் செழிக்க வேண்டும். எண்ணற்ற கர்ம வாஸனை கொண்டோர் சிறிது சிறிதாகப் பண்படவே காமாதிகளும் இருக்கத்தான் வேண்டும். லீலானந்தத்துக்காக அவள் கோடாநுகோடி ஜீவர்களாக வேஷம் போட்டு நடிப்பதில், காமாதிகளான உக்ர சக்திகள் இருந்தும் அவற்றுக்கு ஆட்படாத நிலை எய்திய சில அபூர்வப் பிறவிகளாகத் தோன்றும்போதுதான் தனது தூய்மையிலேயே ஒரு தனிச் சுவை காண்பாள்!

அவள் ஸ்ரீமாதா என அருட்தாயாய்ப் புகழ் கொள்ள வேண்டுமெனில், காமனின் பணி தொடர்ந்து நடந்து, குழந்தைக் குலம் தோன்றிக் கொண்டே இருக்க வேண்டும்தானே?

ஆகவே, மன்மதனுக்கு அவனுடைய பழைய தொழிலையே மனமார அளித்தாள்.

எத்தொழிலையும் அதற்கெனத் தனி அதிகாரியான தன்னுடைய ஒரு கருவி மூலந்தான் நிறைவேற்றிக் கொள்ள வேண்டுமென்ற கட்டுப்பாடு அம்பாளுக்கு இல்லை. அவளே நேராக ஜீவப் படைப்புக்கான காமத்தை உண்டாக்க முடியுமென்பதைக் காமன் அழிவு பட்டிருந்த போது பண்ட புத்திரர் முதலானோர் பிறந்ததிலிருந்து காட்டி விட்டாள். எனினும் ஒரு கருவி மூலமே

விளையாடும் தன் 'மாமூலை' ஏனைய ஜீவராசிகளின் விஷயத்தில் கைக் கொண்டு, காமனில்லாத காலத்தில் பிரஜா உற்பத்தியே இன்றி உலக வாழ்வு ஸ்தம்பிக்கச் செய்திருந்தாள்.

மக்கட் செல்வமில்லா மானுட வாழ்வு வறண்ட பாலையே அல்லவா? இப்படி உயிரினத்தை வாட்டிய தற்குக் கழுவாய் போலத்தான் மஹாதேவன் மனத்தையும் பாலையாக்கி, பார்வதியான தன்னையே விரஹத்தில் தவிக்கவும் செய்தாள். கருவி காமன் மூலமே ஸாக்ஷாத் மஹாபரமேச்வரனுக்கும் தற்போது ஆசை பிறப்பதாக லீலை காட்டவும் உளம் கொண்டாள்!

தன் தொழிலைத் தேவ நிமித்தமாக ஆற்றிச் சாம்ப ரான காமன் மீண்டும் அதை மேற்கொள்ளத் தயங்கப் போகிறானே என்று நினைத்து அவனுக்குத் தைரியமூட்டிச் சொன்னாள்: "குழந்தாய்! பயமில்லாமல் பணியை ஏற்று ஆற்றுவாய்! இனியொரு முறை உன்னை எரிக்க ஈசனாலும் முடியாது! உன் பாணப் பிரயோகம் இனி அவரிடமும் தோல்வியுறாது. இமயத்தில் சிவனார் தவமிருக்கும் ஸ்தாணு ஆசிரமம் சென்று மீண்டும் அம்பு போடு. அவரும் அதற்கு ஆட்பட்டு, உமையிடம் மையலுறுவார். மணப்பார். எந்நாளும் அவளைப் பிரியலாகாது என்ற ப்ரேமையில் அவளைத் தன் உடலிலேயே பாதியாக்கிக் கொண்டு விடுவார். சென்று வா, வென்று வா!" என்று அனுப்பினாள்.

பீடுடன் புறப்பட்டான் ரதியுடன் மதனன், மந்த மாருதத் தேரேறி! தோழன் வஸந்தனும், படைத் தலைவன் சந்திரனும், நாயக நாயகியரைச் சேர்த்து வைக்கும் 'பீடமர்தன'னான ராகனும் அவனைப் புடை சூழ்ந்தனர். இவ் விந்தைப் போர்ப் படைக்கு 'மார்ச்' பாட வந்தது மதுரக் குயில்!

ஸ்தாணு ஆச்ரமம் அடைந்தது மதனன் ஸேனை.

ஸ்தாணு என்ற பெயருக்கேற்பப் பட்ட கட்டையாய், தக்ஷிணாமூர்த்தியாய் அமர்ந்திருந்தான் பரமேச்வரன்.

"அம்மாவின் வாக்குப் பொய்க்குமா? பட்ட கட்டையும் துளிர்க்கும்!" என்ற உறுதியோடு 'ஜைத்ரம்' (வெற்றி கொள்வது) எனும் தன் வில்லை வளைத்தான் காமன்.

வாக்குப் பொய்க்கவில்லை. கரும்பு வில்லிலிருந்து புறப்பட்ட அரும்பு அம்பு மஹாதேவனின் இரும்பு மனத்தைத் துளைத்தது.

அதிகம் சொல்வானேன்? தக்ஷிணாமூர்த்தி பார்வதி பதியானான். பார்வதியை அவன் பாராதபோது எந்த நேத்ர ஜ்வாலையால் மாரவேள் மரித்தானோ, அதே நேத்திரத்தின் பொறிகளிலிருந்து அவன் பார்வதிநாதனான பின்னர் குமாரவேள் உதித்தான். ஸூர்யோதயத்தில் தாரகை மங்குவதே போல, கந்தனின் வீர தேஜஸில் தாரகாஸுரன் மங்கி, மட்கி, மடிந்து போனான்.

தேவ காரியத்தைச் செவ்வனே முடித்த காமன் நன்றியுடன் காமேச்வரியிடம் திரும்பி வந்து அவளடியில் தங்கினான்.

அம்பாளின் பதிபக்தி மீண்டும் மலர்ந்தது. பதி பஸ்மமாக்கியவனுக்கு மறுபடி தன்னால் உருவம் ஏற்படுவது முறையல்ல என்று கருதினாள். எனவே மதனன் ரதிக்கு மட்டுமே உருவுடன் தெரிவானென்றும் இதரருக்குக் கட்புலனாகா 'அனங்கன்' ஆவானென்றும் ஆணையிட்டாள்.

✱

தாரகன் மறைவில் மூவுலகும் விமோசனம் பெற்றது.

இந்திரன் மீளவும் பொன்னாட்டரசு பெற்றான்.

இந்திரன் என்ன? அன்னையின் அடியாரை அடி பணியும் மாலுடரே வானக வாழ்வு, ஆகாய கங்கை நீராட்டு, கற்பகச் சோலைக் களியாடல் முதலியன பெற்று வஜ்ராயுதனான இந்திரனே ஆவர்; வெள்ளை யானைமேல் வீற்று, பரிவாரத்தினர் பல்லியம் பாடப் பவனி வருவர் என்பாரே அபிராமி பட்டர்!

"............ இமையோர் எவரும்
பரவும் பதமும் அயிராவதமும் பகீரதியும்
உரவும் குலிசமும் கற்பகக் காவும் உடையவரே"

".... தொழும்அடி யாரைத் தொழுமவர்க்குப்
பல்லியம் ஆர்த்தெழு வெண்பகடு ஊரும் பதந்தருமே!"

'ராஜ்யதாயினி', 'ஸாம்ராஜ்யதாயினி' என்று ஸஹஸ்ரநாமம் பெயர் சூட்டும் ராஜேச்வரி இந்திர பதவிக்கும் மேலான பிரேமானந்த, பிரம்மானந்தப் பேரரசுகளும் வழங்குவாள்!

தேவர்கள் வானகத்தில் அரசு புரியப் புறப்படு முன், "இவளே கடவுளர் யாவர்க்கு மேலை இறைவி" என்று உளமார உணர்ந்து அவளை அகிலாண்ட சராசர சக்ரவர்த்தினியாக ஸ்தாபித்தனர்.

ஸ்ரீபுர நாயகியாக அம்பிகை ஆனது இப்போது தான்.

*

லலிதை தோன்றியவுடனே அவளுக்காக அமரர் ஒரு ராஜதானி அமைத்துத் தந்தாலும், அது தாற்காலிக மானதுதான். அப்போதே அவளை மஹாராஜ்ஞியாக, சக்ரவர்த்தினியாகச் சொன்னாலும், தத்வார்த்தத்தில அது மெய்யே ஆயினும், ஸ்தூலத்தில் பண்டாஸுர-தாரகாஸுரர் திரைலோக்ய அதிபத்தியம் பெற்றிருந்த

வரை அவள் சராசரப் பேரரசி அல்லதானே? இப்போது பண்ட, தாரகர் அழிவுக்குப் பின்தான் அவள் மெய்யாலுமே 'ராஜராஜேச்வரீ' என்ற பெயருக்கு முற்றிலும் உரியவளாகி யிருப்பது. ஸகல உலகங்களும் அவள் ஆதிக்கத்தில் உள்ளடங்குவதாக, இப்போதே அவளுக்கென நிரந்தரமான ஸ்ரீபுரம் அல்லது ஸ்ரீநகரம் என்ற உண்மையான தலைநகரம் உருவாக்கப்பட்டது.

முன்பு (ஆறாவது அத்தியாயத்தில்) நாரதர் கூறியது போல, தேவ இனங்கள் தங்களுக்குரிய உலகுகளை விட்டு அம்பாளின் ராஜதானிக்கு வருவது என்றில்லாமல், அவர் களது உலகுகளுமே உள்ளடங்குமாறு அகில ப்ரபஞ்சத்தை யும் தழுவுவதாக இப்போது ஸ்ரீபுரம் உருவாக்கப்பட்டது.

ப்ரம்ம, விஷ்ணு, ருத்ரர்களின் ஆணையின் மீது தேவச் சிற்பி விச்வகர்மாவும், அஸுரச் சிற்பி மயனும் ஒன்றுகூடி ஸ்ரீபுரத்தை நிரமாணித்தனர். தேன் மனத்தாள் திருப்பணியில் தேவாஸுரர் கூடிய ஒற்றுமை!

ஸ்ரீசக்ரம் என்ற யந்திரம் லலிதாம்பிகைக்கு உரியது என யாவரும் அறிவர். அவளது சக்ரராஜ ரதம் இந்த யந்த்ர வடிவில் ஆனதுதான். ஸ்ரீபுரமும் ஸ்ரீசக்ரத்தின் விச்வரூபம்தான். ஸ்ரீசக்ரத்தின் விரிவே ஸ்ரீபுர மஹா ஸாம்ராஜ்யம் என்பதைவிட, ஸ்ரீபுரத்தின் குறள் வடிவே ஸ்ரீசக்ர யந்த்ரம் என்பதே பொருத்தம்.

ஒன்றினுள் ஒன்றாக ஒன்பது சுற்றுக்குள், நாற்பத்து மூன்றாக வெட்டும் கோணங்களுள் விளங்கும் ஸ்ரீசக்ர வாஸினியைத்தான் "ஒளிநின்ற கோணங்கள் ஒன்பது மேவி உறைபவளே!" என்பார் அபிராமி பட்டர்.

*

ஸ்ரீபுரத்தை விரிவாய் வர்ணிக்கும் புராணம், இதனைச் சொல்லிக் கேட்பவர் மட்டுமின்றி, புத்தகத்தில் எழுதி வைப்போரும் உத்தம கதி பெறுவர் ("யே புஸ்தகே

தாரயந்தி தே யாந்தி பரமாம் கதிம்") என்கிறது. எனவே வெகு சுருக்கமாகவேனும் மங்கை நல்லாளின் மாநில வர்ணனையை இக் குறு நூல் தாங்கி வரட்டும்!

ஒன்பது மாமலைகளின் சிகரங்கள், ஏழு கடல்களின் நடுத் தீவுகள் ஆகிய ஒவ்வொன்றிலும் ஒன்றாக மொத்தம் பதினாறு ஸ்ரீபுரங்கள் அமைக்கப்பட்டன. இவற்றுள் மேரு சிகரத்திலும், அம்ருத ஸாகர மத்தியிலும் உள்ளவை விசேஷம் வாய்ந்தவை. மேரு சிகர ஸ்ரீபுரத்தையே நம் புராணம் வர்ணிக்கிறது.

ஒரு ரத்தினத்தை வீட்டின் உள்ளறையில் பேடகத்தில் காப்பது போல, மூவுலகைக் காக்கும் காமேச்வரியை அடுக்கடுக்கான கோட்டைகளுக்கு உள்ளே வைத்துக் காக்கிறது ஸ்ரீபுரம். அங்கே ஒவ்வொன்றுக்கும் உணர்வு ரீதியிலும், மந்திர ரீதியிலும், தத்வ ரீதியிலும் பொருளுண்டு. ஆயினும் நாம் ஸ்தூல ரீதியில் மட்டுமே பார்ப்போம்.

இரும்புக் கோட்டையில் தொடங்கி, வெண்கலம், தாம்ரம், ஈயம், பித்தளை, பஞ்சலோஹம், வெள்ளி, பொன் ஒவ்வொன்றாலுமான கோட்டைகள் ஸ்ரீபுரத்தின் வெளியே அரண் செய்கின்றன. இக் கோட்டைகள் ஒவ்வொன்றையும் அடுத்து முறையே பலவித மரங்களும் அடங்கிய நானா வ்ருக்ஷ உத்யானம், கல்பகக் காடு, ஸந்தான மரக்காடு, ஹரிசந்தன வனம், மந்தார வனம், பாரிஜாத வனம், கதம்ப வனம் முதலிய காடுகள்.

உலோஹக் கோட்டைகளுக்குப் பிறகு புஷ்பராகம், பத்மராகம், கோமேதகம், வைரம், வைடூர்யம், நீலம், முத்து, மரகதம், பவளம், மாணிக்கம் ஆகிய ரத்னங்கள் ஒவ்வொன்றாலுமான ஒவ்வொரு கோட்டை. முடிவாக எல்லா மணிகளும் இழைத்த நானா ரத்னக் கோட்டை.

இம்மணிக் கோட்டைகளின் இடைப் பகுதிகளி லேயே ஸித்தர், சாரணர், பைரவர், கந்தர்வர், தேவதைகள்,

யோகினிகள் ஆகியோர் வஸிப்பது. இந்திர லோகம், யமலோகம் முதலியனவும் ப்ரம்ம-விஷ்ணு-ருத்ர லோகங்களுங்கூட இவற்றிடை இருப்பனவே!

ரத்னக் கோட்டைகளுக்கு அப்புறம் மனோமயக் கோட்டை, புத்திமயக் கோட்டை., அஹங்கார (தனி ஜீவ உணர்வு) மயக் கோட்டை, ஸூரிய ஒளிக் கோட்டை, நிலவொளிக் கோட்டை, ச்ருங்காரக் கோட்டை ஆகியன.

இதன் பிறகே ஸ்ரீசக்ரத்தின் நவாவரண (ஒன்பது சுற்று) அமைப்பு. இது தாமரைக்காடு மண்டிய பகுதியாத லால் 'மஹாபத்மாடவி' எனப்படும்.

தேவியின் அரண்மனைக்கு 'சிந்தாமணி க்ருஹம்' எனப் பெயர்.

பூபுரம் என்னும் முதல் ஆவரணத்துக்கு (சுற்றுக்கு) 'த்ரைலோக்ய மோஹனம்' எனப் பெயர். அது ஒன்றுள் ஒன்றாய் மூன்று சதுர ரேகைகள் அடங்கியது. முதல் ரேகையில் பத்து ஸித்தி தேவதைகளும், இரண்டாவதில் அஷ்ட மாதாக்களும், மூன்றாவதில் முத்ரா சக்தியர் பதின்மரும் வஸிப்பார்கள். இவர்கள் யாவரும் ப்ரகட யோகினிகள் எனப்படுவார்கள்.

இரண்டாவது ஆவரணம் 'ஸர்வ ஆசா பரிபூரகம்' என்பது. பதினாறு தாமரை இதழ் வடிவாயமைந்தது. இவ்விதழ்களில் பதினாறு குப்த யோகினிகள் வாழ்வர்.

எட்டிதழ் வடிவான மூன்றாம் ஆவரணம் 'ஸர்வ ஸம்க்ஷோபணம்' எனப்படுவது. இது எட்டு குப்த-தர யோகினிகளின் வாஸ ஸ்தானம்.

நாலாவது ஆவரணம் பதினாலு முக்கோணம் கொண்டது. 'ஸர்வ ஸெளபாக்ய தாயகம்' எனும் இதில் பதினாலு ஸம்பிரதாய யோகினிகள் விளங்குவார்கள்.

பத்து முக்கோணம் கொண்ட 'ஸர்வார்த்த ஸாதகம்' என்பது ஐந்தாவது ஆவரணம். இது குலோத்தீர்ண யோகினியர் பதின்மரின் வாஸ ஸ்தானம்

ஆறாவது ஆவரணம் 'ஸர்வ ரக்ஷாகரம்' எனப்படும். இதன் பத்து முக்கோணங்களில் பத்து நிகர்ப்ப யோகினியர் உறைவர்.

ஏழாவது ஆவரணம் எட்டு முக்கோணம் அடங்கியது. 'ஸர்வரோக ஹரம்' எனப்படும் இதனில் ரஹஸ்ய யோகினியர் எண்மர் வாழ்வர்.

எட்டாவது ஆவரணம் ஒற்றையான நடு முக்கோணம். 'ஸர்வ ஸித்தி ப்ரதம்' எனப் பெயர் கொண்டது. இதன் மூன்று கோணங்களில் வாழும் அதி தேவதையர் மூவரும் அதி ரஹஸ்ய யோகினிகள் எனப்படுவர்.

இந்த மைய முக்கோணத்தின் பிந்துவான மையப் புள்ளியே தேவியின் ஸாக்ஷாத் இருப்பிடமான ஒன்பதாவது ஆவரணம். 'ஸர்வானந்த மயம்' என்ற பேரின்பப் பேர் பெற்றது. இங்கே 'பராபராதி ரஹஸ்ய யோகினி'யாக லலிதா மஹாத்ரிபுரஸுந்தரி பிரகாசிக்கிறாள்.

ஸ்ரீபுரம் நிர்மாணமானவுடன் நித்யஸ்ரீயும் நித்ய மங்களமும் கூடிய லலிதை அதன் மைய இருசான புள்ளியாம் பிந்துவில் மஹாராணியாய் எழுந்தருளினாள். தானாய் ஒளிரும் தனிப் பரம்பொருள் தாயாகி, நானா உலகாய், உயிராய் விளையாட்டில் விளக்கமுறுவதைக் காட்ட ஸ்ரீசக்ர மையத்தில் நமது தந்தை காமேச்வரனுடன் மையல் புரியும் காமேச்வரியாகத் திருக்கோலம் கொண்டாள். உளம் கசிந்து உபாஸிக்கும் உயிர்க் குலம் நானா பேதமும் நீங்கி, பின் அந்த சக்தித் தாய்க்கும் தந்தை சிவத்துக்குமுள்ள பேதமும் நீங்கித் தன்னையே மெய்ப் பொருளாக உணர்ந்து, அந்த உணர்வு பழுக்கப் பழுக்கத் தாய்-சேய் என்று அவளுக்கும் ஜீவருக்குமிடையேயுள்ள

பேதமும் நீங்கித் தானாய் அவளை உணர்ந்து, உய்ந்து, உவகை பெறவும் உளம் குளிர்ந்தாள்.

வெளிநின்ற நின்றிரு மேனியைப்
பார்த்தென் விழியு நெஞ்சும்
களிநின்ற வெள்ளம் கரைகண்ட-
தில்லை; கருத்தினுள்ளே
தெளிநின்ற ஞானம் திகழ்கின்ற(து);
என்ன திருவுளமோ?
ஒளிநின்ற கோணங்கள்
ஒன்பது மேவி யுறைபவளே!

(மங்களம்)

